# த மி ழோ சை

(இலக்கியம்)

செந்தமிழ்க காவலர்

**டாக்டர் அ. சிதம்பரநாதன்,** M.A., Ph.D.

தமிழ்த்துறைத் தலைவர்,

அண்ணாமலைப் பல்கலைக் கழகம்



## முன்னுரை

தமிழ்மொழியின் சிறப்பியல்புகள் பற்றியும், பெருமையுயர்வுகள்பற்றியும், பழந்தமிழர் மாண்புகள்பற்றியும், பெரியார் சிலர் தமிழிற்குச் செய்துள்ள தொண்டுகள் பற்றியும், இக்கால மக்கள் செய்யக்கூடிய பணிகள்பற்றியும் நான் எழுதிய கட்டுரைகள் சிலவற்றைத் தொகுத்துத் தருதல் வேண்டுமென நண்பர் பலர் கேட்டனர். புதிய நூல்களை அழகாக வெளிப்படுத்துவதில் மிக்க விருப்பம் உடைய நண்பர் திரு. இராமசாமி அவர்கள் இப்பணியை விரைவில் நிறைவேற்றுவதிற் பெரிய ஊக்கம் காட்டினர். அவர்க்கு என் நன்றி உரியது.

செந்தமிழ்ச்செல்வி, தமிழ்ப்பொழில், செந்தமிழ், ஈழகேசரி, தமிழ்நாடு, தாய்நாடு, தமிழ்த்தென்றல், புது வாழ்வு ஆகிய தாள்களில் முன்னர்த் தோன்றிய கட்டுரைகளிற் சில இந்நூல் வடிவில் வெளிவருகின்றன.

அச்சுப்படிகளை ஒப்புநோக்குவதில் என் நண்பர் திரு. N. இராமலிங்கம் செய்த உதவி மறவேன்.

அ. சிதம்பரநாதன்

## பதிப்புரை

"ஓர் இனத்தை அழிக்க விரும்பினால் முதலில் அந்த இனத்தின் மொழியை அழித்துவிடு".—இது அறிஞர் ஒருவரின் அறிவுரை. மொழி அழிந்துவிடுமானால் இனம் தானாகவே அழிந்துவிடும். எனவே சமூகம் வளர அந்தச் சமூகத்தின் மொழி அதற்கு உயிர்நாடியாகிறது. தனது இனம் வளரவேண்டும் என்ற எண்ணம், தன்னுடைய தாய்மொழி உலகமொழிகள் இடையில் மேனிலை பெற வேண்டும் என்ற ஆசை ஒவ்வொருவருக்கும் மிக இன்றியமையாதது.

ஒரு மொழிக்கு ஆபத்து நேருமானால் அதை எதிர்த்துச் சமாளித்துக் காக்கவேண்டியது அந்தந்த மொழியின் அறிஞர்களுடைய தலையாய கடமையாகும். நமது தாய் மொழியாம் தமிழ்மொழிக்குக் கேடு வந்துற்றபோதெல்லாம் தயங்காது ஆதாரங்களை வேலியாக்கி, மொழியைக் காத்து வருகிற மொழித் தலைவர்களிலே முதலிடம் பெற்றுள்ளவர் செந்தமிழ்க் காவலர் டாக்டர் சிதம்பரநாதனார் அவர்கள்.

சரியான ஆராய்ச்சியின்மையாலும் தற்காலிகமான தங்களது சுயநலத்தை எண்ணுவதாலும் சில மொழியா ராய்ச்சியாளர்கள், ஒரு மொழியை மற்றொரு மொழிக்குத் தாயென்றும், சேயென்றும், உறவு கற்பித்துத் தமிழுக்குக் களங்கம் செய்துவந்த போதெல்லாம் கிளர்ந்தெழுந்து ஆராய்ச்சி மருந்தைக்கொண்டு தமிழன்னைக்குச் சிகிச்சை

செய்து வந்துள்ள பெருமை முதல்டாக்டர் சிதம்பரநாதனார் அவர்களையே சாரும்.

இந்நூலில் உள்ள கட்டுரைகள் சில பழந்தமிழரின் மாண்பையும், வீரத்தையும், நாகரீகத்தையும், வணிகத் துறையிலே அவர்கள் அடைந்திருந்த முன்னேற்றத்தையும் ஆராய்ச்சியோடு எடுத்துக் காட்டுவன. எஞ்சியுள்ள கட்டுரைகள் அனைத்தும் தமிழுக்கு அவ்வப்போது ஏற்றப்பட்ட பிணிகளை நீக்க நமது டாக்டர் அவர்களால் தயாரிக்கப்பட்ட சஞ்சீவிகளாகும். இவைகளை ஏட்டுச் சுவடியாக்கி, நாட்டு மக்களுக்கு வழங்கும் பேறுபெற்றமைக்குப் பெருமைப் படுகிறோம். அனுமதி தந்த செந்தமிழ்க்காவலர் அவர்கட்கு எங்கள் நன்றி. இத்துறையில் பேராசிரியர் அவர்களின் நூல்கள் தொடர்ந்து எங்கள் வாயிலாக நாட்டிற்குள் நடமாட இருக்கின்றன என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறோம். சுவைத்துப் பயன்பெற வாசகர்களுக்கு வேண்டுகோளும் விடுக்கின்றோம்.

வணக்கம்.

புதுமைப் பிரசுரம்
20-3-56

**வீ. இராமசாமி**

## நினைவுக்கு :

# தமிழ்த் தாய்க்கு வணக்கம்

திரு. சுந்தரம் பிள்ளையவர்கள் தமிழ் மொழியினிடத்திலே மிக்க பற்றும் அன்பும் வைத்திருந்தனர் என்பது மனோன்மணீயத்திற்குப் பாயிரமாக அமைந்த தமிழ்த் தாய் வணக்கத்தை அவர் இயற்றியுள்ள வகையான் அறியப்படும். தமிழ்த் தாயின் அடியாகத் தோன்றியவை கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையாளமும் துளுவும் போன்ற மொழிகள் என அவர் மொழிந்துள்ளார். தமிழின் கன்னித் தன்மையையும் சிறப்பினையும் பாராட்டியுள்ளார். ஆரியம் இந்தியா தேசத்திற்கு வருவதற்குமுன் தமிழே முதல்மொழியாக இந்தியா யாங்கணும் பரவியிருந்தது என்பது அவரது கருத்து. திருவாசகத்திடத்திலும் அவர் வைத்த பெருமதிப்பு அவருடைய வாழ்த்துச் செய்யுட்களால் அறியப்படுகின்றது. எல்லாக் குலத்தவர்க்கும் பொதுவாய் ஒரு நீதி வகுத்த நூல் திருக்குறளாகும் என்றும், அதனால் அது மநு முதலிய வடமொழி நூல்களினின்று வேறுபட்டுச் சிறந்து மிளிர்கிறது என்றும் அவர் கூறியுள்ளார் என்பது,

> "வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன் குணர்ந்தோர்கள்
> உள்ளுவரோ மநுவாதி யொருகுலத்துக் கொருநீதி"

என்றமையால் பெறப்படும். இந்தியாவில் உள்ள மொழிகளில் நாமகளுக்கு இரு கண்கள்போல் அமைந்துள்ளவை

வடமொழி, தென்மொழி என்பாரை நோக்கி, இவ்விரண்டு மொழிகளில் எது வலக்கண், எது இடக்கண் என இகலுதல் பொருந்தாது என்று அவர் கூறக் கருதினர். ஆயினும், நாமகளின் வலக்கண்தான் வடமொழியென விளம்பிய மக்கள் பலராக அவர் காலத்தில் காணப்பட, அதனால் அக்கூற்று தவறுடைத்தாகும் என்று நிறுவவேண்டும் என்ற எண்ணம் அவருக்குத் தோற்றிற்று. அதனால் நாமகள் கீழ்த்திசையை நோக்கி உட்கார்ந்திருப்பதாகப் பலகோயில்களிலேயும் நாமகளின் வடிவம் நிறுவப்பட்டிருத்தல் உண்டு என்பதை யாவரும் அறிவார்கள். கிழக்கு நோக்கி இருக்கும் நாமகளின் வலப்பக்கத்திலன்றோ தென் திசை இருக்கிறது, இடப்பக்கத்தில் அன்றோ வடதிசை இருக்கின்றது? ஆதலால் தென் மொழியாகிய தமிழ்மொழி நாமகளின் வலக்கண் ஆகும் என்றும், வடமொழியாகிய சமஸ்கிருதம் இடக்கண் ஆகும் என்றும் அழகுபட நிறுவிய பெருமை பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கட்கு உரியது. அன்றியும், பொருளறிய மாட்டாத வடமொழிப் பாடல்களைக் கூறுதலைக்காட்டிலும் பொருள் நுட்பத்தோடு நன்றாக அறிந்துகொள்ளக்கூடிய தமிழ்மொழிப் பாடல்கள் எவ்வளவு சிறந்தன என்பதை எடுத்துக்கூறக் கருதிய பிள்ளையவர்கள்,

> "மனங்கரைத்து மலங்கெடுக்கும் வாசகத்தில் மாண்டோர்கள்
> கனஞ்சடையென் றுருவேற்றிக் கண்மூடிக் கதறுவரோ,"

எனக் கூறினர். இவ்வாறு ஏறத்தாழ அறுபது ஆண்டுகளுக்கு முன்னால் கூறுவதென்றல் எளிதன்று.

மனோன்மணீயத்தில் காணப்படுகின்ற சுந்தரம்பிள்ளையவர்களுடைய நடையினிமை பாராட்டத்தக்கது. போர்க்களத்தை நோக்கிச் செல்லுகின்ற படை வீரர்களுடைய

திறத்திற்குத் தக்கவாறும், அடியிடுதலுக்குத் தக்கவாறும் அவர் செய்யுட் பகுதி ஒன்று வீரத்தோடு அமைந்துள்ளது.

> " நந்தாய்தமர் நங்காதலர்
> நஞ்சேய்பிறர் நந்தாவுரை
> நந்தேயமேல் வந்தேநனி
> நொந்தாழ்துயர் தந்தேஇவண்
> நிந்தாநெறி நின்றாரிவர்
> .......... .. . ....... . .. .... .
> ............... .. .. . .. .........
> ... .. . .................. ..........
> குடிப்போம்வழி தடுப்போம்பழி
> முடிப்போமினி நடப்போம்நொடி,"

என்ற ஜீவகன் சொற்களில் வீரத்திற்குரிய மெய்ப்பாடு இனிது அமைந்திருப்பதை ஒருவர் காணலாம்.

ஒருவர்க்குள்ள மகிழ்ச்சியாகிய மெய்ப்பாட்டினை விளக்குவனவாகக் காட்டுகின்ற பகுதிபோல் அடியில் வரும் அடிகள் அமைந்துள்ளன. [illegible] ஒருநாள்,

> " வம்மின் ' வம்மின் ' வீரரே ' நாமினி
> யிம்மெனு முன்னமவ் விந்திர லோகமுஞ்
> செல்லுவம் ' ஏறுமின் ' செல்லுவம் '' எனப்பல
> கொடிக்கரங்காட்டி யழைப்பதுங் காண்டி— "

என்று ஜீவகனிடம் கூறியதாக அவர் எழுதியுள்ளதைக் குறிப்பிடலாம்.

சுந்தரம் பிள்ளையவர்கட்கு உள்ள தமிழ்ப்பற்று ஜீவகனுடைய படைகள் திரண்டதாகக் கூறுமிடத்து நன்றாக வெளிப்பட்டுள்ளது. ஜீவகன் படைவீரர்களை நோக்கி,

> " விந்தம் அடக்கினோன் தந்தநற் றமிழ்மொழி
> தற்சுதந் தரமறும் அற்பர்வாய்ப் படுமோ?"

என்று கூறியபொழுது படைவீரர்கள் "தமிழ்மொழி வெல்க, வெல்க" என உரக்கக் கூவினர் என்கிறார். மேலும் ஜீவகன் படைவீரர்களை ஊக்கப்படுத்தும் நோக்கத்தால் "நீவீர் நும்முடைய அன்னையர் தாலாட்டுங்கால் கூறிய நும்முடைய முன்னோர் பலருடைய தீரச்செயல்களையும் வீரச்செயல்களையும் கேட்டுக் கண் துயிலாமல் இருந்த காலங்களை நினைவு கூர்ந்து செயலாற்றுதல் வேண்டும்" என்று கூறினான். அவ்வாறு கூறியபோதும் படைஞர் களுக்கு வண்டமிழ் மொழியின் திறத்தையும் நினைவுப் படுத்தினான் என்று எழுதியுள்ளார். படைவீரர்களின் பெயர்கள்கூட நல்ல தமிழ்ப் பெயர்களாக அவர் அமைத்தி ருத்தல் அறியத்தக்கது. ஒருநாள் நாராயணன் படைவீரன் ஒருவனை நோக்கி 'உன் பெயர் முருகன் அன்றோ' என்று கேட்க, அவன் 'ஆம் என்றான்' என்றும், மற்றொருவன் 'தன் பெயர் சாத்தன்' எனச் செப்பினான் என்றும் எழுதி யுள்ளார்.

திரு. சுந்தரம் பிள்ளையவர்களுடைய செய்யுளில் பல பகுதிகள் செவிக்கு இனியனவாகவும் சிந்தைக்கு இனியன வாகவும் அமைந்துள்ளன. உதாரணமாக,

"ஏதோ வொருவன் சூதா ஏவிய
தூதால் வந்ததே யீதோ பெரும்போர்"

என்ற கருணாகரர் சொற்களைக் குறிப்பிடுதல் கூடும். அன்றியும்,

"ஒருவார மொருமாத மொருவருட காலம்
ஓயாம லுன்னியழிந்தேன். உருவங் காணேன்."

என்று சிவகாமி கூறியதையும்,

" இவ்விடமு மவ்விடமு மெவ்விடமு மோடி
இதுவரையுந் தேடியுமென் னதிபரைக்கண் டிலனே.
எவ்விடம்யான் நண்ணவினி எவ்விடம்யான் உண்ண ?
இக்காய மினியெனக்கு மிக்கஅரு வருப்பே."

என்று அவள் கூறியதையும் குறிப்பிடலாம். இந்தப் பாடற் பகுதிகள் எளிய நடையில் அமைந்திருந்தாலும், தலைவனைப் பிரிந்திருந்த தலைமகள் ஒருத்தியுடைய துயரத்தைத் திறம்படப் படம்பிடித்துக் காட்டுகின்றன என்று கூறுதல் பொருந்தும்.

# மொழியன்னை

"பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன் இருந்தபடி யிருப்பதுபோற்
கன்னடமுங் களிதெலுங்குங் கவின்மலையா ளமுந்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்
ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயன்மறந்து வாழ்த்துதுமே"

(மனோன்மணீயம்—தமிழ்த்தாய் வாழ்த்து)

**தொ**ன்மையான மொழிகளென்று உலகின்கண் எண்ணப்படுவன தமிழ், எபிரேயம், எகிப்தியம், கிரேக்கம். பெர்சியன், சமக்கிருதம், இலத்தீன் முதலாய சிலவேயாம். அவைதம்முள் எபிரேயம், எகிப்தியம், சமக்கிருதம், இலத்தீன், கிரேக்கம் என்பன பேச்சு வழக்கு முன்னரே இழந்தன. எஞ்சியவற்றுள் பெர்சியன் மொழியைப் பேசுகின்றவர் தொகை எண்பது நூறாயிரத்திற்குமேல் இல்லை. 1931-ல் தமிழ்பேசிக்கொண்டிருந்தவர் தொகை ஏறத்தாழ இரண்டரை கோடி என அறிகின்றோம். இதனால் அறியப்

படுவது தமிழ் தொன்மையதே யாயினும் இன்றும் பேச்சு வழக்கிற் பலராற் பல இடங்களிற் பயிலப்படும் பெற்றி வாய்ந்ததென்பது. அதற்குக் காரணம் அம் மொழியின் சிறப்பியல்புகளும் பிறமொழித் தொடர்பால் தம் மொழியைக் கைநெகிழ விடலாகாது என்ற தமிழர்தம் உறுதியுமாம். அதனாலன்றோ, **பேராசிரியர் சுந்தரம்பிள்ளை** "ஆரியம் போல் உலகவழக்கு அழிந்தொழிந்து சிதையாத் திறம்" தமிழினது என்று செப்பிப் பாராட்டியது! தமிழ்ச் சொற்களின் பகுதியென்று சொல்லப்படுகின்ற அடிவேர் எல்லாம் முழுச் சொற்களாகுங்கால் சிறிதளவே மாறுதல் அடைகின்றன. நட வா மடி விடு கூ வே வை நொ போ வெள முதலாய பகுதிகள் எல்லாம், நடக்கிறான் வந்தான் மடிவான் விட்டான் கூவினான் வேகும் வைத்தாள் நொந்தேன் போயிற்று வெளவின முதலாய சொற்களில் அடையும் வேறுபாடு தவச்சிறிது என்பது யாவர்க்கும் புலனாகக் கூடியதொன்று. சமக்கிருதம் முதலாய உருவுதிரியும் மொழிகளில் சொற்களின் பகுதிகள் எனப்படுவன அடையும் மாறுதலுக்கு எல்லையில்லை. காட்டாக, "ஜகாந" என்னுஞ் சொல்லில் "ஹந்" என்னும் பகுதியும், "ஆர்ய" என்னுஞ் சொல்லில் "ரு" என்னும் பகுதியும், அடைந்துள்ள மாறுதலை நோக்குக. தமிழ் ஒட்டியற் பண்புடைய சொற்கள் நிரம்பியதாய், அசையசையாக எளிதில் உச்சரிக்கக்கூடிய சொற்கள் மலிந்ததாய், பகுதி இன்னதென்று எளிதில் உணரக்கூடிய புணர்ச்சிவகையை யுடையதாய் இருப்பதாலே சீருஞ் சிறப்புமுடைய மொழியாக அறிஞர்களாற் கருதப்படுகிறது. தொன்றுதொட்டே இலக்கண இலக்கிய நிலைகளை எய்திவிட்டபடியால் தமிழ்மொழி தன் சொற்களின் பழைய வடிவங்களை இன்றுகாறும் பெற்றிருக்கிறது. அதனால், இம்மொழி கட்டிளமையோடு திகழ்கிறது

என்று மொழிநூற் கலையறிஞர் கால்டுவேலர் எழுதினார்*. அதனாலன்றோ பேராசிரியர் சுந்தரம்பிள்ளையவர்கள் "சிதையா உன் சீரிளமைத் திறம் வியந்து வாழ்த்துதும்" எனப் பாடியதென்க.

கன்னடமுங் களிதெலுங்குங் கவின் மலையாளமுந் துளுவும் பிற சிலவும் பெற்றெடுத்த அன்னை தமிழ் என அவர் பகர்ந்தார். ஒரு மொழி மற்றொரு மொழியினின்று பிறந்தது என்றுதல், சில மொழிகள் புராதன மொழியினின் றும் பிறந்தன என்றுதல் கூறத் தக்கன எனத் தெரியின், அவ்வொரு மொழி மற்றொரு மொழியின் புதல்வி யென்றும் அச் சிலமொழிகள் தம்முட்டாம் உடன்பிறந்த நங்கையர் என்றும் உருவகப் படுத்தி யுரைக்கப்படும். வேதகாலச் சமக்கிருதத்தின் புதல்வியர் பாளிபோன்ற பிராக்கிருதங் கள் என்றும், அப் பிராக்கிருதங்கள் வழித்தோன்றிய அஸ்ஸாமியம், வங்காளம், ஹிந்தி, மராத்தியம், குஜராத்தியம் முதலானவை உடன்பிறந்த நங்கையர் என்றும் உரைக் கப்படும். தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழி கள், இன்று காணப்படும் நிலையில் சமக்கிருதத்தின் வழி வந் தனவோ என ஆராய்ச்சியில்லாரால் கருதத் தக்கனவேனும், உண்மையில் அவையெல்லாம் தமிழொடு நெருங்கிய தொடர் புடையன என்பதைச் சில சான்றுகளால் நிறுவலாம்.

ஒரு மொழியின் சொற்களாக உள்ளவற்றுள் மக்கள் வாழ்க்கைக்கு அடிப்படையான கருத்துக்களையும், இன்றி யமையாத கருத்துக்களையும், எல்லா மக்களாலும் எளிதில் அறியக்கூடிய கருத்துக்களையுந் தெரிவிக்குஞ் சொற்களே அம்மொழி பிறிதொரு மொழியொடு தொடர்புடையதா அன்றா என்பதைக் காட்ட வல்லன. எல்லா மக்களாலும்

* "These languages (=Dravidian languages) present in consequence the appearance of fresh youth" (Comp. Grammar P. 194.)

எல்லா இடங்களிலும் நாடோறும் வழங்கப்படுஞ் சொற்களாகக் காணப்படுவன நான் நீ என்பன போன்றவும், ஒன்று இரண்டு என்பனபோன்றவும், நிலம் நீர் என்பன போன்றவும், உண் வா என்பன போன்றவும், தாய் தந்தை என்பன போன்றவும், தலை கால் என்பன போன்றவும் ஆம். சிறப்புடைய மொழியொன்று இப்பொருள்களைக் குறிக்க வேறொரு மொழியினின்று சொற்களைப் பெரும்பாலும் கடன்வாங்குதல் இல்லை. அதனால், இப்பொருள்களைக் குறிக்குஞ் சொற்களால் ஒத்தன எனக் காணப்படு மொழிகள் ஓரினத்தன என்று கூறும் பெற்றிய. அம்முறையான் நோக்கின், தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு, துளுவம், குடகு, தோடம், கோடம், கோண்டு, கூய், குறுக்கு, மாலர் ஆகிய மொழிகளனைத்தும் ஓரினத்தன என அறியப்படும். இவற்றுள் முன்னைய நான்கும் எழுத்துடைமையும் இலக்கியமுடைமையும் ஆகிய சிறப்புற்றவை. பின்னைய எட்டனுள் துளுவம் கூய் ஒழிந்த பிற, எழுத்துப் பேறும் இலக்கியப் பேறும் அறவே உடையனவல்ல. துளுவம் கன்னட வெழுத்துக்களாலும் கூய் ஒரியா எழுத்துக்களாலும் எழுதப்படுவனவாக, எஞ்சிய பிற ஆங்கில எழுத்துக்களால் இக்காலை எழுதப்படுகின்றன. கருத்து என்னெனின், இவை பேச்சு வழக்கிலொன்றே உள்ள மொழிகள் என்பது. இனி, இலக்கிய இலக்கண வரம்புகளெய்திய மொழி நான்கிலும், அடிப்படையான கருத்துக்களைத் தெரிவிக்குஞ் சொல்வடிவங்கள் எங்ஙனம் ஒத்துள என்பதைக் காண்பாம்.

தன்மை யொருமைப் பெயராக யான் நான் என்பன தமிழில் இருத்தல்போல மலையாளத்தில் ஞான் என்பதும், தெலுங்கில் ஏனு நேனு என்பனவும், கன்னடத்தில் ஆனு நானு என்பனவும் வழங்கியதும் வழங்குவதும் உண்டு.

நண்டு ஞெண்டெனத் திரிதல் போலத் தமிழ் நான் மலையாளத்தில் ஞான் எனத் திரிந்திருக்கவேண்டும். தமிழ் யாறு தெலுங்கில் ஏறு எனத் திரிதல்போலத் தமிழ் யான் பழந் தெலுங்கில் ஏனு என மாறியிருக்கவேண்டும். யாறு யானை யாடு என்பன ஆறு ஆனை ஆடு என மாறுதல்போலத் தமிழ் யான் பழங் கன்னடத்தில் ஆனு என்ற வடிவத்தைப் பெற்றிருக்கவேண்டும். இலக்கியப் பேறு எய்தாதவை என்று முற்கூறிய மொழிகளில் எல்லாம் என் ஆனு நானு நா ஆகியவற்றுள் ஒன்றே வழங்குகிறது இம்மொழிகளில் ஒன்றிலேதானும் சமக்கிருத அஹமாதல் அஸ்மத் ஆதல் இவற்றின் திரிந்த வடிவமாதல் வழங்காமை குறிப்பிடற் பாற்று. முன்னிலையொருமையில் "நீ" என்பதே தமிழிலும் மலையாளத்திலும் வழங்க, அதனொடு ஒத்த நீவு என்பது தெலுங்கிலும், நீனு என்பது கன்னடத்திலும் வழங்குகின்றன. இப்பொருளுடைய சமக்கிருத "த்வம்" என்பதோ அதனை ஒத்த சொல் பிறிதொன்றோ இம்மொழிகளில் வழங்குதலில்லை. படர்க்கை யொருமையைக் குறிக்கத் தமிழிலும் மலையாளத்திலும் அவன் என்பதே வழங்குவதாக, அவனு என்பது கன்னடத்தில் வழங்குகின்றது. இப்பொருளுடைய தெலுங்கச் சொல் வாடு என்பது வேறுபட்டதுபோற் காணப்படினும், உண்மையில் அது "அவன்" என்பதன் வழியாக வந்ததேயாகும். மொழிக்கு முதலில் உள்ள ஓரெழுத்து நிலைமாறி வேறிடத்திற் குப் பெயருமாறுற் சேருகின்ற இடத்திலே நீடலுடைத்து என்பது, மொழிநூற்கலை யறிஞர் கருத்து. உதாரணமாக, அவர் என்னுஞ் சொல் உகரச் சேர்க்கை விருப்பத்தால் அவரு என ஆவதன்கண் உள்ள முதலெழுத்தாகிய அகரம் முன்னிலையிடத்தின்கண் சேருங்கால் "வாரு" என்றாகும். அம்முறைப்படி உலகமொழிகள் பலவற்றில் மாறுதல்

நிகழ்வதுண்டு. அதற்குக் காரணம், பின்னால் உச்சரிக்க வேண்டிய எழுத்து இன்னதென்று நினைக்கின்ற மனம் அதனை முன்னரே உச்சரித்துவிடுமாறு செய்வதும், ஓரெழுத்தை இழந்ததற் கீடாகப் பிறிதோரெழுத்தை நீட்டிவிடுமாறு செய்வதுமாம்* அதனால், அவனு என்பதனோடொக்கும் அவடு என்னுஞ் சொல் ஒரு காலத்தில் வழங்கியிருக்கக் கூடியது "வாடு" எனத் தெலுங்கில் திரிந்தது வியப்பன்று.

ஒன்று முதலான எண்ணுப் பெயர்கள் இம் மொழிகளிற் பெரும்பாலும் ஒத்தவடிவங்களைப் பெற்றிருப்பது நோக்கத்தக்கது. தமிழ்க் கன்று மலையாளத்திற் கன்னு ஆதல்போல ஒன்றென்பது ஒன்னு என அம் மொழியில் மாறிற்று. ஒண்டு என்று தெலுங்கில் வழங்குவது இன்றைக்கு என்பது இண்டைக்கு என்று யாழ்ப்பாணத்தில் வழங்குவதோடு ஒக்கும். கன்னடத்தில் ஒந்து என்று காணப் படுகிறது. தமிழ் இரண்டு என்பதோடு ஒத்த ரெண்டு என்ற வடிவு மலையாளத்திலுந் தெலுங்கிலும் வழங்குவதாக, எரடு என்பது கன்னடத்தில் வழங்குகிறது. இலை என்னுஞ்சொல் எலை என்று வழங்குதல்போல இரண்டு எரண்டு ஆதல் கூடும். பூண்டு பூடு என்பனவும், கூண்டு கூடு என்பனவும் ஒவ்வொரு சொல்லின் வெவ்வேறு வடிவாதல்போல எரண்டு எரடு என்பன சொல்லொன்றின் இருவேறு வடிவம் எனக.

பின்வரும் அட்டவணை கொண்டு இந்நான்கு மொழிகளிலும் வழங்கும் பிற எண்ணுப் பெயர்களின் பொதுத் தன்மையை அறியக்கூடும்.

---

* இதனை Compensatory lengthening என்பர்.

| தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் |
| --- | --- | --- | --- |
| மூன்று | மூன்னு | மூடு | மூரு |
| நான்கு அல்லது நாலு | நான்கு அல்லது நால் | நாலுகு | நால்கு அல்லது நாலு |
| ஐந்து அல்லது அஞ்சு | அஞ்சு | ஐது | ஐது |
| ஆறு | ஆறு | ஆரு | ஆரு |
| ஏழு | ஏழு | ஏடு | ஏளு |
| பத்து | பத்து | பதி | ஹத்து |
| நூறு | நூறு | நூரு | நூரு |

இவற்றுள், கன்னடத்திற் காணப்படும் நால்கு என்ற ஒரு வடிவம் பழந்தமிழிலக்கியத்தில் நால்கு என்றே காணப் படுவது குறிப்பிடற்பாற்று. "பால்புரை புரவி நால்குடன் பூட்டி" என்பது பொருநராற்றுப்படையில் வரும் ஓர் அடி.

"வளைகண் டன்ன வாலுளைப் புரவி
துணைபுணர் தொழில நால்குடன் பூட்டி"

எனப் பெரும்பாணாற்றுப்படையிலும் வந்துள்ளது. தமிழ்க் கோழி தெலுங்கிற் கோடி என்றும், கன்னடத்திற் கோளி யென்றும் ஆவதுபோலத் தமிழ் ஏழு ஏடென்றும் ஏளென் றும் ஆயிற்று. பழங் கன்னடம் மொழிமுதற் பகரத்தைச் சிதைக்காது வைத்திருந்ததாக, இக்காலக் கன்னடமோ

பெரும்பாலும் ஹகாரமாகத் திரித்துவிடுகிறது. தமிழ்ப் பசுவும் பாலும் ஹசுவும் ஹாலுவும் ஆகத் திரிவதை நிகர்த்துத் தமிழ்ப் பத்துக் கன்னடத்தில் ஹத்து எனத் திரிந்து விட்டது. எட்டு என்று தமிழிலும் மலையாளத்திலுங் காணப்படுவதற்கேற்ப, எண்டு என்று கன்னடத்திலும் எனிமிதி என்று தெலுங்கிலுங் காணப்படுகின்றன. இவ்வெண்ணின் பண்டைய வடிவம் "எண்" என ஊகிக்கப் படுவதால், அது இந் நான்கு மொழிகளிலும் ஒவ்வொருவாறு காணப்படுகிறதென்க. தமிழிலும் மலையாளத்திலும் "ஒன்பது" வழங்குவதாக, கன்னடத்தில் "ஒம்பத்து" வழங்குகின்றது. தெலுங்கில் வழங்கும் தொம்மிதி என்பதோடு பழந்தமிழில் வழங்கிய "தொண்டு" என்பது ஒருவாறு ஒத்திருக்கவில்லையா?

> "பாழெனக் காலெனப் பாகென ஒன்றென
> இரண்டென மூன்றென நான்கென ஐந்தென
> ஆறென ஏழென எட்டெனத் தொண்டென
> நால்வகை யூழியெண் நவிற்றுஞ் சிறப்பினை"

என்ற பரிபாடற் பகுதியிற் கடுவனிளவெயினனார் ஒன்பதைக் குறிக்கத் தொண்டு என்ற சொல்லை ஆண்டதைக் காண்க. மேலே காட்டிய ஒன்றுமுதற் பத்துகாறும் உள்ள வடிவங்கள் சமக்கிருத எண்ணுப் பெயரோடு ஒவ்வா. ஏக, த்வ, த்ரி, சதுர், பஞ்ச, ஷஷ், சப்த, அஷ்ட, நவ, தச என்ற அப் பத்துப் பெயர்களில் பஞ்ச என்பதோடு தமிழ் அஞ்சு என்பதும் அஷ்ட என்பதோடு எட்டு என்பதும் ஒருவாறு ஒப்புமையுடையபோலத் தோற்றினும், அவ்வொற்றுமை போலியென்க. அஞ்சு என்பது ஐந்து என்பதன் திரிபே யாதலாலும், ஐ என்பதே அச் சொல்லின் அடிவேர் ஆதலாலும், பஞ்ச என்பதோடு அஃதொவ்வாதென்க. எட்டென்பதன்கண்ணே எண்ணென்பதே பகுதியாதலா

லும் டகரம் ஆண்டு எய்தியது பிற்காலத்திலாதலாலும், அஷ்ட என்பதோடு அஃது றழாதென்க. தமிழ் நூறென்ப தோடு சமக்கிருத சதம் பொருந்தாது என்று எடுத்துரைக்க வேண்டியதில்லை.

இனி, நிலம் நீர் தீ காற்று வான் ஆகிய அடிப்படை யான பொருள்களைக் குறிக்குஞ் சொற்கள் தமிழினின்று மேற்கூறிய மொழிகளுக்குச் சென்றிருக்கக்கூடும் என்பதற் குரிய சான்று காண்போம். கீழ்வரும் அட்டவணை சான்று.

| தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் |
|---|---|---|---|
| நிலம் | நிலம | நெல | |
| மண் | மண்ண | மந்நு | |
| புடவி | | | பொடவி |
| நீர் | நீர் (வெள்ளம்) | நீள்ளு | நீரு |
| தீ | தீ | | தீ |
| நெருப்பு | | நிப்பு | (பெங்கி) |
| கால் | | காலி | காலி |
| காற்று | காட்ட | | |
| வான் | | | பான் |
| வானம் | வானம் | | பானு |
| விண் | | மிந்நு | |

சிலர் நிலையென்பதை நெலை என்று கூறுவது போல வும், புடவை யென்பதைப் பொடவை யென்று பேசுவது போலவும், தமிழ் நிலம் என்பதை நெல என்று தெலுங்க ரும் புடவியென்பதைப் பொடவி என்று கன்னடியரும் வழங்குவர் என்க. தெலுங்கு "நீள்ளு" என்பது நீருலு என்பதன் திரிபாய் இருத்தல் கூடும். நீரு என்பதன் பன் மைப்பெயர் நீருலு என ஒரு காலத்து வழங்கியதாக, நீருலு நீருளு என மாறி இப்பொழுது நீள்ளு என வழங்குகிற

தென்க. ரகர ழகரங்கள் சொல்லின் இடையில் வருவன அடுத்துவரும் மெய்யெழுத் தொலியோடிசைந்த ஒலியைப் பெறுமென்பது மொழிநூலார் கண்டது. தமிழ் இருபது கன்னடத்தில் இப்பது என மாறுவதும், எருமை "எம்மெ" என ஆவதும், தமிழ்ப் பொழுது தெலுங்கிற் "பொத்து" எனத் திரிவதும் இதனால் என்க. இக்காரணத்தாலே "நீருளு" என்று ஒருகாலத்து வழங்கியிருக்கக்கூடியது நீள்ளு என இக்காலத் தெலுங்கில் வழங்குகின்றது. தமிழ் நெருப்பு "நெப்பு" "நிப்பு" எனத் தெலுங்கில் வழங்குவது, பருப்பு "பப்பு" எனத் திரிந்து வழங்குவதைப் போன்றது. ஒரு சொல்லின் இடைப்பகுதியிலும் கடைப் பகுதியிலும் றகர டகரங்கள் தம்முள் தாம் மாறுதலுண்டு. உதாரணம், கெடுத்து என்னும் பொருளுடைய தெலுங்கச் சொல், "செறுச்சு" என்பது "செடுச்சு" என்பதன் திரிபு (தெலுங்குச் செடு = தமிழ்க் "கெடு"). அதுபோலவே தமிழ்க் காற்றும் மலையாளக் "காட்டா" என்பதும் ஒரு சொல்லின் வெவ்வேறு வடிவங்கள் என்க. வாழை "பாளெ" என்றும், வாழ் "பாளு" என்றும் வழங்குதல் போன்றே தமிழ்ச் சொல்லாகிய "வான்" என்பதே கன்னடத்தில் பான எனவும், பானு எனவும் வழங்குகின்றது. வானம் மானம் என்றும், வண்ணான் மண்ணான் என்றும், யாழ்ப் பாணத்தில் வழங்குவன விண்ணு மிந்து என்று வழங்கு கின்றவாற்றைப் புலப்படுத்தும். மண் கண் எனுந் தமிழ்ச் சொற்கள் தெலுங்கில் மந்நு கந்து என்று வழங்குகின்ற வாறேபோல மின் (விண்) என்றது மிந்நு என மாறி வழங்கியிருக்கக்கூடும்.

உண்டல் முதலான அடிப்படையான வினைகள் சில வற்றை இம்மொழிகள் ஒத்த சொற்களாற் குறிக்கின் றனவா என்பதை ஆராய்வோம். தின், வா, ஈ, போ, நகு,

நட, நில், தெரி முதலாய அடிகளிற் பிறக்குஞ் சொல்வடிவங்களே இம்மொழிகளில் உண்டல் வருதல் கொடுத்தல் போதல் நகுதல் நடத்தல் நிற்றல் தெரிதல் ஆகிய தொழில்களையுணர்த்துகின்றன. கீழ்வரும் அட்டவணை அவ்வடிவுகளைக் காட்டும் :—

| தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் |
|---|---|---|---|
| தின், உண் | தின்னு, உண்ணு | திநு | திந்நு |
| வா | வரு | வச்சு | பா, பரு |
| ஈ, தா, கொடு | தரு, கொடுக்க | ஈச்சு | ஈ, கொடு |
| போ | போ | போவு | ஹோகு |
| நகு, சிரி | சிரி | நவ்வு | நகு |
| நட | நடக்க | நடுச்சு | நடெ |
| நில் | நில்க | நிலுச்சு | நில்லு, நிந்து-கொள்ளு |
| தெரி | திரி | தெலி | திளி |

தாய்தந்தையரைக் குறிக்குஞ் சொற்களும், வீடு மாடு என்பவற்றைக் குறிக்குஞ் சொற்களும், உப்பு இருப்பு இவற்றைக் குறிக்குஞ் சொற்களும், கல் மலை மரம் பூ ஆகியவற்றைக் குறிக்குஞ் சொற்களும், பொழுது பெயர் உண்டு இல்லை ஆகியவற்றைக் குறிக்குஞ் சொற்களும், அம்பு படகு எலும்பு குருதி ஆகியவற்றைக் குறிக்குஞ் சொற்களும், யானை பாம்பு மீன் முட்டை என்பனவற்

றைக் குறிக்குஞ் சொற்களும் இம்மொழிகளில் ஒத்து வடிவம் பெற்றிருத்தல் தமிழ்மொழியின் தாய்மையையுந் தொன்மையையுங் காட்டும் என்க.

| தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் |
|---|---|---|---|
| தாய், ஆய், அம்மை, தள்ளை | அம்மா, தள்ளா | அம்மா, தல்லி | தாயி அம்மா |
| தந்தை அப்பன் | அப்பன் (அச்சன்) | தண்டிரி அப்பா | தந்தெ அப்பா |
| வீடு, மனை, இல் | வீடு, இல்லம் | இல்லு | மனெ |
| ஆ (= மாடு) | ஆ | ஆவு | ஆவு |
| உப்பு | உப்பு | உப்பு | உப்பு |
| இரும்பு, கரும்பொன் | இரிம்பு | இநுமு | கப்பிந |
| கல் | கல்லு | கல்லு | கல்லு |
| மலை குன்று | மல | கொண்ட | மலெ |
| செடி, மரம் | செடி, மரம் | செட்டு, மராநு | கிட மர |
| பூ | பூ | பூவு | ஹூவு |
| பொழுது | போள் | பொத்து | ஹொத்து |
| பெயர், பேர் | பேர் | பேரு | (பெசரு) ஹெசரு |
| ஆம், உண்டு | அதே, உவ்வ | அவுநு | ஹவுது |

| தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம |
| --- | --- | --- | --- |
| இல்லை | இல்ல | (இலது) லேது | இல்ல |
| அம்பு | அம்பு | அம்பு | அம்பு |
| படகு, வள்ளம், தோணி | வள்ளம் தோணி | படவ | தோணி |
| என்பு எலும்பு | எல்ல | எமுக | எலுமெ எலுவு |
| நெய்த்தோர், குருதி, செந்நீர் | சோர | நெத்துரு | நெத்துரு கெந்நீரு |
| யானை, ஆனை | யானை ஆன | யேனுகு | ஆனெ |
| பாம்பு | பாம்பு | பாமு | (பாவு) ஹாவு |
| மீன் | மீன் | மீநு | மீநு |
| முட்டை | முட்ட | குட்டு | மொட்டெ |

மேலும், மலையாளம், தெலுங்கு, கன்னடமாகிய மொழிகளில் தலை கை கால் கண் காது பல் முதுகு முதலான வற்றைக் குறிக்குஞ் சொற்கள் அவற்றைக் குறிக்குந் தமிழ்ச் சொற்கள் அனையவாய் உண்மை அறியற்பாற்று :

| தமிழ் | மலையாளம | தெலுஙகு | கன்னடம் |
| --- | --- | --- | --- |
| தலை | தல | தல | தலெ |
| கை | கை | செய்யி | கயி |

| தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் |
| --- | --- | --- | --- |
| அடி, கால் | அடி | அடுகு, காலு | அடி |
| கண் | கண்ணு | கந்நு | கண்ணு |
| காது<br>செவி | காது<br>செவி | செவி | கிவி |
| பல் | பல்லு | பல்லு | (பல்லு)<br>ஹல்லு |
| முதுகு,<br>வென் | முதுகு | பெந்நு | பெந்நு |

இதுகாறும் பார்த்தவாற்ருல், மக்கள் எல்லாம் பொதுவாக எந்நாட்டினும் அறிந்திருக்கவேண்டிய அடிப்படையான கருத்துக்களையும் பொருள்களையுங் குறித்தற்குரிய சொற்களுக்காக மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகள் தமிழிற்குக் கடன்பட்டனபோல் தோற்றுகின்றன என்பது அறியப்படும். அவற்றைப்போலவே முன் எண்ணப்பட்ட பிற எட்டு மொழிகளும் தமிழொடு தொடர்புடையன என்க. அதனுல் அன்றே சுந்தரம்பிள்ளையவர்கள் "கன்னடமுங் களிதெலுங்குங் கவின் மலையாளமுந் துளுவும் உன்னுதரத்து உதித்தெழுந்து" என இயம்பினர் என்க. தேன்போன்றினிய மொழி என்று இயம்பப்படுந் தெலுங்கிற்குக் "களி" யென்ற அடைமொழியும், மலையும் ஆழமுமாய்த் தோன்றி எழிலொடு விளங்குமொரு நாட்டின்கண்ணே வழங்கும் மொழியாகிய மலையாளத்திற்குக் "கவின்" என்ற அடைமொழியும் வைத்துப் பாவினை அவர் யாத்தது நினைக்குந்தொறும் இன்பம் பயப்பது.

மாதா பிதா என்ற சொற்களும், கிரஹம் பசு என்ற சொற்களும் இம் மொழிகளில் இந்நாளிற் சிலவேளை

வழங்குகின்றமை கொண்டு இம் மொழிகள் சமக்கிருதத்தி னின்று தோன்றியன என்று கூறுதல் சாலாது. தமக் கெனச் சொல்லின்றி வடமொழிச் சொற்களை ஆளவேண்டு வது இன்றியமையாததெனை இருந்தாலன்றே, வடமொழி யின்றித் தமிழ் முதலிய மொழிகள் இயங்கா எனக் கூற முன் வரலாம்? ஆனால், தத்தம் பொருள்களைக் குறிக்கும் உரிய சொல்லிருந்தும், வேண்டாமலே விளையாட்டாகவே சிற்சிலர் வடமொழிச் சொற்களைத் தமிழில் ஆளுகின்றனர். அங்ஙனம் ஆளுகின்றவர் தாமும் பெரும்பான்மையாக நகரங்களில் வாழ்க்கை நடாத்துபவராவர். நாட்டுப்புறங் களில் வாழுந் தமிழ்மக்கள், பிறமொழியாளர் தொடர் பின்றி வாழ்வோராய், பிறமொழியாளரால் நன்கு மதிக்கப் படவேண்டும் என்ற மாறு எண்ணமுடையரல்லராய்த் தங்கள் மொழியின் பழைய சொற்களை இன்றும் வைத் திருக்கின்றனர். இதுபற்றிக் கால்டுவேலர்* பின்வருமாறு ஆங்கிலத்தில் வரைந்தார் :—

" தமிழ்மொழி விரும்பினால், தான் ஆளுகின்ற வட மொழிச் சொற்களை அடியோடு அகற்றிவிட்டுத் தனித் தியங்கு மென்பதன்றி நன்று தழைக்கவுந் தழைக்கும். சமக் கிருதத்தினின்று வந்து வழங்குஞ் சொற்கள் இன்றியமை

* Caldwell, "Tamil can dispense with its Sanskrit altogether, if need be, and not only stand alone but flourish well. Sanskrit derivati-eves are considered rather as luxuries or articles of finery than as neces saries. Generally it is not through any real necessity, but from choice and the fashion of the age, that it makes use of Sanskrit. In every country it is in the poetry and in the speech of the peasantry that the ancient condition of the language is best studied. The speech of the very lowest classes of the people in the retired country districts accords to a considerable extent with the classical dialect in dispensing with Sanskrit derivatives."

யாதவை என மதிக்கப்படாமல் வேண்டாப்பொருள்களென்ருதல் விளையாட்டுப் பொருள்கள் என்ருதல் மதிக்கப்படுகின்றன பொதுவாக, இன்றியமையாதவை என்ற காரணத்தால் அல்லாமற் பிறராற் பாராட்டப்படவேண்டும் என்ற தப்பெண்ணத்திறுற் சிலர் சமக்கிருதச் சொற்களை ஆளுகின்றனர். எல்லாத் தேயங்களிலும் பாச்செய்யுட்கள் வாயிலாகவும் நாட்டுப் புறத்தாருடைய பேச்சுவழக்கு வாயிலாகவும் மொழியின் பண்டைய நிலை அறியப்படும். தொலையில் உள்ள நாட்டுப் புறங்களில் வாழும் தாழ்ந்த வகுப்பு மக்களுடைய தமிழ்ப் பேச்சு, சமக்கிருதத்தினின்று வந்த சொற்களை ஆளாதிருக்கும் வகையில் பழந் தமிழைப் பெரிதும் ஒத்திருக்கின்றது.''

இதன் உண்மை, கல்லைச் 'சிலை' என்றும், மலையை 'அசலம்' என்றும், மரத்தை 'விருட்ச' மென்றும், பூவைப் 'புஷ்பம்' என்றும் வழங்காத நாட்டுப்புறப் பேச்சுவழக்கால் அறியத்தகும். பொழுதினைச் சமயம் என்பாரும், பெயரினை நாமம் என்பாரும், அம்பினைப் பாணம் என்பாரும், எலும்பினை அஸ்தி என்பாரும் நகரில் வாழுந் தமிழரே யாவர்: நாட்டுப்புறங்களில் வாழுந் தமிழரல்லர். பாம்பினைச் சர்ப்பம் என்றும், தலையினைச் சிரஸ் என்றும், பல்லினைத் தந்தமென்றும் வடமொழிப் பெயரால் வழங்குவோர் பெரும்பாலும் நகர்வாழ் மக்களே. ''நேத்திரம் பிரதானம்,'' ''கர்ண கொடூரமாயிருந்தது'' என்று கூறி நேத்திரம், கர்ணம் என்னும் வடமொழிச் சொற்களைக் கண், காது இவற்றிற்கொப்ப வழங்குகின்றவர் நாட்டுப்புறத்தாரல்லர். ஆம், இல்லை, யானை, மீன், முட்டை இவற்றிற் கேற்ற வடமொழிச் சொற்கள் நாட்டிலும் நகரில்தானுந் தமிழரது பேச்சு வழக்கிற் பயிலுதல் இல்லை. ''தின்'' முதலாக முன்னர் எண்ணிய வினைச்சொல் எல்லாம் பேச்சி

லும் எழுத்திலும் வழங்குகின்றனவேயன்றி அவற்றிற் கேற்ற வடமொழிச் சொற்கள் பயிலுதல் அறவேயில்லை. பூமி, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம் என்னுஞ் சமக்கிருதச் சொற்களை இந்நாளில் தமிழர் சிலர் நகர்க்கண் வாழ்வார் வழங்குகின்ற காரணத்தால், தமிழ்மொழி தனக்கென ஒன்றின்றி எல்லாவற்றிற்கும் வடமொழிக்கே கடன்பட் டது என்றும் அது வடமொழியினின்றே தோன்றிற்று என்றுங் கூறப்படுமாயின், அக் கூற்று பொருந்தாக் கூற் றென விடுக்க. நிலம், நீர், தீ, காற்று, வான் என்ற தனிப் பெயர்கள் நம் மொழிக்குத் தொன்றுதொட்டே உண்டு என்றும், அவை பிற திராவிடமொழிகளிலுங் காணப்படு கின்றன என்றும் முன்னரே காட்டினும்.

இனி, பழந்தமிழ்ச் சொற்கள் இப்பொழுது தமிழிற் பேச்சு வழக்கில் இல்லாதன முன்னர்த் தமிழிலக்கியங் களிற் பயின்றவை இன்றும் பிற திராவிட மொழிகளில் ஒரோவொரு வடிவிற் காணப்படுதல் கருதத்தக்கது, நால்கு, தொண்டு, தள்ளை, வள்ளம், நெய்த்தோர், வென் என்பன இத்தகைய. இதனால், மறைந்து கிடக்கும் பல தொடர்புகள் பழந் தமிழிலக்கியச் சொற்கள் வாயிலாக வெளிப்படும் என்பது விளங்கும்.

தமிழ்த்தாய் பெற்றெடுத்த மகள் என்று சொல்லற் பாலதாகிய கன்னடம், குடகர்மொழி படகர்மொழி என்ற இரு வேறு மொழிகளைத் தோற்றுவித்ததாகக் கூறுதல் கூடும். அதனாற்போலும் பாவலர் பிள்ளையவர்கள் "உன் உதரத்து உதித்து எழுந்தே **ஒன்று பல ஆயிடினும்**" என் றார் என்க.

ஆன்மா அனாதி காலந் தொட்டே இருந்ததற்குக் கட வுள் கருணையான் உடலம் ஈந்தான் என்றும், அதனால் அவன் படைக்குந் தொழிலுடையன் எனக் கூறப்பெறு

வன் என்றுஞ் சொல்லுப. அதுபோல, மக்கள் பலர் முற்காலத்தே இருந்தார்க்குச் சொற்பொருள் தமிழன்னை தந்தமையால் அவள் பலமொழி நங்கையர்க்குத் தாயெனற்பாலள். கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளுவம் ஆகியவை அவ்வன்னை பெற்றெடுத்த மக்கள் என்று **சுந்தரம் பிள்ளை** கருதினார். அதனால் "எல்லையறு பரம்பொருள் பல்லுயிரும் பலவுலகும் படைத்தல்" போன்று தமிழ்த்தாயும் ஆக்குந் திறனுடையவள் என்றவாறு அவர் குறிப்பிட்டது மிக்க பொருத்தமுடைத்து. மேலே கூறிய மொழிகள் தமிழ்ப்பால் உண்டு வளர்ச்சியுற்றதால் அவற்றை அளித்தல் செய்கின்றாள் தமிழன்னை என்றதும் ஒக்கும். பழைய மலையாள இலக்கியங்கள் இதற்குத் தெள்ளிதின் அமைந்த சான்று. மலையாள எழுத்துக்களால் எழுதப்பட்டிருப்பினும் சொற்களும் சொல் புணர்முறையும் தமிழில் உள்ளவற்றோடு ஒத்துள என்பதற்குக் கீழ்வரும் பழைய மலையாள இராமாயணப் பகுதியொன்று தக்க சான்று :

> "கொண்டலின் நேரிருண்டு சுருண்டு
> நீண்டொளி வார்ந்து திங்ஙும்
> குந்தள பாரமொடு முகில் குலத்திட
> மிந்நல் போலே...... ..................அரிகெப் பொலிந்தவள்
> சீத சொன்னாள்."

தான் பெற்றெடுத்த மக்களைத் தமிழ் அளித்தற்கு இதனினும் வேறு சான்று வேண்டுமோ? டகர ணகர ளகரங்களை வடமொழியும் அதன் வழிவந்த பல்வேறு மொழிகளுந் தமிழினின்று கடன் வாங்கின என்று மொழி நூற் பேராசிரியர் சிலரும்*, வினைச்சொல்லை வாக்கியத்தின்

* Mr. Norris, Dr. Buhler, Dr. Caldwell, Mr. Beames and Dr. Sunitikumar Chatterjee.

இறுதியில் வைத்து முடிக்கும் பெற்றியை வடமொழி தமிழினின்று பெற்றதென்று எட்கிஞ்சு † என்பாரும், தற்காலச் சமக்கிருத ஐகார ஔகார உச்சரிப்பிற்காக வடமொழி தமிழ்மொழிக்குக் கடன்பட்டதென்று மொழி நூற்கலையாசிரியர் தரப்போரிவாலா ‡ என்பாரும் முன்னரே மொழிந்துளராதலின் பேரருளுடைய பரம்பொருள் "பல்லுயிரும் பலவுலகும் அளித்தல்" போலத் தமிழ்த் தாய் பல்வேறு மொழிகளையும் அளித்தல் செய்கின்றாள் என்க. பரம்பொருள் அருள் காரணமாகத் துடைத்தல் போல அவளுஞ் சில மக்களைத் துடைத்தனள்போலும்! அதனால் அன்றோ குறுக்கு மாலர் ஆகிய மொழிகளின் நேர்த்தாயர் இப்பொழுது அறியப்பட்டிலர்? வங்காளம், பீகார், ஒரிசா ஆகிய மாநிலங்களில் வழங்கும் அம் மொழிகள், தமிழின் பேர்த்திகள் என்று சொல்லத்தக்கன இன்றும் உளவாகவும், அவற்றின் தாயர் அறியப்படா மைக்குக் காரணம் தமிழன்னை அவற்றைத் துடைப்பித் ததுபோலும்! நீலகிரியில் இருளருங் குறும்பரும் பேசும் மொழிகள் தமிழிற் பிறந்ததொரு முன்னைய மொழியின் வழிவந்தன எனக் கூறத்தகும். அம் மொழியுந் துடைக் கப்பட்டதுபோலும்! இவற்றையெல்லாம் உன்னுங்கால், "பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினு மோர் எல்லையறு பரம்பொருள் முன்னிருந்தபடி யிருப்பது போல்" என்று பாடிய பாவலர் பெருமை விளங்கும்.

இதுகாறும் எழுதிவந்தவாற்றால், பரம்பொருள் முத் தொழிலுடையதாய் என்றும் அறுதியாய் அழிவிலதாய் இருத்தல்போலத் தமிழ்த்தாயும் ஆக்கல் அளித்தல் அழித்

† Mr. Edkins in "China's Place in Philology."

‡ Dr. I. J. S. Taraporewala in "Elements of the Science of Language".

தல் தொழிலுடையளாய்ப் பண்டுதொட்டு உள்ளவளாய் அழிவில்லாதவளாய்த் திகழ்ந்தருளுபவள் என்பதும், கன்னட முதலாய பல மொழிகளைத் தன்பால் தோற்றுவித்தவள் என்பதும், அப் பல மொழிகளில் ஒவ்வொன்றும் பலப் பலவாகப் பல்கியக்காலும், தான், பிற சில பழைய மொழிகள் வழக்கழிந்து சிதைந்து போனதுபோலன்றி என்றுஞ் சீரிளமை நலத்தொடு பிறங்குகின்றவள் என்பதும், இக் காரணங்களால் வாழ்த்தி வணங்கத் தக்கவள் என்பதும் உறுதியாதல் காண்க.

> "பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
> எல்லையறு பரம்பொருள்முன் இருந்தபடி யிருப்பதுபோற்
> கன்னடமுங் களிதெலுங்குங் கவின்மலையா ளமுந்துளுவும்
> உன்னுதரத்து உதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்
> ஆரியம்போல் உலகவழக்கு அழிந்தொழிந்து சிதையாவுன்
> சீரிளமைத் திறம்வியந்து செயன்மறந்து வாழ்த்துதுமே."

# பழந்தமிழ் வேந்தர்

பழங்காலத் தமிழகத்தில் வாழ்ந்த அரசர்கள் செங்கோல் அரசராக இருந்தார்கள் என்பதற்கும், செங்கோல் செலுத்துபவராகவே இருக்க விழைந்தார்கள் என்பதற்கும் உரிய சான்றுகள் பல கிடைக்கின்றன. சபதம் கூறிய மன்னர்கள் சிலர் தமது சபதம் தவறினால், தம்மைக் குடிமக்கள் கொடுங்கோல் வேந்தர் எனக் கூறி இகழ்வாராக என உரைத்துள்ளார்கள். பொதுவாக, சபதம் தவறினால் இன்னது ஆகுக எனக் கூறுவதிலிருந்து ஒருவருடைய குறிக்கோளும், ஒருவரால் மேலானதாக மதிக்கப்படுவதும் அறியப்படும். உதயணன் கதையில் வரும் யூகியாகிய யௌகந்தராயணன் தன் சபதம் தவறினால், தனது சிகையை அரிந்துவிடுவதாகக் கூறினான். இதுகொண்டு அவன் சிகையினிடத்து வைத்த பற்று அறியப்படும். அதைப்போலவே, ஒருவர் இதனைச் செய்யாதுபோனால் தமக்கு வேறொரு பெயரிட்டு அழைக்க எனக் கூறும்போது, அவர் தமது தாய்தந்தையர் இட்ட பெயரினிடத்து வைத்த அன்பு அறியப்படும். ஒருவர் மகன்மேல் ஆணையிடுகிறேன் என்றால், அவர் பெறற்கரும் தமது மகனிடத்து வைத்த பேரன்பு அறியப்படும். எனவே, ஒருவன் சபதம் தவறினால் இன்னது ஆவேன் எனக் கூறுவதிலிருந்து, அவன் வாழ்க்கை

யில் விரும்புகின்றனவும் வெறுக்கின்றனவும் இன்ன என்பதை நாம் எளிதில் உணர்ந்துகொள்ளக் கூடும்.

பூதப்பாண்டியன் என்ற அரசன் கூறிய சபதம் ஒன்றில், "என்னுடைய பகைவரை ஆரமரில் அலறும்படி தாக்கித் தேரொடும் அவர்களைப் புறங்கொடுத்து ஓடும்படி நான் செய்யாது விட்டால், நியாயங் கெட்டு மெலிகோல் செய்தேன் ஆகுக" என உரைத்தான். இதிலிருந்து, அவன் செங்கோல் வேந்தனாக இருக்க விரும்பினான் என்பதும், செங்கோலினின்று சிறிதுகூட நழுவ விருப்பமில்லாதவனாய் இருந்தான் என்பதும் அறியப்படும். 'கொடுங்கோலன் என்று இகழப்படுவேனாக' என்று கூறிக் கொடுங்கோலினிடத்துத் தனது வெறுப்பை மாத்திரம் அவன் காட்டினான் அல்லன். செங்கோலினின்று சிறிதும் வழுவ விரும்பாத காரணத்தால் 'மெலிகோல் செய்தவனாக இகழப்படுக' எனக் கூறினான். இதிலிருந்து அவனுடைய உயரிய குறிக்கோள் இனிது விளங்கும்.

அவ்வாறே, தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்னும் பாண்டியன் "என் பகையரசர்களைப் போரிற் சிதையும்படி தாக்கி அவருடைய முரசுகளோடு ஒருங்கே அகப்படுத்திச் சிறைசெய்யாது போனால், என் குடிமக்கள் 'எங்கள் அரசன் கொடியன்' என என்னை இகழட்டும்" என வஞ்சினம் உரைத்தான் எனப் புறநானூற்றுப் பாடல் இன்றொன்றால் அறிகிறோம்.

> "என்னிழல் வாழ்நர் செல்நிழல் காணாது
> கொடியன் எம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்
> குடிபழி தூற்றுங் கோலேன் ஆகுக" (புறநானூறு 72)

என்னும் அடிகளால், அவன் குடிமக்கள் கண்ணீர் வடித்துத் தன்னை இகழக்கூடாது எனக் கருதினான் என்பது

புலப்படும். குடிமக்கள் அரசனுடைய கொடுங்கோலால் துன்பமடைந்து அதைப் பொறுக்கமுடியாது அழுதால், அந்தக் கண்ணீரே அரசனுடைய செல்வத்தை அழித்து விடும் என்பது ஆன்றோர் கருத்து. இதனைத்தான் திருவள்ளுவர்,

"அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண்ணீர் அன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை"

எனக் கூறினர். எனவே, தான் கூறியதைச் செய்து முடிக்காது போனால், தன் குடிமக்கள் கண்ணீர் வடித்துத் தன்னைக் கொடியன் எனக் கூறட்டும் எனப் பாண்டியன் சொல்லியதிலிருந்து, அவன் செங்கோலினனாக ஆட்சி செய்து மேன்மேலும் தனது செல்வம் பெருகவேண்டும் என விரும்பினான் என்பது ஊகித்து அறிந்துகொள்ளப் படும்.

கவிஞர்கள் செங்கோல் மன்னரைப் பாராட்டியும் கொடுங்கோல் வேந்தரை இகழ்ந்தும் தத்தம் நூலின்கண் உரைத்தனர். உதாரணமாக, பாலை பாடிய பெருங்கடுங்கோ என்ற கவிஞர், தாம் பாடிய கலிப்பாட்டு ஒன்றில், பாலைவன மணல் சூரிய வெப்பத்தால் கடுகிக் காய்ந்து கிடப்பதற்கு உவமையாகக் கொடுங்கோல் மன்னனுடைய கொடுமையால் வாடிக்கிடந்த மக்களைக் குறிப்பிட்டார்.

"கொடியது ஓர்த்த மன்னவன் கோல்போல ஞாயிறு
கடுகுபு கதிர்மூட்டிக் காய்சினம் தெறுதலின்"

என்ற பாலைக்கலி (செய். 8) அடிகளில் இதனைக் காணலாம்.

பட்டினப்பாலை பாடிய உருத்திரங்கண்ணனார் கரிகால் வளவனது கூரிய வேல்போன்று காடு கடுமையாக இருந்தது என்றும், அவனுடைய செங்கோல் போன்று

அவன் தலைவியின் தோள்கள் தண்ணியனவாக இருந்தன என்றும் குறிப்பிட்டார்.

> " திருமா வளவன் தெவ்வர்க்கு ஓக்கிய
> வேலினும் வெய்ய கானம், அவன்
> கோலினும் தண்ணிய தடமென் தோளே"

என்பன அவ்வடிகள். எனவே, உவமைகளில் வைத்து ஆளும் வகையான் கவிஞர்கள் செங்கோலைச் சிறப்பித்தனர் என்பது பெறப்படும். மக்களும் கொடுங்கோல் மன்னர் வாழும் நாட்டைவிடக் கடும்புலி வாழும் காடு நல்லது என மதித்தனர். புலவர்கள் அரசரை நோக்கி, "குழந்தைகளைப் பாதுகாக்கும் தாய்மாரைப் போல நும் குடிமக்களை நீவிர் பாதுகாக்கவேண்டும்" என வற்புறுத்தினர். குடிமக்களைக் கசக்கிப் பிழிந்து வரிகளை வசூலிப்பதால் தீமையே அன்றி நன்மை விளையாது எனப் பகர்ந்தனர்.

சேரன் செங்குட்டுவன் மக்களை ஆட்சி செய்வதென்பது துன்பமே யன்றி இன்பம் எனக் கொள்ளுதற்கு இல்லை எனக் கருதினான். மக்கள் ஏதானும் ஒரு காரணத்தால் வருத்தமுறின் வேந்தன் வருந்தவேண்டும். மழை பெய்வது குறைந்தால் அரசன் அஞ்சவேண்டும். ஆதலால், உயிர்களைப் பாதுகாக்கும் கடமையையுடைய மேலான குடியிற் பிறத்தல் என்பது துன்பமே அல்லாமல் தொழத் தகும் தன்மையதன்று எனக் கருதினான். அதனால் ஒருநாள்,

> " மழைவளம் கரப்பின் வான்பேர் அச்சம்
> பிழையுயிர் எய்தின் பெரும்பேர் அச்சம்
> குடிபுர வுண்டும் கொடுங்கோல் அஞ்சி
> மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
> துன்பம் அல்லது தொழுதகவு இல்"

எனச் சாத்தனார் என்னும் புலவரிடம் கூறினான். மழை வளங் குறைந்தால் அரசனுடைய ஆட்சி தவறிற்று எனக் கூறுவது அக்காலத்து மரபு. அதனால்தான் வெள்ளைக் குடி நாகனார் என்னும் புலவர் கிள்ளிவளவன் என்னும் சோழனைப்பற்றிப் பாடியதொரு பாட்டில் மழை பெய்ய வேண்டிய காலத்திற் பெய்யாது பொய்த்தாலும், நாட்டிலே விளையவேண்டிய பொருள்கள் விளையாது குறைந்தாலும் அரசாட்சியையே இவ்வுலக மக்கள் பழிப்பர் என எடுத்துக் காட்டி, உழவர்களைப் பாதுகாக்கவேண்டிய கடமையை வற்புறுத்தினார். புறநானூற்றிற் காணப்படும் அப்பாட்டில் (செய். 35)

> "மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
> இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்
> காவலர்ப் பழிக்கும் இக்கண்ணகன் ஞாலம்"

என வரும் அடிகள் சேரன் செங்குட்டுவன் கூறியவற்றோடு ஒப்பு நோக்கிப் படிக்கத் தக்கன.

எனவே, செங்குட்டுவன் செங்கோலினனாக இருக்க வேண்டும் என்னும் பெரு விருப்புடையவன் என்பது அறியப்படும். இதனை வற்புறுத்துதற்கு உரிய பிறிதொரு சான்றும் உண்டு. தமிழினை இகழ்ந்த வடவரை வெற்றி கொண்டு அவர்தம் முடித்தலையில் கண்ணகி வடிவம் எழுதுதற்கு உரிய கல்லினைத் தான் கொண்டுவரத் தவறினால், தன் குடிமக்களை நடுங்கவைக்கும் கொடுங்கோலன் என மக்கள் தன்னை இகழ்க என வஞ்சினம் உரைத்தான் என்பதால் இது பெறப்படுகிறது. தன்னுடைய ஆற்றலைத் தன் பகைவரிடம் காட்டி அவர்களை நடுங்கவைக்க விரும்பினானேயன்றி, தன் குடிமக்களை நடுங்கும்படி செய்யும் எண்ணம் சிறிதும் உடையனல்லன் என்பது அவன் சொற்களினாலேயே பெறப்படுகிறது.

" வடதிசை மருங்கின் மன்னர் முடித்தலைக்
கடவுள் எழுதவோர் கற்கொண்டு அல்லது
வறிது மீளும்என் வாய்வாள் ஆகின்
செறிகழல் புனைந்த செருவெங் கோலத்துப்
பகையரசு நடுங்காது பயங்கெழு வைப்பிற்
குடிநடுக் குறாஉம் கோலேன் ஆகுக"

என்ற சிலப்பதிகார அடிகளால் (கால்கோள். அடி 13-18) இது விளங்குகிறது.

இச்சான்றுகளால் பழந்தமிழ் வேந்தர்கள் செங்கோல் வேந்தராக இருக்க விழைந்தனர் என்பது நன்கு அறியப் படும்.

# பண்டைத் தமிழர் வாணிகம்

**ப**ழந்தமிழர் எகிப்து, பேபிலோனியா, கேல்டியா முத லான புராதன, நாகரிக தேசங்களோடு பல்லாயிரம் ஆண்டு கட்கு முன்னர் வாணிகம் நடத்தி வந்தார்கள் என்பதற்குப் பல சான்றுகள் தென்பட்டுள. இற்றைக்குச் சற்றேறத் தாழ மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னுல் தமிழ்ச் சொல் லாகிய "தோகை" என்பதைத் "தூக்கியம்" எனத்திரித்து ஹீப்ரு மொழி நூலில் வழங்கினர் ஆதலால், தமிழ் நாட் டிற்கும் மேலை ஆசியாக்கண்டத்திற்கும் வாணிகத்தொடர்பு உண்டு என்பது உறுதிசெய்யப்படுகிறது. ஐரோப் பாக் கண்டத்திலும் தமிழர் வாணிகம் அந்நாளில் பரவிய துண்டு. பிப்பிலி, அரிசி, இஞ்சிவேர் முதலான தமிழ்ச் சொற்கள் உருவு திரிந்து கிரேக்க மொழியில் காணப்படு கின்ற காரணத்தால், கிரேக்கருக்கும் பழந்தமிழருக்கும் வாணிகப் போக்குவரத்து உண்டு என்பது வெளியாகின் றது. தமிழ்நாட்டில் பருத்திப் பெண்டிர் நெய்த பாலாடை யன்ன மேலாடைகள் உரோமாபுரி வரையில் அனுப்பப் பட்டன என்று அறிகிறேம். இத்தாலி தேசத்துப் பழம் பெண்டிர் கி. பி. முதல் நூற்றுண்டில் நம் நாட்டிலிருந்து சென்ற மிக மெல்லிய நுண்ணுடையை உடுத்தியிருந்ததற் காக அவ்வூர்களிற் சிலர் வருந்தி உரைத்ததும் உண்டு. அந்நாட்டு ஆடவர் சிலர் "நமது தேசத்தின் பணத்தை

இம் மகளிர் வெட்கமின்றி அணியும் இம்மெல்லிய ஆடையால் பிறநாட்டிற்குக் கொள்ளையாக அனுப்புகிறார்களே" என வருந்தி உரைத்தார்கள் என்ற செய்தி அந்நாட்டு வரலாற்றிற் குறிக்கப்பட்டுள்ளது.

பழந்தமிழர் வாணிகம் பற்றிய செய்திகள் பிற தேசங்களிலிருந்து அறியப்படுவன இவ்வாறு இருப்பன ஆக, நம் மொழியின்கண் உள்ள பழைய நூல்கள் கூறுவன யாவை என்று சுருக்கமாகக் காண்போம். தமிழர் நேர்மை என்பதையே வாணிகத்திற் சிறந்த குறிக்கோளாகக் கொண்டனர். "குறையச் சொல்லி நிறைய அள" என்பது தமிழர் குருதியில் ஊறியதொரு பழமொழி. கொள்வதற்கு என்று ஒரு படியும் கொடுப்பதற்கென்று வேறு படியும் வைத்துக் கொள்ளக்கூடாது என்பது அவர் கண்டது. அதைக் கருதியே திருவள்ளுவரும் "வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப் பிறவுந் தமபோற் செயின்" என்றார். காவிரி புகும் பட்டினத்தில் 1300 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த தமிழ் வணிகர்கள் தாம் கொள்முதல் செய்யும் பொருளைத் தாம் கொடுக்கும் பொருளின் மேலாக மாற்றிக் கொள்ளுதலில்லை என்றும், தாம் விற்கும் பொருளையும் வாங்குகின்ற பொருளிற்குக் குறைவாகக் கொடுத்தல் இல்லை என்றும் அறிகின்றோம். பட்டினப்பாலை என்னும் பழம்பாட்டினுள் இதனையே

> "தமவும் பிறவும் ஒப்ப நாடிக்
> கொள்வதூஉம் மிகை கொளாது
> கொடுப்பதூஉம் குறைகொடாது"

என்றவாறு புலவர் ஒருவர் குறிப்பிட்டார். எனவே "நேர்மை" என்னும் அடிப்படையின்மீது பழந்தமிழர் வாணிகம் எழுப்பப்பட்டது என்பது வெளிப்படை.

இனி, அக்காலத்தில் சோழர் தலைநகராகிய காவிரி புகும் பட்டினத்தில் வாணிகம் எத்துணை செழித்திருந்தது என்பது பின்வரும் செய்தியால் அறியத்தகும். காவிரிபுகும் பட்டினத்தின்கண்ணே சுங்கம் வாங்குவோர் பலர் அரசரால் நியமிக்கப்பட்டிருந்தனர். கப்பலில் ஏற்றும் பொருள்களையும் கப்பலிலிருந்து இறக்கும் பொருள்களையும் மதித்து அவர்கள் சுங்கம் வாங்கினார்கள் சுங்கம் வசூலிக்கப் பட்ட பொருள்களை அறிகுறியாக புலிப் (Seal) பொறியினாலே பொறித்தனுப்பினார்கள். புலியுள்ள முத்திரை சோழ நாட்டரசரால் பார்க்கப்பட்டது என்பதைக் காட்டுதற்கு அறிகுறி. அப்படிப் புலிப் பொறியால் பொறிக்கப் படுதற்குப் பல பண்டங்கள் வரம்பில்லாமல் வந்து நெருங்கிக் கிடந்தன என்பது சொல்லப்பட்டுளது. கீழ்க் காணும் பட்டினப்பாலை அடிகள் அச்செய்தியை உணர்த்துவன :—

" நீரினின்று நிலத்து ஏற்றவும்
நிலத்தினின்று நீர்ப் பரப்பவும்
அளந்தறியாப் பலபண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி."

அப்பட்டினத்திலே வாணிகத்திற்காக வந்த பொருள்கள் பலப் பல. குதிரைகளும் மிளகுப் பொதிகளும் கடல் வழியாக வந்து இறங்கின. மேரு மலையிலிருந்து மாணிக்கமும் சாம்பூனதம் என்னும் பொன்னும் வந்தன. மேற்கு மலைப் பகுதிகளிலிருந்து சந்தனக் கட்டைகளும் அகிற் கட்டைகளும் வந்து நிரம்பின. கொற்கையிலிருந்து முத்தும், கீழ்த் திசைக் கடலிலிருந்து பவளமும் வந்தன. கங்கை, காவிரி முதலிய ஆறுகளின் பக்கத்தே விளைந்த பொருளெல்லாம் கடைகளில் விற்கப்பட்டன. யாழ்ப்பாணத்திலிருந்து சில

நல்ல உணவுப் பொருள்கள் வந்திருந்தன. பர்மா, மலேயா, சைனு முதலான நாடுகளிலிருந்து கருப்பூரம், பனிநீர், குங்குமம் முதலான பல பொருள்கள் வந்தன. இவையெல்லாம் பலப்பலவாக வந்தமையால் "நிலத்தின் முதுகுகூட நௌிந்து போகுமோ" என்று ஐயுற வேண்டி இருந்தது என உருத்திரங் கண்ணனுர் என்ற புலவர் குறிப்பிட்டுள்ளார். இக் காலத்தில் அப்பட்டினம் இப்பெருமையெல்லாம் அற்றதாய்க் காணப்படுகிறது.

# செந்தமிழ்

செந்தமிழ் என்றவுடனே கடுமையான தமிழ் எனக் கருதிவிட வேண்டா. நல்ல தமிழ் என்பதே செந்தமிழ் எனப்பட்டது. பிரெஞ்சு மொழியைப்பற்றிய வரையில், இலக்கியப் பிரெஞ்சே பொதுப் பிரெஞ்சு ஆனது என்பார்கள். அதைப் போன்றே தமிழைப் பொறுத்த வரையிலும், இலக்கியத் தமிழே பொதுத் தமிழ், செந்தமிழ் என முன்னை நாளிற் கருதப்படுவதாயிற்று.

அப்படியானல், செந்தமிழ் என்பது எந்தப் பகுதியில் வழங்கிற்று என்ற வினு எழும். பலர் பாண்டியம்பதியிலேயே வழங்கிற்று என்பர். சிலர் சோழவள நாட்டிற் செழித்திருந்தது என்பர். இன்னுஞ் சிலர் சேரர் பேரூரிலும் வழங்கிற்று என்பர். பாண்டியம்பதியிலேயே பரவியிருந்தது என்போர்,

> "செந்தமிழ் நாடே,
> சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவனும்
> சௌந்தர பாண்டியன் எனுந்தமிழ் நாடனும்
> சங்கப் புலவரும் தழைத்தினி திருக்கும்
> மங்கலப் பாண்டி வளநாடு என்ப"

என்ற சூத்திரத்தைக் காட்டுவர்.

அவர்கள் கருத்துப்படி, தென்பாண்டி ஆகிய திருநெல்வேலியும், குட்டம், குடம், கற்கா, வேண், பூழி ஆகிய

கேரளப் பகுதிகளும், பன்றியாகிய பழநியும், அருவா ஆகிய செங்கற்பட்டும், அருவா வடதலையாகிய வட ஆர்க்காடும், சீதநாடு ஆகிய நீலகிரியும், மலாடு ஆகிய தென்னார்க்காடும், புனனாடு ஆகிய சோழநாடும் செந்தமிழ் பேசப்படாத இடங்கள்.

கொடுந்தமிழ் பேசப்பட்ட இடமாக இவர்களாற் கொள்ளப்படும் சோழநாடே செந்தமிழ் வழங்கிய பகுதி என இன்னொரு சூத்திரங் கூறுகின்றது.

> "செந்தமிழ் நாடே,
> மன்ற வாணன் மலர்திரு வருளால்
> தென்றமிழ் மகிமை சிவணிய செய்த
> அடியவர் கூட்டமும் ஆதிச் சங்கமும்
> படியின் மாப்பெருமை பரவுறு சோழனும்
> சைவமா தவரும் தழைத்தினி திருக்கும்
> மையறு சோழ வளநா டென்ப"

என்பது அச்சூத்திரம்.

இதனை இவ்வாறு கூறவேண்டுமெனக் கருதிச் சமணர் யாத்தனர் எனச் சிலர் கூறுவர். தம்நாட்டிற்குப் பெருமை கூறக் கருதிய சைவ மடத்துத் தலைவர் எவரோ ஒருவர் இவ்வாறு எழுதி வைத்து விட்டார் என வேறு சிலர் கருதுவர். அன்றேர், செந்தமிழ் நாடே எனத் தொடங்கிப் 'பாண்டி வளநாடு என்ப' என முடியுஞ் சூத்திரத்தையும் பாண்டி நாட்டில் வாழ்ந்த ஒருவர் பாடினார் எனக் கூறி மறுத்தால், அம்மறுப்பில் உண்மை உண்டு என நினைக்கவேண்டியிருக்கும் அன்றோ?

இஃது ஒருபுறம் இருப்ப, இன்னொரு பக்கத்தில் சேனாவரையர், நச்சினார்க்கினியர் என்னும் தொல்காப்பிய உரையாசிரியர்கள் கூறியுள்ள எல்லையை வைத்து நோக்கினால், பாண்டியம்பதியின் தலைநகரான மதுரை விலக்கப்பட்

டிருப்பது அறியப்படும். வையையாற்றின் வடக்கும், மருத யாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்குமே செந்தமிழ் பரவிய பகுதிகளாக மதிக்கப்படுகின்றன. அவ்வாறு ஆயின், பாண்டிநாடு சோழநாடு ஆகியவற்றின் சிற்சில பகுதிகளிலேயே செந்தமிழ் வழங்கிற்று என ஏற்படும்.

தொல்காப்பியரோ, "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு" எனப் பேசுகின்றார். மேலும், செந்தமிழ்சேர்ந்த பன்னிருநிலம் எனவே அவர் கூறுகின்றார். இவ்விடத்தில் செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலங்கள் என உரைகாரர்கள் பொருள்செய்து இருக்கிறார்கள். தொல்காப்பியச் சூத்திரத்தில் உள்ளவண்ணம் நோக்கினால் செந்தமிழ் வழங்கிய பன்னிரு நிலங்களிலும் என்பது பொருள்போலத் தோற்றும். அப்படியானால், தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா என எடுத்துப் பிற்காலத்தார் கொடுந்தமிழ் நாடாக இகழ்ந்துரைக்கும் பகுதிகளிலும் செந்தமிழ் வழங்கிற்று என்பது ஏற்படும். இஃது எவ்வாறு பொருந்தும் எனப் பார்ப்போம்.

ஒரு காலத்தில், தமிழகத்தின் பல பாகங்களிலும் பேசப்பட்ட தமிழ் பகுதிதோறும் சிறிது சிறிது வேறுபட்டு இருந்திருக்க வேண்டும். அப்பகுதிகளில் முக்கியமான பகுதிகளாக மேலே கூறிய பன்னிரண்டும் மதிக்கப்பட்டன போலும். பொதுத் தமிழ் ஆவதற்கு உரிய இடம் பெற ஒவ்வொரு பகுதித் தமிழும் போட்டியிட்டிருக்கும். அப்போட்டியில் முக்கியமாகக் கலந்துகொண்ட பகுதிகள் பன்னிரண்டு. செந்தமிழ் ஆவதற்கு உரியன என மதிக்கப்பட்ட பகுதி மொழிகள் பன்னிரண்டுமே, 'செந்தமிழ்சேர்ந்த பன்னிரு நிலத்தும்' என்ற விடத்துத் தொல்காப்பியராற் குறிப்பிடப்பட்டன போலும். பிறகு அரசியல் ஆதிக்கங்

காரணமாக, சேர, சோழ, பாண்டிநாட்டு மொழிகள் ஆகிய வஞ்சித் தமிழ், உறந்தைத் தமிழ், கூடற்றமிழ் ஆகியவை ஏனையவற்றைக் காட்டிலும் சிறப்பாகச் செந்தமிழ் என மதிக்கப்பட்டிருக்கலாம். அரசியல் செல்வாக்குக் காரணமாக, ஏனைய பகுதிகளின் குறுநில மன்னரை அடக்கிக் கொண்டுவிட்ட காரணமாக, மூவேந்தர் நிலத்திலும் வழங்கிய மொழிவகைகள் மூன்றும் செந்தமிழ் எனவே மதிக்கப்பட்டன போலும். சேரர் செல்வாக்குக் குறைந்த காலத்திலே கூடற்றமிழும் உறந்தைத் தமிழும் ஆதிக்கம் பெறுவன ஆயின. அக்காலத்தில்தான் எழுந்திருக்க வேண்டும், பாண்டிநாட்டையும் சோழநாட்டையுமே செந்தமிழ் நாடு எனக் கூறும் இரண்டு சூத்திரங்களும். நாளடைவில் சோழரைப் பாண்டியர் வென்றுராக, அரசியல் ஆதிக்கத்தால் பாண்டிநாட்டு மொழியே செந்தமிழ் என்னுங் கருத்து வலியுறுவதாயிற்று. விசய நகரத்து நாயக்க அரசர்கள் மதுரையை ஆளத் தலைப்பட்ட பதினைந்காவது நூற்றாண்டில், இச் செந்தமிழ் வேறுபடத் தலைப்பட்டாலும், பின்னர் அச்சுக் கருவிகளின் உதவியால் அதிக மாறுதலின்றி நிலைபெறுவதாகிவிட்டது. இவ்வாறு பல்வேறு பகுதிகளிலும் வழங்கிய அடிப்படை மொழி வகைகளில் இருந்தே பொதுத்தமிழ் என்பது வளர்ச்சியுறுவதாயிற்று. அதனால்தான் சங்க இலக்கியங்களிலும் பல்வேறு பகுதிகளின் சிறப்பான சொற்கள் இடம்பெற்றிருக்கின்றன. உதாரணமாக, தென்பாண்டிச்சொல் எனக் கருதப்படும் 'சொன்றி' என்னும் சோற்றைக் குறிக்குஞ் சொல், 'புன்புல வரகின் சொன்றி' எனப் புறநானூற்றிற் காணப்படுகிறது. பாடியவர் தென்பாண்டி நாட்டாரல்லர். வயல் என்பதைக் குறிக்கும் 'செறு' என்னும் அருவா நாட்டார் சொல் 'செவி செறுவாக' எனக் கலித்தொகையிற்

காணப்படுகின்றது. 'பெற்றம்' என்னும் தென்பாண்டிச் சொல் 'பசு' என்னும் பொருளில் திருக்குறளின்கண்ணே, "பெற்றம் புலித்தோல் போர்த்தற்று" என வந்துள்ளது. இவற்றால் அறியப்படுவது என்ன என்றால், செந்தமிழ் பிற பகுதி மொழிவகைகளைத் தன்வயப்படுத்துவது போலவே, சிலவேளைகளில் கீழிறங்கிவந்து அவ்வப் பகுதிச் சொற்களையும் எடுத்து ஆளத் தயங்கவில்லை என்பதே.

பகுதிகள் தோறும், மாவட்டங்கள் தோறும் தமிழ் வேறுபடும் என்பதற்குச் சில உதாரணங்கள் காண்போம்: 'வெள்ளென வா, அங்கே வைத்துக் கண்டேன்' என்பன திருநெல்வேலித் தமிழ். அது வழக்கம் என்னும் பொருளில் 'அது பதிவு' என்று நாகர்கோவிலிற் கூறுகிறார்கள். முழங் காலைக் 'கால் முட்டு' என்றும், முழங்கையைக் 'கைமுட்டு' என்றும் அங்கே கூறுகிறார்கள். இவற்றையே கோவன் புத்தூரில் முட்டுக்கால், முட்டுக்கை என்கிறார்கள். கழுக் கூடு என்பது நாகர்கோவில், திருநெல்வேலி, யாழ்ப்பாணம் இவற்றில் வழங்கும் சொல். தஞ்சை, தென்னார்க்காடு ஜில்லாக்களில் இதனைக் கழுக்கட்டை என்கிறார்கள். கோவன்புத்தூரில் நாசுவன் என்றும், திருநெல்வேலியில் நாசிவன், குடிமகன் என்றுங் கூறப்படுவோனைத் தஞ்சை, திருச்சி ஜில்லாக்களிற் பரிகாரி என்கிறார்கள். உயர்த்தி என்னும் பொருளில் ஒசத்தி என்றும், சிறுபெண் என்ற பொருளில் 'செறுக்கி' (சிறுக்கி) என்றும் தஞ்சையில் வழங்குகின்றார்கள். சென்னைத் தமிழில் 'இசுத்தொண்டே போறான்,' 'திருவியா', 'பலானபேரு' முதலான வழக்குகள் காணப்படுகின்றன. 'காத்தாலே' என்று தஞ்சையில் கூறு வதைத் திருநெல்வேலியில் கூறுதலில்லை. சொல்லாமல் பறையாமற் போய்விட்டான் என்னுந் திருநெல்வேலி வழக்கினை வேறு பல இடங்களிற் காணல் முடியாது.

காவணம், காணம் என்ற சொற்கள் இராமநாதபுரத்தில் சிறந்த வழக்கில் உள. யாழ்ப்பாணத்தில் ஆம் என்பதை ஓம் என்கிறார்கள். பையன் என்பதைப் (பெடியன்) என்கிறார்கள்; இன்றைக்கு என்பதை 'இண்டைக்கு'. நாம் குதிர் என்பதை அவர்கள் கூடை என்கிறார்கள். நாம் கூடை என்பதைக் கடகம், பெட்டி என்கிறார்கள். தஞ்சை திருச்சி ஜில்லாக்களில் 'முறம்' எனப்படுவது 'சுளகு' எனத் திருநெல்வேலியிலும், யாழ்ப்பாணத்திலும் கூறப்படுகிறது. சுளகு பழந் தமிழிலக்கியச் சொல். தில்லையிற் பூவன்பழம் என்பது நெல்லையில் கதலிப்பழம் எனப்படுகிறது. இங்கே பேயன் எனப்படுவது அங்கே பூவன் எனப்படுகிறது. 'விறைக்கிறது' என்று திருநெல்வேலி மக்கள் கூறினால் மற்றவர்கள் அதிகமான குளிரைப்பற்றிக் கூறினார்கள் என அறிதல் இல்லை. விட்டெறிந்தான் என்பதைத் தென்னார்க்காட்டில் கடாசினான் என்றும், திருச்சியில் எறிஞ்சினான் என்றும் கூறுகிறார்கள். எண்பது என்பதை எம்பளது எனத் திருச்சி, தஞ்சை ஜில்லாவாசிகள் கூறுமாப்போலப் பிறர் கூறுதலில்லை. யாழ்ப்பாணத்தினர் 'வருத்தம் கடுமையாம்' எனக் கூறினால், உடம்பு அசௌக்கியம் அதிகம் எனக் கூறுகிறார் என எத்தனை பேருக்குத் தெரியும்? இப்படிப் பகுதிதோறும் தமிழ்ப்பேச்சு வேறுபடுகிறது. இவ்வாறே அக்காலத்திலும் வேறுபட்டிருந்தது. எல்லாப் பகுதிக்கும் பொதுவாக எழுந்த தமிழே செந்தமிழ் என மதிக்கப்பட்டது. அவ்வாறு பொதுவாவதைப் பொறுத்துத்தான், ஒவ்வொரு பகுதிச் சொல்லும் போட்டியிட்டு நிற்க, அரசியற் செல்வாக்கு, புலவர் வழக்காறு இவற்றினால் ஏதாவதொரு சொல்லே தேர்ந்தெடுக்கப்பட்டு நிலைப்பதாயிற்று.

இச் செந்தமிழ் காலந்தோறும் வேறுபடுவது. செந்

தமிழ் எழுத்து வழக்கே, பேச்சு வழக்கன்று என நினைப் போர் உண்டு. நல்ல தமிழ் என்பது கெட்டுப்போகாமல் இருப்பதற்குக் காரணமாக இருப்போர், நூலாசிரியர்களும் இலக்கண ஆசிரியர்களும் ஆவர்.

நல்லாசிரியர் பனுவல்களைப் படித்துப் பழகிய வகுப்பா சிரியர் உதவியால் நாம் நம் எண்ணங்களைக் கூறுதற்குரிய தக்க சொற்களைப் பெற்றுள்ளோம். செந்தமிழ் என்பது தெளிவுடையதாய், இனியதாய், கருத்துக்குப் பொருந்துவ தாய், சொல் வேறுபாட்டு நயமுடையதாய் அமைந்திருக் கிறது எனின், அதற்கு முக்கிய காரணம் நல்ல நூலாசிரி யர்கள் நூல் எழுதியதும், அவரைப் பலர் பின்பற்றியதும் ஆம். பேசுவது போலவே எழுதவேண்டும் என்று தமிழில் எதிர்பார்ப்பது ஆகாது. சீனதேசத்து அதிகாரியின் மொழி (Manderin chinese) சீனப் பேச்சுமொழியினின்று சிறிது வேறுபட்டிருப்பது போலவே எழுத்து வழக்கும் பேச்சு வழக்கும் தமிழில் சிறிது வேறுபட்டிருக்கத்தான் செய்யும். இது வசையன்று. பிரெஞ்சுப் பத்திரிகைகள் சென்ற நூற் றுண்டில், இலக்கணப் பிரெஞ்சினைப் பாதுகாத்ததைப் போலத் தமிழகத்திலும் இலக்கணத்தினின்றும் வழுவாத தமிழைப் பாதுகாக்கப் பல பத்திரிகைகள் முன்வரவேண் டும்.

பிளாபார்டு (Flaubert) என்பவர் இரண்டுவகைப் பிரெஞ்சு எழுதுவாராம். ஒருவகை நெருங்கிய நண்பர் களுக்கு எழுதும் கடித நடை; மற்றொருவகை கடின மான நூல்நடை. நல்ல நூல்களிற் செந்தமிழை எதிர் பார்ப்பது இயற்கை. அது பொதுமக்கட்குப் புரியாதே எனக் கருதி நடையைத் தாழ்த்தினால், தாழ்த்தப்பட்ட நடைதானும் விரைவில் இன்னும் தாழ்த்தப்படவேண்டிய நிலை ஏற்படும். எனவே, தாழ்ந்து போவதற்கு எல்லை

இராது. பேசுகின்றவாறே எழுதிக் காட்டவேண்டிய உரையாடல் பகுதிகள் நிறைந்த நாடகங்கள், நவீனங்கள், இவையல்லாத புத்தகங்களிற் செந்தமிழ் கைக்கொள்ளப்பட வேண்டும். எளிமையும், இனிமையுங் கூடிய நடை இலக்கணத்துக்கு ஒத்ததாகவும் இருக்குமேல், புகழ்ச்சிக்கு உரியதன்றி இகழ்ச்சிக்கு உரியதாகாது.

செந்தமிழ் என்பது தானாக வளரவேண்டுமே ஒழிய, கட்டுப்படுத்தி இவ்வாறு இருக்கவேண்டும் என்று வற்புறுத்த முடியாதது. அரசியற் செல்வாக்கு, பொருளாதாரச் செல்வாக்கு, சமூகச் செல்வாக்கு, எழுத்தாசிரியர் செல்வாக்கு ஆகிய காரணங்களால் **செந்தமிழ்** காலத்திற்குக் காலம் வேறுபடும் என்பது உறுதி.

1,800 ஆண்டுகட்குமுன் இளங்கோவடிகள் எழுதிய உரைநடை செய்யுள்நடை போன்றது; இக் காலக் கண்கொண்டு நோக்கினால் கடினமானது எனத் தோன்றுவது; மிக நீண்ட வாக்கியங்களால் அமைந்தது. இளங்கோவடிகள் வாழ்த்துக்காதைத் தலைப்பகுதியில் எழுதுகின்றார் :—

"குமரியொடு வட இமயத்து ஒருமொழி வைத்து உலகாண்ட சேரலாதற்குத் திகழொளி ஞாயிற்றுச் சோழன் மகள் ஈன்ற மைந்தன் கொங்கர் செங்களம் வேட்டுக் கங்கைப் பேர்யாற்றுக் கரைபோகிய செங்குட்டுவன் சினஞ்செருக்கி வஞ்சியுள் வந்திருந்த காலை, வடவாரிய மன்னர் ஆங்கோர் மடவரலை மாலை சூட்டி, உடனுறைந்த இருக்கை தன்னில், ஒன்றுமொழி நகையினராய்த், 'தென்றமிழ் நாடு ஆளும் வேந்தர் செருவேட்டுப் புகன்று எழுந்து மின்தவழும் இமயநெற்றியில் விளங்கு விற் புலி கயல்பொறித்த நாள் எம்போலும் முடிமன்னர் ஈங்கில்லைபோலும்' என்ற வார்த்தை அங்கு வாழும் மாதவர் வந்து அறிவுறுத்த

விடத்து, ஆங்கண் உருள்கின்ற மணிவட்டைக் குணில் கொண்டு துரந்ததுபோல் இமயமால்வரைக் கற்கடவுளாம் என்ற வார்த்தை இடந் துரப்ப, ஆரியநாட்டு அரசு ஓட்டி, அவர் முடித்தலை அணங்காகிய பேரிமயக் கற்சுமத்திப் பெயர்ந்துபோந்து, நயந்த கொள்கையிற் கங்கைப்பேர் யாற்றிருந்து நங்கைதன்னை நீர்ப்படுத்தி, வெஞ்சினந்தரு வெம்மை நீங்கி, வஞ்சிமாநகர் புகுந்து, நிலவரசர் நீண்முடி யாற் பலர்தொழு படிமங்காட்டித் தடநகிற் பூசலாட்டி யைக் கடவுள் மங்கலம் செய்த பின்னாள்."

கி. பி. 7 அல்லது 8-ஆம் நூற்றாண்டு வரையிலும் வழங்கிய செந்தமிழ் நடைக்கு எடுத்துக்காட்டாக இறைய னார் களவியலுக்கு நக்கீரர் உரைத்த உரை அமைந்திருக் கிறது. இப்பொழுது கடினமாய்த் தோன்றினும், அக் காலத்தில் இதன் நடை எளிதாய் இருந்திருக்கலாம். இதில் இனிமையும் தெளிவும் காணப்படுகின்றன :—

"தோழி, 'எம்பெருமாட்டி ! நினக்கு இவ்வேறுபாடு எற்றினான் ஆயிற்று' என்னும். என்ற இடத்து " இஃது எனக்குப்பட்டது. இன்னவிடத்து ஒரு ஞான்று நீயும் ஆயங்களும் தழையுங் கண்ணியும் கோடற்கு எண்ணிச் சிறிது நீங்கினாய். யான் நின்று ஒரு மணிச்சுனை கண்டேன். கண்ட அம் மணிச்சுனைதான் ஆம்பலே குவளையே நெய் தலே தாமரையே என்று இப் பூக்களால் மயங்கி மேதக்கது கண்டு வேட்கையான் ஆடுவான் இழிந்தேன் ; இழுக்கிக் குட்டம் புக்கேன். புக்குத் 'தோழியோ' என, நீ அங் ஙனம் கேளாயாயினையாக, ஒரு தோன்றல் தோன்றிவந்து எனது துயர் நீக்குதற்காகத் தன் கை நீட்டினான். நீட்டின விடத்து, மயக்கத்தான் நின் கை எனப்பற்றினேன். பற்ற, வாங்கிக் கரைமேல் நிறீஇ நீங்கினான். நீ அன்று கவலுதி எனச் சொல்லேன் ஆயினேன்."

700 800 ஆண்டுகட்கு முன் வாழ்ந்த பரிமேலழகரது நடை அக் காலத்திற் செந்தமிழ் நடையாக மதிக்கப்பட்டது. கீழே தரப்படும் ஒரு பகுதி இனிமையும் தெளிவும் உடையது; கருத்துக்குப் பொருந்திய சொற்களைப் பெற்றிருக்கிறது:—

"ஈண்டு இன்பம் என்றது ஒரு காலத்து ஒரு பொருளான் ஐம்புலனும் நுகர்தற் சிறப்பு உடைத்தாய காம இன்பத்தினை. இச் சிறப்புப்பற்றி, வடநூலுட் போசராசனும் " சுவை பலவென்று கூறுவார் கூறுக, யாம் கூறுவது இன்பச்சுவை ஒன்றனையுமே " என இதனையே மிகுத்துக் கூறினான். இது புணர்ச்சி, பிரிவு என இருவகைப்படும்."

அறுநூறு ஆண்டுகட்குமுன் வாழ்ந்த அடியார்க்கு நல்லார் உரைநடையும் அக் காலத்தின் செந்தமிழ் நடையாக மதிக்கப்பட்டது. நீளமான வாக்கியங்களோடு எழுதியுள்ளார் எனினும், அவர் நடையில் தெளிவும் இனிமையும் அமைந்துள. ஆயினும், சிற்சில விடத்தே கருத்துக்குப் பொருந்தாத சொற்களும் நடையினிமை காரணமாகவே ஆளப்பட்டுள:—

"அடிகள் என்றது துறத்தலான். அத் துறவின் வரலாறு யாதோவெனின், குமரியொடு வடவிமயத்து ஒரு மொழி வைத்து உலகாண்ட சேரலாதற்குத் திகழொளி ஞாயிற்று ஏழ்பரி நெடுந்தேர்ச் சோழன் தன்மகள் நற்சோணை ஈன்ற மக்கள் இருவருள் முன்னோன் தன்னைப் பின்னர் இயற்றிப் பின்னோன் தன்னையும் பெருநம்பி ஆக என, அன்னவர் தம்மொடு தென்னர் செம்பியர் தன்னடி போற்றத்தமனிய மண்டபத்துச் சிங்கஞ் சுமந்த பொங்கணை மீமிசை உவரித்திரையிற் கவரி இரட்ட வேந்தன் இருந்துழிச் சார்ந்த நிமித்திகன் அடிமுதல் முடிவரை

நெடிதுநோக்கி, "ஈன்றோள் கழியப் பொன்றிகழ் உலகம் சேர்தி நீ" எனச் சேரலற்கு உரைத்து அவன் மைந்தரை நோக்கி, "நந்தாச் செங்கோல் அந்தமில் இன்பத்து அரசாள் உரிமை இளையோற்கு உண்டு" என, உளைவனன்... ......அகலிடப் பாரம் அகல நீக்கி ........அந்தமில் இன்பத்து அரசாள் வேந்தாயினான் என்பது."

இதனால், காலத்திற்குக் காலம் செந்தமிழ் நடை மாறி வந்துளது என்பது அறியப்படும்.

# வடமொழியில் தமிழ்ச் சொற்கள்

"வடமொழியில் தமிழ்ச் சொற்கள்" என்ற தலைப்பைக் கண்டவுடனேயே சிலர் வியக்கலாம். வடமொழியிலிருந்து தமிழ் மொழியில் நிரம்பச் சொற்கள் வந்து வழங்குகின்றன என்பதே பலராலும் பரப்பப் பட்டிருக்கின்ற கருத்தாக இருந்துவருவதே காரணம். ஆயினும், டாக்டர் கால்டுவேலர் நூறு ஆண்டுகளுக்கு முன்னர்த் தமிழிலிருந்து வடமொழிக்குப் பழங்காலத்திலேயே சென்று சேர்ந்துவிட்ட சொற்கள் பல உண்டு என்பதைக் காட்டியுள்ளார். அவர் சொல்லியுள்ளதாவது, எப்பொழுதும் தமிழே வடமொழியினின்று கடன் வாங்கியுள்ளது எனக் கருதுவது தப்பு என்பதும், வடமொழிதானும் தமிழினின்று பண்டைக்காலத்தே கடன் வாங்கத் தயங்கியதில்லை என்பதுமாம். அதைப் போலவே, திராவிட மொழிகளிலிருந்து சமக்கிருதம் பல்வேறு சொற்களைக் கடன் வாங்கியுள்ள செய்தியை டாக்டர் குண்டெர்டு என்பார் விளக்கிக் காட்டியுள்ளார்.

இவற்றிற்கு எதிரே சேனாவரையர் தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்கு எழுதியிருக்கின்ற ஒரு சூத்திரவுரையில் தமிழ்ச் சொற்கள் வடமொழியில் சென்று சேரமாட்டா எனக் கூறியிருப்பதைக் காண்கிறோம். (சொல்லதிகாரம்—எச்சவியல்—சூத்திரம் ஐந்தின் உரை.) இச்

சூத்திரத்தின் உரையில் தமிழ்ச் சொல் வடபாடைக் கண் செல்லாது என்பதும், வடசொல் எல்லாத் தேயத்திற்கும் பொது என்பதும் அவரால் உரைக்கப் பட்டிருக்கின்ற தவறுன கருத்துக்கள். இக் கருத்து அவர் வாழ்ந்த 13-வது நூற்றுண்டினை ஒட்டிய காலத்தில் இருந்த கருத்தாக மாத்திரம் நாம் எடுத்துக் கொள்ளுதல் வேண்டும்.

இக் காலத்திலும், பல தமிழ்ச் சொற்களை வட மொழியினின்று வந்தவையெனக் குறிப்பிடும் தமிழன்பர் களும், தமிழ் அறிஞர்களும் சிலர் இருக்கிறுர்கள். தமிழ் என்பதே திராவிடம் என்ற சொல்லின் திரிபு எனச் சொல் லித் தம்முள் மகிழும் தமிழன்பர்களும், பீழை, யாழ் முத லிய அருந்தமிழ்ச் சொற்களெல்லாம் வடமொழியினின்று தமிழுக்கு வந்தன எனக் கூறி மகிழும் தமிழ் அறிஞர்களும் இருக்கிறுர்கள்.

இக் கட்டுரையின் நோக்கம் தமிழ்ச் சொற்களில் பல பழங் காலத்திலேயே வடமொழிக்குச் சென்று வடமொழி போன்று உருவம் பெற்றுவிட்ட காரணத்தால், பொது வாக வடமொழியிலிருந்து தமிழுக்குப் போந்தவை என மக்களால் பிறழ் உணர்ந்தபடி இருந்து வருவதைக் குறிப் பிடுவதேயாகும். காட்டாக, அகத்தியர் என்ற சொல்லையே வடமொழி அகத்தியம் என்ற சொல்லின் திரிபு என நம் நாட்டில் பலர் நம்பி வருகிறுர்கள். அகத்தியம் என்பது அகத்தி என்ற ஒரு கீரைவகைப் பெயரின் அடிப்படையில் தோன்றியது ஒன்றும். தமிழில் அகத்தி என்பது இருத்தல் போலவே மலையாளத்திலும் அகத்தி என்ற சொல் உண்டு. கன்னடம், துளு ஆகியவற்றுள் அகசே என்றும், தெலுங் கில் அகிசே என்றும் இந்தச் சொல் வழங்குகின்றது. சமஸ் கிருதத்தோடு தொடர்புடைய பிற இந்திய ஐரோப்பிய மொழிகளில் அகஸ்தி என்ற வடிவம் காணப்படாமை

சொல் தமிழினின்று வடமொழிக்குப் போந்திருக்கக் கூடும் என்பதைப் புலப்படுத்தக் கூடியதொரு சான்று.

அகில் என்ற மரச் சொல் வடமொழியிலிருந்து பிராகிருதத்திற்குப் போய், பிராகிருதத்திலிருந்து தமிழுக்கு வந்திருக்கிறது எனச் சிலர் கூறுகிறார்கள். இச் சொல் சமக்கிருதத்திலேயும் பிராகிருதத்திலேயும் மாத்திரம் காணப்படுகிறதே யொழியப் பிற இந்திய-ஐரோப்பிய மொழிக் குடும்பத்தின்கண்ணே காணப்படாமல் இருக்கிறது; சிங்களத்தில் அகில் என்ற சொல் இருக்கிறது. சிங்களமும் தமிழும் பண்டைக் காலத்தில் தொடர்புடைய மொழிகள். தமிழ், மலையாளம் ஆகியவற்றுள் அகில் என்பது காணப்படுகிறது. துளுவில் அகிலு என்ற வடிவம் உண்டு. "குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்" என்பது பட்டினப் பாலையில் வரும் ஓரடி. இவ்வளவு தொன்மையான சான்று இதற்கு இருப்பவும், இது தமிழிலிருந்து வடமொழிக்கும், இந்திய-ஆரிய மொழிகளுக்கும் சென்றதென்று கூறுதிருப்பது பொருந்துவதாகத் தோற்றவில்லை.

அம்பா என்றவுடன் இது வடமொழிச்சொல் என்றும் அம்மா என்பதுதான் தமிழ்ச் சொல் என்றும் சிலர் கருதுகிறார்கள். உண்மையில் தமிழ் அம்மா, அம்மை என்ற வடிவங்கள் தாம் அம்மாள் எனத் திரிந்து, பிறகு வடமொழிக்குச் சென்று அம்பா என்ற வடிவத்தைப் பெற்றிருத்தல் வேண்டும். ஆள் ஈறு திராவிட மொழிகளில் காணப்படுகின்ற பெண்மை விகுதி என்பது யாவரும் அறிந்தது. அச் சொல்தான் அம்பா, அம்பாலா, அம்பாலிகை என்று சமக்கிருதத்திலும் காணப்படுகிறது என்ற கருத்தினை ஆக்ஸ்போர்டு பேராசிரியர் பர்ரோ காட்டியுள்ளார்.

அரவிந்தா என்ற சொல் தமிழிலிருந்து வடமொழிக்குப் போயிருக்கிறது என்பதும் அவர் கருத்து. அரை

விரிந்த என்ற சொல்தான் அரவிந்த என்று மாறியுள்ளது என்பது அவரால் காட்டப்பட்டுள்ளது.

கடக என்ற சொல்லும் தமிழ் 'கட்டு' என்ற சொல் அடியாகப் பிறந்து வளையல் என்ற பொருளிலே வட மொழிக்குப் போயிற்றுப் போலும்! கடகா என்பதற்குத் தக்கவகையில் வடமொழியினர் அடிவேர் சொல்லமாட்டாது இடர்ப்படுவர். கடினம் என்றவுடன் இச்சொல்தானும் வட மொழியெனப் பலர் கருதுகின்றனர்கள். இது கட்டி என்ற தமிழ்ச்சொல் அடியாகப் பிறந்திருத்தல் வேண்டும். கன்னடத்தில் கடுகு என்றும், துளுவில் கட்டி என்றும், தெலுங்கில் கடிதி என்றும் காணப்படுகின்ற வடிவங்கள் சமக்கிருத கடினம் இவற்றின் அடிவேர் வழியாகத் தோற்றியிருத்தல் வேண்டும் என்பதைக் காட்டுகின்றன.

கவடு என்ற தமிழ்ச் சொல் கபார்டா என வடமொழி இருக்கு வேதத்திற் போய் ஏறியிருக்கிறது என்பது பேராசிரியர் பர்ரோ அவர்களது கருத்து. வடமொழி புராதனமான திராவிடச் சொல் ஒன்றைப் பண்டைய வடிவத்தில் இவ்வாறு மாற்றித் திருத்திக்கொண்டிருக்கிறது என்று அவர் கூறியுள்ளார்.

கமலம் என்ற சமக்கிருதச் சொல்தானும் குவளை என்பதன் திரிபுபோன்று தோற்றுகின்றது. தமிழில் குவளை என்பது கன்னடத்தில் குவளெ, கோவல் என்ற வடிவத்திலும், தெலுங்கில் கலவா என்ற வடிவத்திலும் காணப்படுகிறது. இவற்றின் அடியாகத்தான் கமலம் என்பது தாமரையைக் குறிக்கத் தோற்றியிருத்தல் வேண்டும்.

வடமொழி மகாபாரதத்தில் காணப்படும் கலஹ என்றசொல் தமிழ்க் 'கலங்கல்' என்றதன் அடியாகத்தான் பிறந்திருத்தல் கூடும். மலையாளத்தில் கலக்கம், கன்ன

டத்தில் கலக்கு, துளுவில் கலம்புனி முதலான வடிவங்கள் காணப்படுகின்றன. வடமொழியிலேயும் பிராகிருதத்திலேயும் கலகா என்ற சொல் காணப்பட்டாலும், திராவிட அடி வேரிலிருந்துதான் இந்தச் சொல் முதலில் தோற்றியிருத்தல் வேண்டும் என்பது புலப்படும்.

தமிழில் வழங்குகின்ற கலை என்ற சொல் வடமொழியின் திரிபு என எத்தனையோ பேர் சொல்லிவருகிறார்கள். ஆயினும், கல் என்ற அடிப்படையிலிருந்து இச்சொல் பிறந்திருக்கிறது என்பது இன்னும் பலருக்கு நன்றாகத் தெரிந்திலது. தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய திராவிட மொழிகளிலெல்லாம் அறிவது என்ற பொருளைத் தருவதற்குக் 'கல்' என்ற அடிவேரே பயன்படுகிறது. இதனடியாகத்தான் கலை என்ற சொல் தமிழிலே தோற்றியிருத்தல் வேண்டும். இதனை வடமொழியினர் கலா எனத் திரித்து வழங்கலுற்றார்கள். வரலாறு இச்சொல்லின்கண்ணே மறைந்து கிடக்கிறது.

ஐத்ரேய பிராமணத்தில் காணப்படுகின்ற கவசம் என்ற சொல் தமிழிலிருந்து வடமொழிக்குப் போனதொரு சொல் போலக் காணப்படுகிறது. தமிழில் கவர்வழி என்றால் கிளைத்துக் கிடக்கின்ற வழி என்பது பொருள். சிலப்பதிகாரத்திலும் பத்துப் பாட்டிலும் கவர் என்ற இச்சொல்லுக்கு இப்பொருள் உண்மை அறியப்படும். மலையாளத்திலும் கன்னடத்திலும் இச்சொல் வழங்குகின்றது. ஆனால், வடமொழியில் காணப்பட்டு அதனோடு தொடர்புடைய பிற மொழிகளில் காணப்படாமல் இச்சொல் தனித்திருக்கக் காண்கிறோம். அதனால் இது தமிழிலிருந்து வடமொழிக்குப் போனதொன்று என்று கூறுவது பொருத்தமுடையதாகும்.

காகந என்ற வடமொழிச் சொல் தமிழ் 'கா' என்ற

சொல்லின் அடிப்படையில் தோற்றியது ஒன்ருகும். முற் காலத்தில், ஓரெழுத்து ஒரு மொழியாயிருந்த கா என்பது கான் என்று னகரச் சாரியை பெற்றது. அதுவே இன்னுஞ் சிறிது காலங் கழித்து அம் என்ற சாரியையும் பெறத் தலைப்பட்டது. எனவே கானம் என்று ஆயிற்று. இது தான் காநந என வடமொழியில் சென்று வழங்குகின்றது.

கிண்கிணி என்ற சொல் வடமொழி மகாபாரதத்தில் காணப்படுவது தமிழ் 'கிண்' என்ற அடிப்படையில் தோற்றியது ஒன்று. ஒலிக்கின்ற பறைக்குக் கிணை என்றும், பணிக்கு அல்லது தாளத்திற்குக் கிண் என்றும் தமிழில் வழங்கக் காண்கிறோம். கன்னடத்திலும் மலையாளத்திலும் துளுவிலும் கிணி என்றும், கிண்கிணே' என்றும் வழங்கு கின்ற வழக்குகள் உண்டு. அதனுல், திராவிட மொழியின் அடிப்படையி லிருந்துதான் வடமொழிக்கு இச்சொல் போயிருத்தல் கூடும் என்பது ஊகிக்கத்தக்கதொரு செய்தி.

குழல் என்ற தமிழ்ச் சொல் குரால என்று வடமொழி யிற்சென்று வழங்குகின்றது. கூந்தல் என்னும் பொருளைக் குறிக்க மலையாளத்திலும் தமிழிலும், கன்னடத்திலும் தெலுங்கிலும் இதனையொத்த சொற்கள் உண்டு. குழல்—தமிழும் மலையாளமும். குருள்—கன்னடம். குருளு—தெலுங்கு.

தமிழிலுள்ள கிணற்றினைக் குறிக்கும் கூவல் என்ற சொல்தான் வடமொழி இருக்கு வேதத்தில் 'கூப' என வழங்கியுள்ளதெனப் பேராசிரியர் பர்ரோ கண்டறிந்து கூறியிருக்கிறுர். பொதுவாக நம் நாட்டில் கூபம் என்ற வுடன் அது வடமொழிச் சொல் என மக்கள் மதித்து விடு கின்றனர். கூவல் என்ற சொல் மலைபடுகடாத்திலும் சிலப் பதிகாரத்திலும் வந்திருக்கக் காண்கின்றோம். "குடம் புகாக் கூவல்" என்று வந்த சிலப்பதிகார அடியைக் காண்க.

துளுவிலும் குவலா என்ற வழக்கு இருக்கிறது. திருந்தம் பெருத திராவிட மொழிகளில் ஒன்ருகிய துளுவில் குவலு என்ற வடிவம் காணப்படுவதும், வடமொழியை யொத்த இனத்தைச் சார்ந்த வேறு மொழிகளில் அதைப்போன்ற தொரு வடிவம் காணப்படாததும் இச்சொல் திராவிட இனத்திலிருந்து வடமொழிக்குச் சென்றிருப்பதொரு சொல் என்பதை நிலைநாட்டக் கூடிய சான்றுகளாகும்.

தமிழ், மலையாளம், கன்னடம் இவற்றில் வழங்கு கின்ற குயில் என்ற சொல்தான் கோகிலா என வடமொழி மகாபாரதத்தில் வழங்கியுள்ளதென்றும் அறிஞர்கள் கண்டுபிடித்துள்ளார்கள்.

கோட்டை என்ற திராவிட சொல்லிலிருந்துதான் வட மொழி கோடா என்பது எழுந்துள்ளது. தமிழில் கோட்டை என்றும், மலையாளத்தில் கோடா என்றும், கன்னடத்தில் கோடே என்றும், தெலுங்கில் கோட என் றும் ஒத்த வடிவங்கள் வழங்குவதும், வடமொழியோடு தொடர்புடைய மொழிகளில் இவற்றைப் போன்றதொரு வடிவம் வழங்காததும் தக்க சான்றுகள் என்க.

கர்தப என்ற கழுதையைக் குறிக்கும் இருக்கு வேதச் சொல்தானும் திராவிட மொழியின் அடியாக எழுந்ததொன் றென ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். தமிழிலே கழுதை என்பதும், மலையாளத்தில் கழுதா என்பதும், தெலுங்கில் கடித என்பதும், கன்னடத்தில் கத்தே என் பதும் இச்சொல்லுக்கு உரிய வடிவங்கள். தெலுங்கு கடிதெ என்ற சொல்லுக்கு மேலே வடமொழி 'ப' என்ற சாரியை சேர்க்கப்பட்டு முடிவில் கர்தப என்ற முடிவு உண்டாகியிருக்கிறது என்பது காட்டப்படுகின்றது. தமிழி லுள்ள கிடுகு என்ற பண்டைச் சொல்தான் கேடகா என வடமொழி மகாபாரதத்திற் போய் வழங்கியுள்ளது. முல்

லைப் பாட்டு, சிலப்பதிகாரம், புறநானூறு முதலான நூல்களில் காணப்படுகின்ற கிடுகு என்ற சொல் கேடகா என வடமொழியிற் போய்த் திரிந்த பிற்பாடு, மறுபடியும் இன்னொரு வடிவில் தமிழில் வந்து அது வழங்குகின்றது. தமிழ்க் கிடுகு, கேடகம் என்று திரிந்த பிற்பாடு, மறுபடியும் கேடயம் எனத் தமிழில் வந்து வழங்கி வேறொரு சொல்போலக் காட்சியளிக்கிறது. இது எதைப்போல் இருக்கிறதென்றால், பழைய திராவிட 'நாரங்கா' என்ற சொல் அராபிய, பர்சிய மொழிகளில் ஆரன்ஷியோ எனத் திரிந்து ஆங்கிலத்தில் ஆரஞ்சு என ஆகித், திரும்பவும் தமிழில் ஆரஞ்சுப் பழம் என வந்து வழங்குதலைப் போலுள்ளது. ஆங்கிலத்தில் உள்ள பட்ஜட் என்ற சொல்தானும் 'பை' என்ற பொருளைத் தரும் ஒரு பிரெஞ்சுச் சொல்லிலிருந்து முதலில் தோற்றி, ஆங்கிலத்திற்குப் போய்த் திரும்பவும் வேறொரு வடிவத்தில் இப்பொழுது வந்து வழங்குவதைப் போன்றே, கிடுகு என்பதன் வரலாறும் இருக்கிறது.

தமிழிலுள்ள தண்ணுமை என்பதுதான் டிண்டிம என வடமொழியில் வழங்குகின்றது. ஒருவிதமான மத்தளத்தைக் காட்டுகின்ற தண்ணுமை என்ற பழங்காலத் தமிழ்ச் சொல், கன்னடத்திலும் தெலுங்கிலும் துடுமு என்று வழங்குகின்றது. அதுதான் வேறொரு சொல் போல டிண்டிம என்றாகியுள்ளது

வில் என்ற பொருளைக் குறிக்கக் கூடிய சமக்கிருதச் சொல்லாகிய சாப என்பது மகாபாரதத்தில் வழங்கியுள்ளது. எனினும், அது திராவிட அடிவேரிலிருந்து வந்தது என்பது பேராசிரியர் பர்ரோ அவர்களது கருத்து. அதனோடு ஒத்த வடிவம் பிற இந்திய ஐரோப்பிய மொழிகளில் இல்லாமலிருத்தலும், தக்க அடிவேர்ப் பொருள் கூற முடியாதிருத்தலும், அதே நேரத்தில் கன்னடம், தெலுங்கு,

மலையாளம் முதலிய மொழிகளிலிருந்து தக்க அடிவேர்ப் பொருள் சொல்ல இயலுவதும், இச்சொல் பண்டைக் காலத்தில் திராவிடத்திற் பிறந்தது எனக் கூறுதற்கு ஒத்த சான்றுகளாகும்.

கன்னடத்திலும், தெலுங்கிலும் சாசு என்று கூறினல் நீட்டு என்று பொருள். மலையாளத்தில் சாம்பு என்று கூறினல் நீட்டம் என்பது பொருள். எனவே, நீட்டப் படுவதாகிய வில்லுக்கு 'சாபு' என்பது முதற்கண் சொல் லாயிற்று. அது சாபம் எனப் பின் தமிழில் திரிந்தது; சாப என வடமொழியில் வழங்குகின்றது.

தமிழிலுள்ள தாண்டவம் என்ற சொல் சமக்கிருதத்திலிருந்து வந்தது எனப் பலர் தவறுதலாக நினைத்துக் கொண்டிருக்கிருர்கள். பாகவத புராணத்தில் தாண்டவா என்ற சொல் கூத்து என்ற பொருளில் வடமொழியில் வழங்கியுள்ளது உண்மையே யாகும். தாண்டு என்னும் திராவிட அடிவேரிலிருந்துதான் இச் சொல் உண்டாகி யிருத்தல் வேண்டும். மலையாளம், கன்னடம் முதலியவற்றி லும் குதி என்ற பொருளில் தாண்டு என்ற சொல் வழங்கு கிறது. தெலுங்கில் தாடு என்று இதே சொல் காணப் படுகிறது. இதைப்போன்ற அடிவேர்ப் பொருளைக் கூறு தலோ, இதனையொத்த வடிவம் பிற இந்திய-ஐரோப்பிய மொழிகளில் உண்டு என்று காட்டுதலோ வடமொழியின ரால் மாட்டாமையின், இச்சொல் தமிழிலிருந்து வட மொழிக்குப் போனதொன்றே யாகும் என்பது புலப்படும்.

இவை போன்ற பல்வேறு சொற்கள் தமிழிலிருந்து வடமொழியில் ஏறியிருந்தாலும், எடுத்துக் காட்டுவாரற்று இருத்தலாலும், எடுத்துக்காட்டலுறுவாரை ஏளனம் செய் வார் உளராதலாலும் உண்மை வெளிப்படாமல் மாசு படிந்து கிடக்கின்றது. இம்மாசினை நீக்கும் நாள் எந்நாளோ?

# நற்றமிழ்க் காவலர்

"கரந்தைக் கவியரசர்" வேங்கடாசலம் பிள்ளை அவர்களை நற்றமிழ்க் காவலர் எனக் கூறுவது மிகவும் பொருந்தும் என்று கருதுகிறேன். அதற்கு அவர்கள் எழுதி வெளியிட்ட "செந்தமிழ்க் கட்டுரைகள்" என்னும் நூல் சான்று பகரும். அந்நூலின் நான்காவது கட்டுரையாக அமைந்த "தமிழிற் பிறமொழிக் கலப்பு" என்பதில் நல்ல தமிழ்ச் சொற்கள் இருப்பவும் பிறமொழிகளினின்று வரம் பின்றிச் சொற்களைக் கொண்டு வந்து புகுத்துவது தீம் பாலில் நச்சு நீர்க் கலத்தல் போன்றது எனத் தெளிவுபட எடுத்துரைத்துள்ளார். வரம்பில்லாமல் வேற்றுமொழிச் சொற்களை நிரம்ப நிரம்பச் சோம்பேறித்தனமாக நாம் கடன் வாங்கிவிட்டால், தமிழ்மொழி கலப்புமொழி எனச் சொல்லப்படும் ஓர் அல்லல் நிலை வந்தெய்தும் என்பது அவர் கருத்து. அதனுல், "நம் பல்வகைத் திருவும் தாய் மொழியே என்றிருக்கும் தமிழ் மக்களாம் நாம், இம் மொழித் திருவினையும் இழந்து என் செய்வோம்?" எனக் கேட்டுள்ளார்.

பிறமொழிக் கலப்பாகிய வெள்ளத்தைத் தடுக்க வழிகள் இன்ன எனவும் விளம்பியுள்ளார். உண்மைத் தமிழர் ஒவ்வொருவரும் தாம் தாம் பேசுங்காலும் எழுதுங்காலும் தமிழ்ச் சொற்களையே எடுத்தாளுதல் கடமை என்று உறுதி கொள்ளல் வேண்டும் என்றுர். இவ்வாறு தமது வாழ்க்கையில் நடந்தும் காட்டினுர். இவர்போல மறைமலை

யடிகளும், புலவர் தேவநேயப் பாவாணரும் குறிக்கொண்டமை பலர் அறிவர். 1911-ஆம் ஆண்டில் தோற்றுவிக்கப்பட்ட கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் தலையாய பணிகளில் ஒன்று தூய தமிழிற் பேசுவித்தலும் எழுதுவித்தலும் என்பது. அச்சங்கத்தினரால் நாடு முழுதும் நல்ல தமிழ்ச் சொற்கள் பரப்பப்பட்டுள்ளன. அக்கிராசனர் என்ற சொல் போய்த் தலைவர் என்பது பெருவரவிற்றாயிற்று; "பிரேரேபிக்கிறேன்" போய் "முன் மொழிகிறேன்" வந்தது; "ஆதரிக்கிறேன்" போய் "வழி மொழிகிறேன்" வந்தது. "தீர்மானம்" என்பது போய் "முடிவு" வந்தது. பிரசங்கத்திற்கு எதிராகச் சொற்பொழிவும், வாதத்திற்குப் பதிலாகச் சொற்போரும் எழுந்தன. "தமிழவேள்" உமாமகேசுவரனார் இவற்றைப் பரப்புதற்குப் பாடுபட்டார். தமிழறிஞர் பா. வே. மாணிக்க நாயக்கர் இவ்வழியிற் செய்த தொண்டு பெரிது. சங்கத்தின் செயலாளர் ந. கந்தசாமி பிள்ளை அவர்கள் தந்த விருந்துகளில் தமிழ் மணம் கமழ்ந்ததோடன்றி, விருந்து பற்றிய ஏடுகளிலும் தமிழ் மணமே கமழ்ந்தது. அவ்வேடுகளில் "பாயசம்" என்பது "பாற்குழம்பு" எனப் பொறிக்கப்பட்டிருக்கும். "ரசம்" என்பது "மிளகுநீர்" எனப் பொறிக்கப்பட்டிருக்கும். "ததியன்னம்" என்பது "தயிர்ச் சோறு" எனப் பொறிக்கப்பட்டிருக்கும்.

இவ்வாறு எல்லாம் நிகழ்ச்சிகள் நிகழ்தற்கு ஊக்கி வந்த கவியரசர் மறைந்துவிட்ட இந்நாளில் இவற்றை நினையாமல் இருக்கமுடியவில்லை.

மொழி, மக்களுடைய கருத்தைப் புலப்படுத்தற்கு உரிய கருவி என்பதை யாவரும் ஒப்புக்கொள்வர். அதனால், மக்கள் தம் மனம் போனவாறே பேசிக்கொண்டும் எழுதிக்கொண்டும் போகலாம் என்பது கருத்தன்று. நம் மொழிக்கு

உரிய தக்க சொல் இருப்பவும் பிற சொற்களை வழங்கு கிறோம் எனில், அதற்குக் காரணங்கள் இரண்டு உண்டு. முதலாவதாக, சோம்பரால் அங்ஙனம் செய்கிறோம்; பிற மொழியிற் கேட்ட சொற்களை அப்படியே சொல்லிவிடு கிறோம். இரண்டாவதாக, நம் மொழியிற் சொல் இருந்தா லும் பிறமொழிச் சொற்களைக் கையாளுவதால் நாகரிகம் ...ரம்பியவர் என மதிக்கப்படுவோம் என்ற தப்பான எண் ணத்தால் நம் சொற்களை விட்டுப் பிறமொழிச் சொற்களை ஆளுகிறோம். சோறு என்றும், தண்ணீர் என்றும், உணவு என்றும், ஆடை என்றும் நல்ல தமிழ்ச் சொற்கள் இருப்ப வும், சாதம், ஜலம், போஜனம், வஸ்திரம் ஆகிய சமக் கிருதச் சொற்களை வழக்கத்திற்குக் கொண்டு வரவேண் டிய காரணம் என்ன? "போஜனம் ஆயிற்றா? எனக் கேட் பது தமிழ் மரபு" எனக் கூறிய முதியவர் "தமிழ்ப் பொழி லில்" பட்ட பாடு தமிழறிஞர்கள் அறிவர். "எது தமிழ் மரபு?" என்ற தலைப்பில் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் எழுதிய கட்டுரையிற் காண்க.

தலை, அடி, கை, கண், பல் முதலிய நல்ல தமிழ்ச் சொற்கள் இருப்பவும், சிரஸ், பாதம், கரம், நேத்திரம், தந்தம் முதலிய வடமொழிச் சொற்களையோ, ஹெட், புட், ஹாண்டு, ஐ, டூத் முதலிய ஆங்கிலச் சொற்களையோ ஆள வேண்டியது இன்றியமையாததுதானா?

கோவில், பூ, விளக்கு முதலிய நல்ல நல்ல தமிழ்ச் சொற்கள் இருப்பவும், ஆலயம், புஷ்பம், தீபம் என்ற வட மொழிச் சொற்களையே கையாளவேண்டுமென்பது விதியா?

"பால லோசன பாநுவி லோசன
பரம லோசன பக்தச காயமா
கால காலத்ரி சூலக பாலவே
கம்ப சாம்பக டம்பவ னேசனே"

என உள்ள ஒரு தோத்திரப் பகுதி எத்தனை தமிழ் மக்களுக்குப் புரியும்? அல்லது, கீழ்க்காணும் உரைநடைதான் எவ்வளவு தமிழ் மக்களால் விரும்பப்படும்? "கீழ்க்கண்ட காரியங்களை வர்ஜிக்கவும்: அக்நியை வாயால் ஊதி ஜ்வலிக்கச் செய்வது, அசுத்த காஷ்டாதிகளால் சரீரத்தைச் சொரிந்து கொள்ளுதல், பார்யையுடன் சேர்ந்து சாப்பிடுவது, கெட்ட வழியால் தேவாலய க்ருஹாதிகளில் ப்ரவேசித்தல், கட்டில் முதலிய ஆஸநங்களிலிருந்து புஜிப்பது, வ்ருக்ஷத்தில் ஏறுவது, விஷமத்தில் இறங்குவது." (கௌதம தர்ம சாத்திர மொழிபெயர்ப்பு). இவ்வாறு எழுதுவதைச் சிலர் இனிமையாக இருக்கிறது என்பர். ஆயினும், பலர் காதுக்கு வெறுப்பாக இருக்கும் என்பதில் ஐயம் இல்லை.

இதைப்போன்ற நடையை இடைக்காலத்தில் சமணர்கள் கையாண்டனர். எடுத்துக்காட்டாக, வர்த்தமானர் புராணத்தில் உள்ள சீவகன் வரலாற்றிலிருந்து ஒரு பகுதியை நோக்கலாம்: "அவளும், 'ஆதரித்து, கந்தயுக்தி முதலாகிய வித்தைகளை எனக்கு உபதேசிக்க வேண்டும்' என்று பிரார்த்தித்து அப்யஸியாநின்றவிடத்து, மற்றொரு நாள் வித்யாதி தேவதா பூஜா வ்யாஜத்தினால் ஒருத்யானம் அடைந்து ஏகாந்தமாகத் தனது ஸ்வபாரூபத்தைக் காட்டிப் பின்னரும் விச்வாஸர்த்தமாகச் சூர்ண விவாத வ்ருத்தாந்தத்தினையுஞ் சொல்லிக் கரதல ஸ்பர்சன ஸுகம் அநுபவித்த பின், அவளும் லஜ்ஜா ஸ்நேக பரவசையாகி நிற்ப, பின்னும் தனது வ்ருத்த வேஷங் கொண்டு வித்யா தேவதா பூஜை பண்ணிய பின், இந்த வ்ருத்தாந்தத்தினைப் பத்து ஜனங்கள் அறிந்து மிகவும் ப்ரீதர் ஆகி, ஜீவந்தரகுமரனுக்குக் குணமாலையை விவாக விதியாற் கொடுத்தார்."

இவ்வாறு அமைந்த நடையை "மணிப்பிரவாளம்" என்றனர். முத்தும் பவளமும் சேர்ந்தாற்போன்று இனிமை

யாக இந்நடை உளது என்பது அச் சமணர் கருத்து. ஆயினும், வேறு சிலர் தனி முத்துமாலையின் அழகிலும், தனிப் பவளமாலையின் அழகிலும் ஈடுபடுதல் இயல்பே. அதுபோலப் பலர் தனித்தமிழ் நடையிற் பற்றுடையராய் இருத்தல் இழுக்கன்று. அன்றியும், வேறு சிலர் பல முத்துக்களிடையே ஒன்றிரண்டு பவளங்களை எதிரெதிராகக் கட்டி அழகு காண்டலும் ஒக்கும். அதுபோலப் பல தமிழ்ச் சொற்களின் இடையே இன்றியமையாத சில வேறு சொற்களை ஆளுதலும் குற்றமில்லை எனக் கூறலாம். அவ்வாறு ஆளுங்கால், தமிழொலி யியல்புக்கேற்ப அவற்றைத் திரித்துக்கொள்ளுதலே தொன்றுதொட்ட வழக்கம் என்பதும் அறியத் தக்கது.

இவைபோன்ற கருத்துக்களைக் கொண்டவர் கவியரசர் வேங்கடாசலம் பிள்ளை. அதனால்தான், அவரை "நற்றமிழ்க் காவலர்" எனச் சொல்லக் கருதினேன்.

அவரை ஒத்த கருத்துடையவராய் முன்னர் வாழ்ந்து, தமிழ்த்தாய்க்கு அருந்தொண்டாற்றிய "பரிதிமாற் கலைஞர்" என்னும் வி. கோ. சூரியநாராயண சாத்திரியாரை இஞ்ஞான்று நினையாதிருத்தல் இயலாது. அதனால், "வடமொழிக் கலப்பு" என்பது பற்றிப் பரிதிமாற் கலைஞர் எழுதிய கட்டுரை யொன்றிலிருந்து கீழ்வரும் பகுதியைத் தருகின்றேன். சாத்திரியார் அவர்கள் எழுதுவது இது :—

"இந்நிலைமையில் சைனர் எழுந்தனர். அங்ஙனம் எழுந்த சைனர் ஆரியரது ஆசாரங்களுட் பலவற்றை மேற்கொண்டனர்; அஃதன்றியும் வடமொழியின்கண் விசேஷ கௌரவம் உடையவராய், அதனைப் பெரிதும் பயில்வாராயினர். இத்தகைய சைனப் புலவர்கள் தமிழ் மொழியையும் அப்பியசிக்கப் புகுந்து, தமிழின்கண்ணே அளவிறந்த வடசொற்களை ஏற்றினர். அத்துணையோடமை

யாது, 'மணிப்பிரவாளம்' என்றதோர் புதிய பாஷை வகுத்துவிட்டனர். அஃதாவது தென்மொழியும் வடமொழியும் சரிக்குச் சரி கலந்த பாஷையாம். மணியும் பவளமும் கலந்து கோத்ததோர் மாலை காட்சிக்கு இன்பம் பயத்தல் போலத் தமிழும் சமக்கிருதமும் கலந்த பாஷை கேள்விக்கு இன்பம் பயக்கும் என்ற போலியெண்ணமே இத்தகைய ஆபாச பாஷை ஒன்று வகுக்குமாறு தூண்டிற்று. 'ஸ்ரீபுராணம்' என்னும் சைன நூல் முழுதும் மணிப்பிரவாளம் என்னும் இவ் வாபாச நடையில் இயன்றதாமாறு காண்க. இவ்வாறு சைனர் ஒருபுறஞ் செய்துகொண்டு செல்லாநிற்க, மற்றொரு புறத்தில் ஆரியப் புலவர் சிலர் தமிழ்மொழியை அப்யசித்துக்கொண்டு, நீதிமார்க்கத்தையும் சமய சாத்திரத்தையும் தமிழர்க்குப் போதிப்போம் எனப் புகுந்து, தமது கருத்துக்களை எல்லாம் மேற்கூறிய மணிப்பிரவாள பாஷையில் வெளிப்படுத்துரைப்பாராயினர்."

இங்ஙனம் சாத்திரியார் அவர்கள் தமிழ்மொழி வரலாற்றின்கண்ணே பொறித்து வைத்துள்ளார்கள். அவர்கள் கருத்துப்படி மணிப்பிரவாளம் ஆகிய ஆபாச நடையை நீக்கி, நல்ல நடையைப் பழக்கத்திற்குக் கொண்டு வர வேண்டும் என அடிக்கடி கூறியும் எழுதியும் வந்தவர்களுள் தலைசிறந்தவர் வேங்கடாசலப் பிள்ளை அவர்கள்.

பிறமொழிச் சொற்களைத் தவிர்த்தல் என்பதால், பிறமொழியின்கண் வெறுப்புடையோம் என நினைத்தல் ஒவ்வாது; நம் மொழியிடத்து மிக்க காதல் உடையோம் என்பதே கருத்து. பிறமொழிச் சொற்களைக் குறைத்தோ நீக்கியோ எழுதவேண்டும் என்று கூறுவதன் நோக்கம் யாது? தமிழ் நாடோறும் நாடோறும் பிறமொழிக் கலப்பே மிக மிகப் பெற்றுவிட்டால், முடிவில் தமிழ்ச் சொற்கள் அருகிச் சுருங்கிப் பிற சொற்கள் பெருகிப் பல்கிவிடும்.

அதனால், அடுத்த நூற்றாண்டில் தமிழைப் பார்க்கும் ஒரு வன் தமிழ் என ஒரு தனிமொழி இல்லை எனவே கூறத் தலைப்பட்டு விடுவான். தமிழ் உரைநடை வழக்கிலும் பேச்சு வழக்கிலும் தமிழ்ச் சொற்களுக்குப் பதிலாக வட மொழிச் சொற்களை வழங்கி வந்தால், தமிழ்மொழி வட மொழியினின்றே பிறந்தது என்பார் கூற்று நாளடைவில் வலுத்துப்போம். அன்றியும், அடுத்த நூற்றாண்டின் தமிழ் இந்நூற்றாண்டின் தமிழோடும் சங்ககாலத் தமிழோடும் வேறுபட்டு வேறுபட்டுத் தோன்றும். அவ் வேறுபாட்டின் மிகுதியால், இருபத்திரண்டாம் நூற்றாண்டைய தமிழன் இருபதாம் நூற்றாண்டின் நூல்களை அறிந்துகொள்ள மாட்டாதவன் ஆகிவிடுவான்; கம்பனை, இளங்கோவை, திருவள்ளுவரை, பரணரை அறிய முடியாதவன் ஆகிவிடு வான். தொல்காப்பியர் காலந்தொட்டே பிறமொழியின் வருகைக்கு ஓர் எல்லை வகுத்ததால் அன்றோ, தொல்காப் பியமும் திருக்குறளும், பத்துப் பாட்டும் எட்டுத் தொகை யும் இன்னும் தமிழர்க்கு விளங்கலாகா நூல்கள் என்ன மாட்டாத நிலையில் உள்ளன.

> ' செல்வம் புலனே புணர்வு விளையாட்டென
> அல்லல் நீத்த உவகை நான்கே''

இது தொல்காப்பியம்—பழந்தமிழ்தான். ஆயினும், நூறு யிரக் கணக்கான தமிழர் இன்றும் பொருள் உணர்வர். இந்நிலை மாறிவிடும், பிறமொழியின் கலப்பு பல்கிவிடுமா யின். நூற்றாண்டு தோறும் ஆங்கிலம் மாறி மாறி வந்துள் ளமையால் ஆயிரம் ஆண்டுகட்கு முந்திய ஆங்கில இலக்கி யம் இக்காலத்து ஆங்கிலர்க்கு விளங்கவே விளங்காது; அவர்கட்கு அது கிரீக்கு,இலத்தீன் போன்ற பிறமொழிகளை ஒத்ததாகத் தோன்றும். இதைப்போன்ற நிலை தமிழுக்கு வந்து எய்த வேண்டாம் என்பதே விழைவு.

# தாய்மொழி வழியாக உயர்தரக் கல்வி கற்பித்தல்

நம் நாட்டு மக்களுடைய கல்வி நிலை ஆங்கிலேயரது தொடர்பினால் வளர்ச்சி யுற்றதென்றாலும், படித்தவர்க ளெல்லாம் படியாதவர்களுக்குத் தாம் கற்றதை அறிவித்து அவர்களையும் உயர்த்துவார்கள் என்பது எதிர்பார்த்தபடி நிகழவில்லை. இதற்குச் சிறந்த காரணம் படித்தவர்கள் தாம் கற்றதை ஆங்கிலமொழி வாயிலாகக் கற்றிருப்பது. தாம் கற்றதைப் பாமர மக்கள் விளங்கிக் கொள்ளக்கூடிய அவர்கள் மொழியில் சொல்ல மாட்டாமையால், எதிர் பார்த்த பயன் விளையவில்லை. படித்தவர்கள் என்றும், படியாதவர்கள் என்றும் இரண்டு வேறு சாதிபோலப் பிரிவு ஏற்பட்டிருப்பது வருந்தத்தக்கது. இந்நிலையை மாற் றத் தாய்மொழி வாயிலாகப் பாடங்களைக் கற்பிக்கவேண்டு வது அவசியம் என்பதை மறுக்க முடியாது. தாய்மொழி வாயிலாகக் கற்பித்தால் பாடங்கள் நேரே உள்ளத்தோடு ஒட்டுகின்றன என்பது யாவர்க்கும் ஒப்ப முடிந்த உண்மை. வேறொரு மொழி வாயிலாகக் கற்றுக்கொள்வதில் உள்ள கடுமை, காலநீட்டம் ஆகியவை தாய்மொழி வழியாகக் கற் றுக்கொள்வதில் இல்லை. தாய்மொழி வாயிலாக வினாக் களுக்கு விடை அளிப்பதும் எளிது.

ஆனால், ஆங்கிலம் வழியாகவே உயர்தரக் கல்வி கற்பிக்கப்பட வேண்டும் என்பதற்குச் சிலர் காரணம் காட்டுவார்கள். அவற்றை ஆராய்வோம். விஞ்ஞானம் முதலிய கலைகள் அடையும் வளர்ச்சியைக் குறித்தும், மாறுதல்களைக் குறித்தும் ஆங்கிலத்தில் புத்தகங்கள் அடிக்கடி வெளிவருகின்றன. ஆதலால், ஆங்கில வழியே இருந்தால் நல்லது என்பர் சிலர். ஆயினும், இவ்வளர்ச்சியைப் பற்றியும் மாறுதல்களைப்பற்றியும் ஆசிரியர்கள் தாய்மொழி வாயிலாகக் கற்பிக்குங்கால் சொல்லவேண்டும். அன்றியும் கல்லூரிப் பத்திரிகை வெளியீடுகள் மூலம் அம் மாறுதல்கள் அறிவிக்கப்படல் வேண்டும். மேலும், மாணவர் ஆங்கிலத்தை இரண்டாம் மொழியாகவோ மூன்றாம் மொழியாகவோ கற்றிருப்பார். ஆதலால், ஆங்கிலத்தில் வெளியாகும் புத்தகங்களைப் படித்துத் தாய்மொழி வழியாகப்பெற்ற அறிவினை வளர்த்துக்கொள்ளக் கூடும்; வளர்த்துக்கொள்ள வேண்டும்.

இந்திய மொழிகள் இன்னும் நன்றாக வளர்ச்சி அடையவில்லை. ஆதலால், அவை வாயிலாகக் கற்பித்தல் இயலாது என்பது சிலர் கட்சி. இது பொருந்தாது இந்திய மொழிகளை நாம் பயன்படுத்தாமலும், படிப்பிப்பதற்கு உரிய கருவியாக மதிக்காமலும் வைத்திருந்தால் அவை எப்படி வளர்ச்சி அடையும்? அவற்றைப் பயன்படுத்திப் பார்த்தால் அன்றோ அவை வேண்டியவளவு வளரும்?

ஒரு மாகாணத்திலிருந்து மற்றொரு மாகாணத்திற்கு மாணவர் சென்று படிக்கத் தடை உண்டாகும் என்று சிலர் வருந்துவர். மாகாணம் விட்டு மாகாணம் செல்வோர் மற்றொரு மாகாணத்தில் உள்ள மொழியையும் படித்துத் தான் ஆகவேண்டும். படிக்க வேண்டும் என்ற அவா

அவர்க்கு எழுதல் இயல்பு. அதற்காக வருந்த வேண்டா.

பல்வேறு மொழிகளிற் புதிதாகப் புத்தகம் எழுதுதற்குப் பணம் நிரம்பச் செலவாகும் என்பது சிலர் வாதம். இதற்கு அரசாங்கங்கள் அஞ்சக் கூடாது என்பதே அறிஞர்கள் கருத்து.

ஆங்கிலமொழி வாயிலாகக் கற்ருல் உலகத் தொடர்பு இருக்குமென்றும், அதனைத் தாய்மொழியாக உடையோர் இருபது கோடி மக்கள் இருக்கிருர்கள் என்றும், அதனை அரசியல் மொழியாகக் கொண்டோர் தொகை ஐம்பது கோடிக்குக் குறைவன்று என்றும், உலக அறிவினைப் பெறுவதற்கு அதுவே ஏற்ற கருவி என்றும் அறிஞர் சிலர் கருதுவர். ஆங்கிலமொழி என்பது நம் வீட்டிற்கு வெளியேயிருந்து காற்றையும் ஒளியையும் நல்கக்கூடிய சாளரம் என்று வைத்துக் கொண்டாலும், நம் வீட்டின் அடிப்படையான கல், சுண்ணும்பு முதலியவை தமிழாகவே இருத்தல் வேண்டும். 1941-இல் எடுத்த ஆட்டொகைக் கணக்குப்படி, பிரிக்கப்படாத இந்தியாவில் 39 கோடி மக்கள் இருந்தார்கள். அவருள் படித்தவர் 4½ கோடி பேர்; இந்த நாலரைக் கோடியில் ஆங்கிலம் அறிந்தவர் எட்டுப் பேருக்கு ஒருத்தர். மொத்தத்தில், நூறு பேரில் 15 பேருக்கு எழுதப் படிக்கத் தெரியும் என்ருல், அந்தப் பதினைந்து பேரில் இரண்டு பேருக்குத்தான் ஆங்கிலம் எழுதப் படிக்கத் தெரியும். ஆங்கில அரசாட்சி நூற்றைம்பது ஆண்டுகள் இருந்தும், இங்கே நூற்றுக்கு இரண்டு பேருக்குமேல் ஆங்கிலம் எழுதப் படிக்கத் தெரிந்தவர் இல்லை. ஆங்கில மொழியைப் பாமரமக்களும் கற்றுத் தேர்ந்து சிறப்படைவார்கள் என எதிர்பார்ப்பது பொருந்தாது. துணையாக அறியப் பட வேண்டியவற்றை அறியும் பொருட்டுத்தான் ஆங்

கிலத்தை அறவே அகற்முமல் அதனை இரண்டாவது மொழியாக வைக்கவேண்டும் என்பது சொல்லப்படுகிறது.

ஆங்கிலத்திற் கற்போர் கற்க, தாய்மொழி வாயிலாகக் கற்போர் கற்க என விட்டுவிடக் கூடாதா என்பது சிலர் கேள்வி. இப்படி விட்டுவிட்டால், அவசியமில்லாத இரண்டு பிளவுகளை ஏற்படுத்த நாம் உதவி செய்தவர் ஆவோம். அதனுல், ஏதாவது ஒன்றினைத் தேர்ந்தெடுக்க வேண்டுவது இன்றியமையாததாகின்றது.

சமக்கிருதம் இந்திய மொழிகளுக்குத் தாய் என்ற நிலையில் இருப்பதால், அதன் வழியாக இந்தியா முழுதும் பாடங்களை ஏன் கற்பிக்கக்கூடாது எனச் சிலர் ஆர்வம் காரணமாகக் கேட்கிருர்கள். ஆங்கிலம் எழுதப் படிக்கத் தெரிந்தவர் நூற்றுக்கு இரண்டு என்ருல், சமக்கிருதம் எழுதப் படிக்கத் தெரிந்தவர் தொகை நூற்றுக்கு ஒன்றிலே பாதிகூட இராது. சமக்கிருதம் பேசத் தெரிந்தவர் தொகை பின்னங்களில்தான் இருக்கும். அம்மொழி வாயிலாகக் கற்பிக்க வேண்டுமென்ருல், இந்தியாவில் எழுத்தறியாமையை விலை கொடுத்து வாங்குகிருேம் என்பது பொருள். வங்காளம், ஒரியா, மராத்தி, குஜராத்தி, சிந்தி, இந்தி ஆகிய மொழிகள் சமக்கிருத வழியாக வந்தவையாய் இருக்கலாம். ஆனுல், தென்னிந்திய மொழிகளாகிய தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகியவை சமக்கிருதத்தின் வழியாகத் தோன்றிய மொழிகள் அல்ல என்றும், தனிக் குடும்பத்தவை என்றும் பேரறிஞர் கால்டுவேலர் போன்றவர் ஐயமின்றி எழுதிப் போயிருப்பவும், அதனை அறியாது சிலர் மலைவது விந்தையாய் இருக்கிறது. இந்தத் தென்னிந்திய மொழிகள் தனியாக நிற்பவை என்பது டாக்டர் S.K. சாத்தரிஷி, பண்டித ஜவஹர்லால்நேரு, சர் ஆக்பர் ஹைதாரி, சர் கே. ராமுண்ணி மேனன் ஆகிய பேரறிஞர்க்

கும் ஒப்ப முடிந்தது. ஆதலால், சமக்கிருத வழியாகக் கலையறிவினைத் தமிழர்க்குத் தருவோம் என்றல் அடாது.

இனி, இந்தி வாயிலாகப் போதிக்க வேண்டும் என்பார் கூற்றை ஆராய்வோம். பதின்ஞன்கு கோடி மக்கள் இந்தியை அறிவர் ஆதலாலும், இந்தியாவிற்கென ஒரு பொது மொழி இருத்தல் நல்லது ஆதலாலும், தென்னிந்தியாவிலும் எல்லாப் பாடங்களையும் இந்தி வாயிலாகவே கற்பிக்க வேண்டும் என்பர் சிலர். இதுவும் பொருந்தாது. பெரும்பான்மையோர் ஒரு மொழியை அறிவர் என்ற காரணத்தால், அதனை எல்லோர்க்கும் ஒத்த மொழியாக்க வேண்டும் என்று வலியப் புகுத்துதல் மக்களாட்சி முறைக்கு ஒவ்வாது. சிறுபான்மையோருடைய மொழி, கலை, பண்பு இவற்றைப் பாதுகாவாதொழிதல் மக்கள் ஆட்சிக்குப் புறம்பானது. இந்திய மக்கள் ஒரு மாகாணம் விட்டு வேருெரு மாகாணம் போவோர், இந்திய மத்திய அரசாங்கத்தோடு தொடர்பு வைத்துக்கொள்வோர் ஆகியோர்க்குப் பொதுமொழியாக இந்தி இருக்கலாம். ஆனுல், அம்மொழி வழியாகவே எல்லாக் கலைகளையும் கற்பிப்போம் என்ருல், ஆங்கிலம் வழியாகவே கற்பிக்கலாமே என்பேன். ஆங்கிலத்திற் கற்பிக்கக்கூடாது என்பது ஆங்கிலேயரிடம் உள்ள வெறுப்பால் அன்று. இதைப் பற்றி அடிக்கடி காந்தியடிகளும் பண்டித ஜவஹர்லால் நேருவும் சொல்லி உள்ளார்கள். மனத்தில் அழுத்தந் திருத்தமாகப் பதிவதில்லை என்றும், காலம் அதிகம் பிடிக்கிறது என்றும் அன்ருே ஆங்கிலத்தை விலக்க முயலுகிருேம்? அப்படியிருக்க, இந்தியில் கற்பித்தால் நன்ருய்ப் பதியுமா, காலம் அதிகம் பிடிக்காதா என எண்ணிப் பார்க்க வேண்டும். தமிழிலே கற்பித்தால் நேராகப் படுவதுபோல இந்தியிற் கற்பித்தால் இராது என்பது எளிதிற் புலப்படும். இதற்குப்

பலசொற்கள் சொல்லவேண்டா. இந்திய மக்கள் அனே வரும் ஒரு மொழி வழியாகக் கற்பது நல்லது என்ருல், அதைவிட நல்லது உலக மொழியாகிய ஆங்கிலம் வழியே கற்றல். தமிழ்மக்களைப் பொறுத்த அளவில், ஆங்கிலமும் இந்தியும் அவர்களுக்கு ஒரேவிதக் கடுமையுடையனவே. இந்தி நம் தேசமொழி என்ற அன்பு காரணமாக அதன் வழியே படித்தல் நல்லது என்ருல், தமிழ் என் தாய்மொழி என்ற பேரன்பு காரணமாக அதன் வழியே நான் படிப் பேன் எனக் கூறும் தமிழ்மகன் குறைகூறத் தக்கான் அல்லன்.

இந்தியானது வங்காளத்தார், ஒரியர், குஜராத்தியர், மராத்தியர், தமிழர், மலேயாளத்தார், கன்னடத்தார் ஆகியோர்க்குப் பண்பாட்டு மொழி ஆகவே மாட்டாது. பஞ்சாப் பியர், ராஜஸ்தானத்தார், பீஹாரியர், ஐக்கிய மாகாணத் தார் ஆகியோருக்கு இந்தியோ, உருதுவோ பண்பாட்டு மொழியாக இருக்கலாம். அரைகுறை இந்தியில், தப்பான இந்தியில் கலைகளைக் கற்றுக் கொள்வதைவிட எளிய பிழை யில்லாத தமிழிற் கற்றுக்கொள்வது மேலன்ரே? இந்தி யில், பாத் என்ருல் அரிசி; அது ஆண்பால். தால் என்ருல் கீரை; அது பெண்பால். "அரிசி நன்ருகச் சமைக்கப் பட்டிருக்கிறது" என்பதை "பாத் அச்சா பாஹு ஹை" எனச் சொல்ல வேண்டும். "கீரை நன்ருகச் சமைக்கப் பட்டிருக்கிறது" என்பதை "தால் அச்சி பாஹு ஹை" எனச் சொல்ல வேண்டும். ஆண்பால், பெண்பால் என்ப தற்கேற்ப 'அச்சா' 'அச்சி' என்றவாறு "நன்ருக" என்னும் பொருளுடைய சொல் வேறுபட வேண்டும். ஆனல், கடைத்தெரு இந்தியில் "பாத், தால் அச்சா பாஹு ஹை" எனப் பொதுவாகச் சொல்லப்படும். இவ்வழக்கினை மேலே இந்தி வட்டாரங்களிற் பிழை எனவே மதிப்பர்.

நல்ல இந்தியிற் கலையைக் கற்றுக் கொடுப்பது என்றால் கடினமாயிருக்கும் ஆதலால் எளிய (கடைத்தெரு) இந்தியிற் கற்பிப்போம் என்பார் கூற்று எவ்வளவு பொருளற்ற தாய் இருக்கிறது!

இந்தியைத் தென்னிந்திய மக்களும் அறிவார் எனக் கணக்கிற் சேர்த்துக்கொள்வாரும் உண்டு. அவர்கள் இந்தி சினிமாப் படங்கள் தென்னிந்தியாவில் மாதக் கணக்கில் நடைபெறுவதால், அவற்றைப் பார்க்கப் போவோர் இந்தி தெரிந்தவராகவே இருப்பர் என ஊகிக்கிறார்கள். அப் படங்களைப் பார்க்கப் போவோருள் ஏதேனும் பொழுது போக்கிற்காகப் போவோர் தொகையும், நடிப்பு, ஆடல், (புரியாத) இசை, திரைப்பட ஒழுங்கு முதலியவை காரணமாகப் போவோர் தொகையும் மிகுதி என்பதை அவர் அறியார்போலும்!

இந்தி சமக்கிருதத்தோடு தொடர்புடைய மொழி யாதலாலும், தமிழும் அவ்வண்ணமே தொடர்புடைய மொழியாதலாலும் தமிழர்களும் இந்தியை எளிதிற் புரிந்து கொள்வர் என்று சொல்லுவோர் கூற்று எவ்வளவு பொருத்தம் அற்றது என்பதற்கு ஓர் உதாரணம் காண்போம் :—

| இந்தி | தமிழ் |
|---|---|
| யோக் | கூட்டல் |
| மிஸ்ரம் | கலப்பு |

தமிழில் கூறினால் புரிவதைப்போல இந்தியிற் கூறினால், சாதாரண தமிழ்மகனுக்குப் புரியுமா? அவனுக்கு இந்தியும் ஆங்கிலமும் ஒன்றுதான். ஆனால், வங்காளத் தாருக்கோ, மராத்தியருக்கோ, குஜராத்தியாருக்கோ, வேறு

சில வட இந்தியருக்கோ இந்தியிற் சொல்வதும், அவர் மொழியிற் கூறுவதும் ஏறத்தாழ ஒன்ருய் இருக்கும். அதனுல், வட இந்தியருக்கு ஒத்தது தென்னிந்தியருக்கும் ஒக்கும் என்பது பொருந்தவே பொருந்தாது.

இவ்வாறு கூறுகின்றவர்களைத் தேசியத்திற்கு மாறுபட்டவர்கள் எள்பதும் பொருந்தாது. ஸ்விட்சர்லாந்திற் பலமொழி இருந்தும் தேசியத்திற்குக் கேடு இல்லை. பிரிட்டனிலேயே இங்கிலிஷ், வெல்ஷு, கேலிக் மொழிகள் உள. பிரான்ஸ், ஸ்பெயின், சோவியத் ரஷ்யா, சைஞ, மெக்சிகோ, மத்திய தெற்கு அமெரிக்கா சமஸ்தானங்கள், கனடா, தென்னுப்பிரிக்கா, செக்கோஸ்லோவாக்கியா, பெல்ஜியம், ஆப்கானிஸ்தான் ஆகியவை பன்மொழி அரசாங்கங்கள். உலக ஐக்கிய நாட்டமைப்பில் ஒரு மொழி கட்டாயப்படுத்தப்படவில்லை. இங்கிலீஷ், பிரெஞ்சு, ருஷ்ய, சீன, ஸ்பானிஷ் மொழிகள் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்றன. ஒரு மொழியிற்பேசுவோர் பேச்சினை மறுமொழியில் உடனே அறிந்துகொள்ளுவதற்கு உரிய மொழி பெயர்ப்பு வசதிகள் செய்து தரப்பட்டுள்ளன. ஒரு மொழியைக் கட்டாயப்படுத்திஞல், அதற்கு வலியச் சிறப்பினை நல்கினதாகும் என்ற எண்ணத்தால் அங்கே ஒரு மொழியே கட்டாயப்படுத்தப்படவில்லை. இந்தியாவிலும், கலைச்செல்வங்களை இந்தி வழியாகவே நல்குவோம் எனக் கட்டாயப்படுத்துவது பொருந்தாது. தமிழ்நாட்டில், நம் தாய்மொழியாகிய தமிழ் வாயிலாகவே கற்பிக்கவேண்டும்.

இனி, தமிழிற் கலைச் சொற்கள் உண்டாக்குவதைப் பற்றிக் கவனிப்போம். அவரவர் விருப்பம்போல் உண்டாக்கி வெளியிட்டால், நாளடைவில் தக்கவற்றைக் கொண்டு மற்றவற்றைத் தள்ளலாம் எனச் சிலர் கூறுவர். அது தகாது. இம்முறை முடிவு செய்யவேண்டிய காலத்

தைத் தள்ளி வைப்பதாக இருக்குமேயன்றி வேறன்று. இவ்வாறு அவரவர் விருப்பத்திற்கு விடுவதால் மாணவரும், ஆசிரியரும், தேர்வாளரும் தடுமாற்றம் அடைவர். ஆதலால், ஒரு நெறிப் படுத்துவதே உரியதாகும். தாய் மொழியிலேயே கிடைக்கக்கூடிய சொற்கள் இருக்கும்பொழுதும், நம் நாட்டுப் பொருள்களைப்பற்றிப் பேசும்பொழுதும், பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்கக்கூடாது. உதாரணமாக இரும்பு, பொன், வெள்ளி, அணு ஆகியவை நாம் அறியாதன அல்ல. இப்பொருள்களைக் கூற லோஹ, சோணா, சண்டி, ஜௌஹ என்ற இந்துஸ்தானிச் சொற்களையோ, iron, gold, silver, atom என்ற ஆங்கிலச் சொற்களையோ கடன் வாங்குதல் கூடாது.

அறிவியற் கலைகளில் வழங்கும் பல்வேறு தேசச் சொற்கள் எல்லாம் ஒரேவிதமாக இருக்கின்றன எனத் தப்பாக நினைத்தல் கூடாது. உதாரணம் :—

| தமிழ் | ஆங்கிலம் | பிரெஞ்சு | ஜெர்மன் |
|---|---|---|---|
| காலகம் | நைட்ரஜன் | அசோட் | ஸ்டிக்ஸ்டாப் |
| ஈயம் | லெட் | ப்ளோம்ப் | ப்ளை |
| எடை | வெயிட் | பாயிட்ஸ் | கெவிக்கு |

நாம் அறியாத பொருள்கள், பிற தேசங்களிற் கண்டு பிடிக்கப்பட்ட பொருள்கள் ஆகியவற்றின் பெயரை ஆங்கிலத்தில் உள்ளபடியே ஏற்றுக் கொள்ளுதல் தக்கதே.

சோடியம், பொட்டேஷியம் போன்ற இரசாயனப் பண்டங்கள் பெயரையோ, கால்டைட் போன்ற தாதுப் பொருள்களின் பெயரையோ மொழி பெயர்க்கப் பெரு முயற்சிகள் வேண்டா. அவற்றிற்கு உரியனவாகக் கடுந் தமிழிலோ, சமக்கிருத வழியே மக்கட்குப் புரியாத

தமிழிலோ மொழிபெயர்ப்பதைவிட ஆங்கிலச் சொல்லை அப்படியே வைத்துக்கொண்டால், உயர்தரக் கல்வி பெறுகின்ற மாணவர், பிறகு வெளிநாடுகள் செல்லும்பொழுதும், ஆராய்ச்சி செய்யும்பொழுதும் இடர்ப்பட மாட்டார்) கிராம், வோல்டு போன்ற அளக்கும் அலகுகளும் (units. அப்படியே இருக்கலாம். இச்சொற்கள் ஆங்கிலச் சொற்கள் அல்ல; உலகப் பொதுச்சொற்கள் ஆம். குறியீடுகள் பிறவற்றிற்காக நிற்கும் அறிகுறிகளேயன்றி வேறு மொழி ஆகிவிட மாட்டா. ஆனல், பொருள்களின குணங்கள் தன்மை ஆகியவற்றைத் தெரிவிக்குஞ் சொற்களும், செய்முறைகளைத் தெரிவிக்குஞ் சொற்களும் தமிழிலேயே அமைதல் வேண்டும். உதாரணமாக, matter பொருள் என்றும், force விசை என்றும், energy கன அளவு என்றும் மொழி பெயர்த்திடப்படவேண்டும். அவ்வாறே combustion, distillation, radiation, conduction ஆகிய செய்முறைகள் எரிதல், காய்ச்சி வடித்தல், கதிர்விடல், கடத்துதல் என்றவாறு மொழிபெயர்க்கப்பட வேண்டும். கணித குறியீட்டு முறையாகிய sine, dx, Ax முதலியவற்றை மொழிபெயர்க்காது, கணித வகைப் படங்களின் பெயராகிய line, curve, triangle, quadrangle, polygon முதலியவற்றைக் கோடு, வளைவு, முக்கோணம், நாற்கோணம், பலகோணம் என மொழிபெயர்க்க வேண்டும்.

எனவே, நம் தாய்மொழியில் முன்னரே வழக்கில் உள்ளனவாய் இருப்பனவும், ஐயந்திரிபின்றிப் பொதுவாக எல்லோருக்கும் விளங்கக் கூடியனவாய் இருப்பனவும் ஆகிய சொற்களை அப்படியே வைத்துக்கொள்ளல் வேண்டும். அவ்வாறு வைத்துக்கொண்டு, நல்ல புத்தகங்களை வெளிப்படுத்த அறிஞர் முன்வர வேண்டும். ஒவ்வொரு பொருளைப்பற்றியும் உள்ள முக்கியமான புத்தகங்களுள்

தேர்ந்த நல்ல புத்தகத்தை மொழி பெயர்க்குமாறும், பொது மக்கட்கு விளங்கும் மொழியில் எழுதுமாறும் தூண்டுவது அரசாங்கத்தின் கடன். அவ்வழியில் சென்னை அரசாங்கமும் பணியாற்ற முன்வந்திருப்பது பாராட்டத்தக்கது. அதன் குறிக்கோள் நிறைவேறுக. கலைக்களஞ்சிய முயற்சியும் உயர்தரக் கல்வி நிலையங்களுக்கு உரிய புத்தக வெளியீட்டு முயற்சியும் வெற்றி உறுக.

# சொல்லும் பொருளும்

மொழியின் பண்புக்கு ஏற்றவாறு ஒவ்வொரு மொழியிலுஞ் சொற்கள் வழங்கும். அப்படி வழங்குகின்றவை பெருவழக்கு ஆன பிறகு, அவ்வழக்கை ஒட்டி இலக்கணம் வகுக்கப்படும். அதனால், மரபென்றாலும் இலக்கணமென்றாலும் ஒன்றே என்று இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் கூறினார்.

தமிழராய் இருந்தும் பலர் தமிழ் மரபு அறிதல் இல்லை. அவரெல்லாம் அறிந்து கொள்ளவேண்டியது இன்றியமையாதது. 'அவரெல்லாம்' என்று சொன்னேன். அது ஒரு மரபு. 'அவர் எல்லாரும்' என்றுஞ் சொல்லலாம். 'ஆனால் நீங்கள் எல்லாரும்' என்று சொல்வது பிழை. எல்லாரும் என்ற சொல்லிலே இருக்கும் 'ஆர்' படர்க்கையைக் குறிக்கும். நீங்கள் என்பதோ முன்னிலை. அதனால் முன்னிலையைக் காட்டும் நீர் என்பதில் வரும் 'ஈர்' என்பதைச் சேர்த்து, எல்லீரும் என்று சொல்லவேண்டும். ஆனால், நீங்கள் எல்லீரும் என்று சொல்வது சற்றுக் கடினம். எனவே, எளிதான 'நீங்கள் எல்லாம்' என்பதை ஆளலாம் நீங்கள் எல்லாம் வாருங்கள், நாங்கள் எல்லாம் போகிறோம், அவர்கள் எல்லாம் வருவார்கள் என்று பேசுவதுதான் முறை 'எல்லாம்' என்ற சொல் தன்மை, முன்னிலை

படர்க்கை ஆகிய மூன்றிடத்துப் பன்மையிலும் வரும். இது மரபு. அவை எல்லாம் கொடு என்று சொல்லுவதும் மரபு. எனவே, எல்லாம் என்ற சொல் உயர்திணை, அஃறிணை ஆகிய இரு திணைகளிலும் மூன்றிடங்களிலும் வரும் என்பதை அறிந்துகொள்ள வேண்டும். நாங்கள் எல்லாரும் வருகிறோம் என்று சொல்லக் கூடாது: அவர்கள் எல்லாரும் வருக என்று சொல்லலாம். நாங்கள் எல்லாம் வருவோம், நீங்கள் எல்லாம் வாருங்கள், அவர்கள் எல்லாம் வருவார்கள் என்று சொல்லலாம். எல்லாம் என்பது பொதுச் சொல்.

நான் கூறுவது பொய் அன்று; அதுதான் இலக்கணம். 'நான் கூறுவது பொய் அல்ல' என்று நான் சொல்லாததைக் கவனித்தீர்களா? நான் கூறுகின்றவை பொய் அல்ல என்று சொல்லலாம்; நான் கூறுகிறது பொய் அன்று என்றுதான் சொல்ல வேண்டும். "று" அஃறிணை ஒருமையைக் காட்டும் என்றும், "அ" அஃறிணைப் பன்மையைக் காட்டும் என்றும், சிறு வயதிலிருந்தே மக்கள் எல்லாரும் படித்திருக்கிறார்கள். ஆனால், சிலரே 'அது அன்று' 'அவை அல்ல' என்று கூறும் பழக்கம் உடையவராக இருக்கின்றார்கள் நீங்கள் கூறுவது சரி அல்ல என்று சொல்லக் கூடாது. நீங்கள் கூறுவது சரி அன்று எனல் வேண்டும். அவை நல்ல பாட்டுக்கள் அல்ல, இது நல்ல புத்தகம் அன்று என்றவாறு சொல்லவேண்டும்.

இதைப்போலவே, அவன் செல்வன் அல்லன், அவள் ஏழை அல்லள், அவர் பகைவர் அல்லர் என்று சொல்ல வேண்டும். அன் என்பது அவன் என்பதில் வருவதால் அன் என்பது அல்லன் என்பதிலும் வரவேண்டும். அள் என்பது அவள் என்பதில் வருவதால், அள் என்பதே அல்லள் என்பதிலும் வரவேண்டும். அர் என்பது அவர் என்

பதிலும் வரவேண்டும். அர் என்பது அவர் என்பதில் வருவதால் அர் என்பதே அல்லர் என்பதிலும் வரவேண்டும்.

"அன்" ஆண்பால் ஒருமையைக் காட்டும். 'அ' என்பதே அஃறிணைப் பன்மையைக் காட்டும். அப்படியிருக்கவும், அவன் நல்லவன் அல்ல என்று சொல்லுவது எப்படிப் பொருந்தும்? அவன் நல்லவன் அல்லன் என்றே சொல்ல வேண்டும். அவள் ஏழை அல்ல என்று சொல்லலாமா? சொல்லக்கூடாது. அவள் ஏழை அல்லள் என்பதே மரபு. 'அவர் தீயோர் அல்ல' என்று கூறலாமா? கூறக் கூடாது. ஏன்? தீயோர் அல்ல என்றால், 'தீயோர் அல்லாத பொருள்கள்' என்று பொருள்பட்டுவிடும். தீயோர் அல்லாத மண்ணாங்கட்டிகள் என்று சொல்வதுபோல இருக்கும்; மக்களை மண்ணாங்கட்டிகளாக வைத்துப் பேசுவது நல்லதா? அதனால்தான், அவர்பகைவர் அல்லர், அவர் தீயோர் அல்லர், அவர் புதியவர் அல்லர்; அவர் என் மாமனார் அல்லர் என்றவாறு சொல்லவேண்டும் என்பது. அது நல்லது, அவை நல்லவை, அவன் நல்லவன், அவள் நல்லவள், அவர் நல்லவர் என்று கூறுவதைப்போல் அது அன்று, அவை அல்ல, அவன் அல்லன், அவள் அல்லள், அவர் அல்லர் என்று கூறுதற்கும் எழுதுதற்கும் பழக்கம் செய்து கொள்ள வேண்டும்.

'ஓடு' என்ற சொல்லைப் பற்றி ஒரு மரபு உண்டு. ஒரே வினையைச் செய்வதாக இரண்டு பேரைப் பற்றிப் பேசும்போது, உயர்ந்தவரை முன்னால் சொல்லிப் பிறகு 'ஓடு' என்பதைச் சேர்க்கவேண்டும். அரசரோடு அமைச்சர் வந்தார் என்பது முறை. தலைவரோடு சாரணர் வந்தனர் என்பது இலக்கணம். ஆசிரியரோடு மாணவர் போனார் என்பது மரபு. என்னோடு என் மாணவன் வந்தான் என்று ஆசிரியர் சொல்லலாம். என்னோடு என் ஆசிரியர் வந்தார்

என்று கூறுவது மரபுக்கு மாறுபட்டது. ஆனால், மாணாக்கன் ஆசிரியனைவிட அறிவினாலும் உயர்ந்தவனாய் இருந்தால், என்னோடு ஆசிரியர் வந்தார் என்பது குற்றம் ஆகாது. என்னோடு என் மனைவி வந்திருக்கிறாள் என்று சொல்லுவது முறை. ஆனால், ஒருவருடைய மனைவி ஓரிடத்தில் பாடுதற்கோ பேசுதற்கோ போயிருக்கும்போது, 'மனைவியொடு நான் வந்திருக்கிறேன்' என்று கூறுவதுதான் பொருத்தம்; அப்பொழுது மனைவிக்குத்தான் உயர்வு. ஆதலினாலே, இரண்டுபேரில் எவர்தானும் பேசவோ பாடவோ போகவில்லை என்றால், ஓரிடத்தைப் பார்ப்பதற்கு இருவரும் சென்றிருந்தால், நானும் என் மனைவியும் வந்திருக்கிறோம் என்று சொல்லலாம்; என்னோடு என் மனைவி வந்திருக்கிறாள் என்று சொல்லவேண்டிய நிலை இல்லை. எனவே, 'ஒடு' என்பது ஒரு வினை செய்வாரைக் கூறுமிடத்து உயர்வுடையாரோடு சேர்த்துக் கூறப்பட வேண்டும் என்பதை அறிதல் வேண்டும்.

வழக்கு என்பது பெரியோரால் கையாளப்பட்டு வருவதொன்று. எப்பொருளை எவ்வாறு உயர்ந்தோர் சொன்னார்களோ, அப்பொருளை அவ்வாறு வழங்குதல் வழக்கு ஆகும். இவ்வழக்கு வலுத்துவிட்டால் இலக்கணமாகி விடும். இவ்வாறு வலிவு பெற்ற வழக்குகளே மரபு எனப்படும். ஒருவன், ஒருத்தி என்பது ஒரு வழக்கு. ஒருவள் என்பது வழக்கு அன்று.

ஒருத்தி என்பது ஒரு வழக்கு என்றேன்; ஓர் வழக்கு என்று சொல்லவில்லை. ஒரு, ஓர் இரண்டும் ஒரு பொருளையே பெற்றிருந்தாலும், 'ஒரு' சில இடத்திலும், 'ஓர்' சில இடத்திலும்தான் வரும். உயிரெழுத்திலே தொடங்கும் சொற்களுக்கு முன்னால் ஓர் என்றே சொல்லவேண்டும். ஓர் ஆயிரம், ஓரிரண்டு, ஓருதவி, ஓர் ஏணி எனச் சொல்ல

வேண்டும். ஒரு ஆடை, ஒரு இல்லம்; ஒரு உடல், ஒரு ஏற்றம் எனச் சொல்லக்கூடாது. ஒரு கடை, ஒரு சாண், ஒரு பதவி, ஒரு விஞ என்றவாறு கூறுதல் வேண்டும். மெய்யெழுத்தில் தொடங்கும் சொற்கள் முன்னுல் 'ஒரு' வரவேண்டும். இது ஒரு மரபு. இஃது ஓர் இலக்கணம்.

பல பேர் 'அவன் அதை உடைத்தாயிருக்கிருன்' என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். அது தவறு. அவன் அதை உடையவனுய் இருக்கிருன் என்று சொல்லலாம். ஆனல், அவன் அதைப் பெற்றிருக்கிருன் என்பதே தக்க வழக்கு. 'உடைத்தா யிருக்கிருன்' தப்பாவதெப்படி? உடைத்து என்ருல் உடையது என்று பொருள். உடையது என்பது அஃறிணை. உயர்திணையாகிய மனிதனைப்பற்றிப் பேசுங்காலை, அஃறிணை வாய்பாட்டாற் கூறுவது தக்கதா? அதனுல்தான், அவன் புத்தகத்தை உடையவனுய் இருக்கிருன் என்னவேண்டும் என்பது. புத்தகத்தை உடைத்தா யிருக்கிருன் என்று சொல்லக்கூடாது. புத்தகத்தைப் பெற்றிருக்கிருன் என்பது மிகவும் நல்ல வழக்கு.

சினம் என்பதற்கும் சீற்றம் என்பதற்கும் சிறிதளவு வேறுபாடு உண்டு. சினம் அதிகமாவதே சீற்றம். "நான் தூங்கிக்கொண்டிருந்தேன்; என்னை எழுப்பிவிட்டான். அவன்மீது எனக்குச் சினம் உண்டாயிற்று" என்று சொல்லலாம். கும்பகர்ணன் சொல்வதாய் இருந்தால், தூங்கிக்கொண்டிருந்த என்னை எழுப்பி விட்டவன்மாட்டு நான் சீற்றங் கொண்டேன் என்று சொல்வான். சீறு என்பதிலிருந்து சீற்றம் வருகிறது. அச் சொல்லால் மிக்க கோபத்தை, பிறரை அழிக்கக் கருதுஞ் சினத்தைக் குறிப்பிடலாம். செங்குட்டுவன் வடநாட்டு மன்னரை அழிக்க முற்பட்டுப் போகும்போது சீற்றம் கொண்டு இச் சேனை செல்வது என்று கூறினதாகச் சிலப்பதிகாரத்திற் காணப்

படுகிறது. எனவே, கடுஞ் சினத்தைத்தான் சீற்றம் என்னல் வேண்டும்.

எழில், அழகு இரண்டும் ஒன்றல்ல. எழில் என்னுஞ் சொல் அழகினை உட்படுத்தும்; ஆனல் அழகு என்று சொல்ல வேண்டிய இடங்களில் எல்லாம் எழில் என்று சொல்லிவிடக் கூடாது. அழகாயிருக்கும் இந்த உறுப்புக்கள் மேன்மேலும் அழகு பெறும் நிலையில் இருக்கின்றன என்று சொல்லுமிடத்தில்தான் எழிலை வழங்க வேண்டும். பதினைந்து அல்லது இருபது வயதுடைய மடந்தையரின் அழகிய தோளைப்பற்றிப் பேசும்போது எழிலுடைத் தோள் என்று சொல்லலாம். ஐம்பது வயதுடைப் பெண்டிருடைய தோள் அழகாயிருந்தாலும் எழிலுடையதாகச் சொல்லக்கூடாது. எழில் என்ற சொல்லுக்கும் எழுச்சி என்பதற்கும் தொடர்பு உண்டு. எழுகின்ற அழகு, வளர்கின்ற அழகு ஆகியதே எழில் எனப்படும். ஆதலால் படத்திலோ, கல்லிலோ, செம்பிலோ காணப்படும் உருவத்தைப் பார்த்து அது எழிலுடையது என்று கூறக் கூடாது. அந்தச் சித்திரம் அழகாய் இருக்கிறது. என்று சொல்லலாம். அந்தக் குழந்தையின் கண்கள் எழிலுடையன என்று சொல்லலாம். எனவே எழில் என்பதை வளரும் அழகு என்ற பொருளிலே வழங்க வேண்டும்.

இனி, காமம் காதல் என்ற சொற்களுக்குள் இக்காலத்திற் சிறிது வேறுபாடு ஏற்பட்டுவிட்டது. பழங்காலத்தில் காமம் என்பதைக் குற்றமற்ற காதலாகத்தான் மதித்தார்கள். இக்காலத்திலோ தீயதொன்றே, ஒவ்வாத தொன்றே காமம் எனப்படும். மணமாகாத ஒருவன் மணமாகாத ஒருத்தியைக் காதலிக்கலாம். மணமானவன் மற்றொருத்தியை விரும்புவானுயின், அவனைக் காமி என்று சொல்லவேண்டுமே ஒழியக் காதலன் என்று சொல்லக்

கூடாது. காதல் என்பது விருப்பம்; காமம் என்பது அளவு கடந்த பொருத்தமற்ற வேட்கை. நான் மனைவியைக் காமிக்கிறேன் என்று முற்காலத்தில் சொல்லுவது பிழையன்று. அப்பொழுது காதலிக்கிறேன் என்பதுதான் பொருள். அக்காலத்தில், குற்றமுடைய காதலை ஒவ்வாக் காமம், பொருந்தாக் காமம், கழிகாமம், பெருந்திணைக் காமம் என்றவாறு சொன்னார்கள். இப்போது பொருந்தாக் காதலைக் காமம் என்றாலே போதும்.

சிலர் சோறுங் கறியுந் தின்றேன் என்கிறார்கள். சோற்றை உண்டேன், கறியைத் தின்றேன் என்பதே வழக்கு. இரண்டையுஞ் சேர்த்துச் சொல்ல விரும்பினால், சோறுங் கறியும் மிசைந்தேன் எனல் வேண்டும். மிசை, அயில் என்பன பொதுவினைச் சொற்கள். பால் குடித்தேன் என்னலாம். பால் அயின்றேன் என்றுஞ் சொல்லலாம். சோற்றை உண்டேன், கொழுக்கட்டையைத் தின்றேன், தேனை நக்கினேன், நீரைப் பருகினேன் என்று சொல்ல வேண்டியதை, ஒரே பொது வினைச் சொல்லால் சொல்லலாம். எப்படி? சோற்றையும் மோதகத்தையும், தேனையும் நீரையும் அயின்றேன் என்று சொல்லலாம்; மிசைந்தேன் என்றும் சொல்லலாம். இந்த வழக்கினைப் பலர் கைவிட்டு வருகிறார்கள். சொல்லும் பொருளும் கூர்ந்து பார்த்து எழுதுபவர்கள் இவ்வழக்கினைப் பேணுதல் தக்கது.

குழலை ஊதினார், மத்தளத்தைக் கொட்டினார், வீணையை மீட்டினார் என்பதே வழக்கு. இவற்றையெல்லாஞ் சேர்த்துச் சொல்லவேண்டுமானால், குழலையும் மிருதங்கத்தையும் வீணையையும் வாசித்தார்கள் என்று சொல்கிறோம். 'வாசித்தார்' என்ற பொது வினைச்சொல் இப்பொழுது வழக்கிற்கு வந்துவிட்டது. 'வாசித்தல்' என்பது

பதுஇயம்புதல் என்ற பொதுச் சொல்லின் இடத்தை எடுத்துக்கொண்டுவிட்டது. குழலும் யாழும் முழவும் இயம்பினர் என்று கூறலாம். குழலூதினர், குழலியம்பினர் என்னலாம். யாழ் மீட்டினர், யாழியம்பினர் என்று சொல்லலாம். முழவு கொட்டினர், முழவு இயம்பினர் என்னலாம்.

## II

போர்க் காலத்தில் தோன்றிய புதுச் சொற்களில் 'பறக்குங் குண்டு' என்பது ஒன்று. இதனையே 'ஆளில்லா விமானம்' என்பாரும் உண்டு. 'பஞ்சப்படி' என்பது பெரு வழக்காக வழங்குகிறது. Dearness Allowance என்பதை எப்படியோ இப்படி மொழி பெயர்த்துவிட்டனர். ஆயினும் அதனை இனி 'அருமைப்பாட்டுப் படி' என மாற்றப்போவதில்லை. 'பஞ்சப்படி' என்னும் புதுச் சொல் போர் நமக்குக் கொடுத்த கொடை. அச்சுநாடு, நேசநாடு, செஞ்சட்டை இவை Axis, Allies, Red Shirts என்றவற்றின் நேர் மொழி பெயர்ப்பான புதுச் சொற்கள். விஷப்புகை, முகமூடி, இருட்டடிப்பு ஆகியவை Poison gas, Gas Mask, Black-out ஆகியவற்றின் மொழிபெயர்ப்பு. தேசியப் போர் முன்னணி, சின்ன சேமிப்புத் திட்டம் முதலியவை இப் போரினால் நமக்குக் கிடைத்த பேறுகள், இவையெல்லாம் ஆங்கிலச் சொற்கள் தமிழிலே பெயர்க்கப் பட்டமையால் தோன்றிய புதுச் சொற்கள்.

இங்ஙனமே, அரசியலில் சில புதுச் சொற்கள் தோன்றியுள. பாகிஸ்தானம், திராவிட ஸ்தானம், ஹிந்துஸ்தானம், சமஷ்டி, குடியேற்ற நாட்டு அந்தஸ்து முதலியவை இவ் வகையைச் சேர்ந்தவை.

சமுதாயத் துறையில் Scout என்பது சாரணர் என்றும், Exploitation என்பது சுரண்டல் என்றும் வழங்குகின்றன.

இவையன்றி ஆங்கிலத்திலிருந்து நேரே சேர்மன், முனிசிபாலிட்டி, கலெக்டர், போலீஸ், ரயில், கோர்ட்டு, ஜட்ஜு, மேயர், கமிஷனர், மோட்டார், சைகிள், போட்டோ முதலான பல்வேறு சொற்கள் வந்து வழங்குகின்றன. இவற்றைத் தமிழில் மொழி பெயர்ப்பதில் சோம்பல் உள்ளவர்கள் கேட்ட வடிவிலேயே பெரும்பாலும் வழங்கி வருகிறார்கள். இவற்றைத் தமிழ் மொழியில் ஆக்கமுடியாது என்பாரைக் காணின், கவிஞர் பாரதியார் போன்றார் 'தாயைக் கொன்றிடல் போன்று, இவ்வார்த்தை சொல்லவேண்டா' என்பர். முனிசிபாலிட்டி என்பதை நகராண்மைக் கழகம் என்பது குற்றமா? சேர்மன் தலைவர்தாமே? போலீஸ்மென் நகர்க் காவலர், ஊர்க் காவலர்தாமே? நீதிபதி, நீதிமன்றம் என்று எழுதுவதை விடுத்து ஜட்ஜு, கோர்ட்டு என எழுதத்தான் வேண்டுமோ? ஒருகால் பேசும்பொழுது வேண்டுமானால் சொற்களை ஆங்கில வடிவிலே தமிழில் வழங்கி விடலாம் ஆனால், எழுதும்பொழுது நேரம் இருப்பதால், பேசுவது போலவே எழுத்திலும் ஆங்கிலச் சொற்களை மிகுதியாகக் கலந்து எழுதுதல் தாய் மொழிக்கு இழைக்கும் பிழை என்க. ஒருவன் கோர்ட்டு, போலீஸ் என்றே எழுதிக்கொண்டு போவானால் தமிழ்ச் சொற்களாகிய முறைமன்றம், ஊர்க் காவல் ஆகியவை மறைந்து போய்விடும்.

இவ்வாறு கூறுவதால், ஆங்கிலச் சொற்களைத் தமிழினின்று அறவே அகற்ற வேண்டுமென்று கூறுவதாக நினைக்கவேண்டா. இன்றியமையாத இடங்களில், வழக்குப் பயிற்சி அதிகமாகிவிட்ட சொற்களை ஆளுவது குற்றம் ஆகாது. உதாரணமாக மோட்டார், ரயில், சைக்கிள், பேனா, பாங்கி ஆகிய சொற்களை அப்படியே ஆளுவதாற் பெரிய குற்றம் வாராது. அவை தமிழேபோல் அமைந்து

தமிழ் மொழியிலே இக் காலத்திற் சேர்ந்து கலந்துவிட்டன. அவற்றைக் தானியக்கி, பொறியியக்கி, ஈருருளி, மை எழுதுகோல், பண்டாரம் முதலிய சொற்களைக் கொண்டு அப்புறப்படுத்த முயலுவது கடினமாகும். இன்னும், ஈரங்கி என்பது Hearing என்பதின் திரிபு எனச் சிலரே அறிவர். உயில் என்பது ஆங்கில Will என்பதன் திரிபானாலும், விளாந்தர் என்பது Lantern என்பதன் திரிபானாலும் தமிழொடு தமிழ்போல் மயங்கி இணைந்துவிட்டன. காங்கிரஸ் என்பது லத்தீனிலிருந்து ஆங்கில வழியாக வந்த சொல் என்று எவராவது சிந்தித்திருக்கிறாரா? இந்தியாவுக்கே உரிய சொல்போல மதித்து ஆளுகின்றனர். இச் சொற்களை இனி நாட்டிலிருந்து அகற்றுதல் எளிதான செயலன்று.

சொற்களைப் பண்டைக்காலத்திலே புதியனவாகப் படைத்தார்கள் என்று சொல்லக்கூடும். ஆனால், நாம் இக் காலத்தில் சொற்களை அந்த முறையில் படைப்பதில்லை. நாம் செய்வதெல்லாம், முன்னரே அறிந்துள்ள சொற்களின் கூறுகளை மாற்றியும், திருத்தியும், புதுக்கியும் அமைக்கிறோம் என்பதே. எனவே, புதுச்சொற்கள் இக் காலத்தில் படைக்கப்படுதல் இல்லை; அமைக்கப்படுகின்றன. புல்வாய் என்பது மானின் பெயர். புல் என்ற சொல்லையும் வாய் என்ற சொல்லையும் சேர்த்து, புல்லை வாயின்கண் உடையதாகிய விலங்கு எனக் கருதிப் 'புல்வாய்' என்கிறோம். ஆயினும், புல்வாய் என்ற நிலையில் புல், வாய் என்ற இரு வேறு பொருள்களைப் பற்றிய எண்ணமே உண்டாவதில்லை; இரண்டு சொற்களும் பிளவுபடாமல் நின்று சேர்ந்து ஒலித்து, 'மான்' என்னும் ஒரு பொருளையே சுட்டுகின்றன. இவ்வாறுதான் முன்னரேயுள்ள சொற்கள், சொற்களின் கூறுகளாகிய இடைநிலைகள், விகுதிகள் இவற்

றைக் கொண்டு மொழிகள் புதுச் சொற்கள் அமைத்துக் கொள்கின்றன. அவ் வகையில்தான், தமிழ் மொழியும் தன் விகுதி முதலானவற்றை வெவ்வேறு புதுச் சொல்லுண் டாக்கப் பயன்படுத்திக் கொள்கிறது. உதாரணமாக, புரட்சி, புரட்டு, உருட்டு, உருளை முதலான சொற்களை நோக்குக.

பழஞ் சொற்கள் மெலிந்து தேய்ந்து உரமின்றிப் போகும் தறுவாயில் அவற்றிற்குப் பதில் புதுச் சொற்கள் தோன்றுகின்றன. அப்படித் தோன்றும் புதுச்சொற்கள் பண்டை வடிவின் திரிபுகளாகப் பெரும்பாலும் இருத்தல் இயல்பே. இவ்வழியே ஓரெழுத்தொரு மொழிகள் வேறு எழுத்துப் பெருக்கால், வாயினுல் உச்சரிக்கக்காணுது வழக்கு வீழ்ந்து போகின்றன. வழக்கில் இருக்கவேண்டு மாறுல் ஏதாவது எழுத்துச் சாரியை சேர்த்து வழங்க வேண்டும். அவ்வாறு பசுவைக் குறிக்கும் ஆ, விலங்கைக் குறிக்கும் மா, அரசனைக் குறிக்கும் கோ என்னும் சொற்கள் ஆன், மான், கோன் எனப் புதுச்சொற்களாக மாறினதால்தான் இன்றும் வழங்குகின்றன. அல்லாக்கால், இடபம் என்னும் பொருளில் வரும்சே, அம்பினைக் குறிக் கும் ஏ, கோழையைக் குறிக்கும் ஐ முதலிய சொற்கள் வழக்கற்றுப் போயினவாறே போல, ஆ, மா, கோ, என்பனவும் வழக்கினின்று வீழ்ந்திருக்கும்.

நாள் ஏற ஏற, ஒரு மொழி குறித்த பொருளைப் பற்றிய அறிவு வளர்தலுண்டு. அதனுலன்றே, நிறம் ஐந்து என்று நினைத்துப் பச்சை, சிகப்பு, வெள்ளை, நீலம், மஞ் சள் என்ற அளவிலே நின்றவர்கள் கிச்சிலி ஊதா, அவுரி என்று நிறப் பெயர் குறிக்கும் சொற்களைப் புதுவதாக உண்டாக்கிக் கொண்டார்கள். ஆனுலும்,மூக்கினுல் முகரும் மணத்திற்கு மாத்திரம் பல்வேறு பெயரைப் புதுவதாக

ஆக்கிக்கொள்ள மனிதன் இன்னும் அறிந்தான் இல்லை. 'பூ நாற்றம்' என்றும் 'புலால் நாற்றம்' என்றும் நறு நாற்றத்தையும் மற்ற நாற்றத்தையும் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னால் வேறுபடுத்திக் கூறிய தமிழன் இன்னும் அதற்கு மேற் கடந்துபோய் வெவ்வேறு மணத்திற்கு வெவ்வேறு சொல் அமைக்கவில்லை. இதில் வாழைப்பழ வாசனை, மாம்பழ மணம், தேன் வாசனை, சந்தன வாசனை, மல்லிகை மணம், மழை வாசனை வீசுகிறது என்கிறானே தவிர, வேறு பிரித்துரைக்கும் சொற்களை இன்னும் அமைத்துக்கொள்ள வில்லை. இது தமிழனுக்கு மாத்திரம் உள்ள குறை அன்று, உலகினர்க்கே ஒத்த குறை. கண்ணாற் காணும் நிறத்தை விட, காதினாற்கேட்கும் ஒலியினைவிட, மூக்கினால் முகரும் மணம் கணக்கில்லாதவகை ஆனதால்தான் தனிப் பெயர்கள் அமைக்கப்படவில்லை போலும்!

நாம் நம்முடைய மூதாதையார் போன்று பொருளுக் கேற்பப் புதுச்சொல் படைக்கும் திறமை பெற்றிருக்க வில்லை என்பது பொருந்தாது. நமக்கும் அத்திறமை உண்டு. எனினும், அவர்களுக்கு இருந்த அவசியம் நமக்கு இல்லை யாதலாலும், அவர் சென்ற வழியே போய் அவராக்கிய வற்றிலிருந்தே அமைத்துக்கொள்ள இயலுகின்றமை யாலும், நாம் புதுவதாகச் சொற்களைப் படைக்காமல், அமைக்கின்றோம்.

## III

"ஐயர்", "பிள்ளை" முதலான சில சொற்களின் வரலாறு இனி ஆராயப்படும். உரியியலில் (சூத். 89) "ஐ வியப் பாகும்" என்றார் தொல்காப்பியர். பெருமை அல்லது தலைமை காரணமாக வியப்புத் தோன்றும் என்பது தொல் காப்பிய மெய்ப்பாட்டியல் "மருட்கை" பற்றிய சூத்திரத்

தால் (7) ("புதுமை பெருமை சிறுமை யாக்கமோடு மதிமை சாலா மருட்கை நான்கே") பெறப்படும். ஆதலின் வியப்பினை யுணர்த்திய "ஐ" என்னுஞ் சொல் தலைமையை யும் உணர்த்தும் ஆற்றல் பெறுவதாயிற்று. "என்னை முன் னில்லன்மின் தெவ்விர்," எனத் திருக்குறளிலும், "என்னை புற்கையுண்டும் பெருந்தோளன்னே" எனப் புறநானூற்றி லும் வருகின்ற இடங்களில் "ஐ" என்பது தலைவன் என் னும் பொருளை உடையது. ஒரு குடும்பத்தின் தலைவன் தந் தையாக இருந்த காரணத்தால் தந்தையும் ஐயனெனப்பட் டனன். ஐயன் என்பதில் அன் என்பது ஆண்பால் உணர்த் தும் விகுதியென்பது நாம் அறிந்தது. எனவே, இச்சொல் லின் தாது "ஐ" என்பதாகும். அத்தாதின் அடியாகவே "ஐயை" என்னும் பெண்பாற் சொல்லையும், "ஐயர்" என் னும் பலர்பாற் சொல்லையும் நாம் தமிழிற் காண்கிறோம். ஐயன் என்னும் சொல்லை வடமொழி "ஆர்ய" என்னும் சொல்லின் திரிபு என்பார் கூற்று அடாது. ஆரியச் சொல் லில் ஐ என்னும் பகுதியே இல்லை. அச்சொல்லின் தாது வாகக் கருதப்படுவது 'போ' அல்லது 'ஓடு' என்னும் பொருள்படும் "ரு" என்பதாகும். "யத்" என்பது அதன் சாரியை. எனவே "ரு+யத்" "ஆர்ய" ஆனதற்கு விதி, பாணினீயத்திற் சொல்லப்பட்டுள்ளது. அங்ஙனமிருப்பவும் தாதுப் பொருளால் ஒவ்வாதிருக்கின்ற இச் சொல்லைத் தமிழின் மூலகாரணம் என்று சொல்லுதல் ஒலி ஒப்பு மையால் மொழியிலக்கண முடிபுகாட்ட முற்படுவோரது அறிவு பழுதுபட்டுள்ளமையைக் காட்டும்.

இனி இதற்கு வேண்டிய சான்றுகளைத் தமிழ் இலக்கி யத்திற் காண்போம். ஐயர் என்பது அந்தணரின் வேறாய சிலரைக் குறித்தது என்பதற்குச் சான்று:—(தொல்—கற்பு—5) "அந்தணர் திறத்தும் சான்றோர் தேஎத்தும்...

ஐயர் பாங்கினும் அமரர்ச் சுட்டியும்" என வருவது. ஈண்டு அந்தணரின் வேருகவே ஐயர் எண்ணப்படுகின்றனர். மேலும் ஐயர் என்னும் சொல் பண்டைத் தமிழ் இலக்கியங்களில் குறவர், பரதவர், வேட்டுவர் முதலிய குடிகளின் தலைவர்க்கு ஆளப்பட்டிருக்கக் காண்கிரும். அதனுல், "ஐயர்" என்பது தலைமையுடையாரையே குறித்து நின்றதன்றி, சாதிப்பிரிவை உணர்த்தவில்லை என்பது தேற்றம்.

இத்தலைமைப் பொருளே கொள்ளத்தக்கது என்பதன் உண்மை இறையனுரகப் பொருட் சூத்திரத்தில் வழங்கும் "ஐயர்" என்னும் சொல்லால் வலியுறுகிறது. "வெளிப்படை தானே விரிக்குங்காலைத் தந்தை தாயே தன்னையர் என்றாங்கு அன்னவரறியப் பண்பாகும்மே" (சூத்திரம்—26) என்னுமிடத்தில் ஐயர் என்பது தந்தையல்லாத தலைமையுடைய பிறரைச் சுட்டுதல் காண்க. அதன் கருத்து தலைவனுகிய தந்தைக்கு அடுத்துத் தலைமைபூணும் உரிமையுடைய தமையனுருக்கு இச்சொல் இங்கு வழங்கப்பட்டிருப்பதான் உணரப்படும். "தமையன்" என்பதுதானும் தம் ஐயன் என்னும் சொற்களால் ஆகி, முன் பிறந்த தலைமையுடைய ஒருவரை யுணர்த்தியவாறு அறிக. சீத்தலைச் சாத்தனரும் மணிமேகலை மணிபல்லவத் தீவிலே தாழ்துயருற்ற காலைத் தந்தையை யுள்ளி "ஐயாவோ" என்று அழுதாள் என்று கூறுகிருர் (மணி—காதை—8—வரி—43). இன்னும் சிலப்பதிகாரத்தில் ஐயன் என்னுஞ் சொல் பெருங்குடி வணிக மரபில் தோன்றிய கோவலனுக்கும் வழங்கப்பட்டுளது. "வையை என்ற பொய்யாக் குலக்கொடியை......அனநடை மாதரும் ஐயனும் தொழுது" எனவருமிடத்தில் ஐயன் கோவலன் என்பது உணர்க. தலைமை என்னும் பொருளே ஐயன் என்னும் சொல்லின் பகுதிப்பொருள் என்பது இற்றைநாள் நாம் வழங்கும் கடிதத்தலைப்புகளில் உள்ள

"ஐயா" என்பதாலும் பெறப்படும். ஒருகாலத்தில் தலைமை யுடையார் எவராயினும் அவருக்கு வழங்கி வந்த ஐயர் என் னும் சொல் நாளடைவில் பொருளில் சுருங்கி, நம்மில்லங் களில் செய்யப்பட்ட வைதிக அலுவல்களில் தலைமை பெற்ற காரணத்தால் ஒரு சாரார்க்கே உரியது போன்று நினைக்கப்பட்டுவிட்டது. "ஐயர் வரும்வரை அமாவாசை காத்திராது" என்பது இதனை வலியுறுத்தும்.

இப்படியே "பிள்ளை" என்னும் சொல்லின் வரலாறும் சிந்திக்கத் தக்கது. பிள்ளையென்னும் சொல்லைப் "பில்ல" எனத் தெலுங்கிலும், "பிள்ளெ" எனக் கன்னடத்திலும் காண்கிறோம். இச்சொற்களின் தாதுவாகப் "பிள்" என் பதையே கூறவேண்டும். பிள்ளப்படுவது பிள்ளையெனப் பட்டது. பிள் + து = பிட்டு ஆதல் காண்கிறோம். எனவே ஒரு காலத்தில் பிள்ளை ஆகிய சொல் இளைய பொருள் களைக் குறித்ததாதல் வேண்டும். "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற்று இளமை," "தவழ்பவை தாமும் அவற்றோ ரன்ன" என்னும் தொல்காப்பியச் சூத்திரங்களால் பறவை களுக்கும் ஊர்வனவற்றுக்கும் பிள்ளையென்னுஞ் சொல் அக்காலத்து வழங்கப்பட்டதறியப் படுகின்றது. மரபியல் 8, 9, 10-ஆம் சூத்திரங்களால் பன்றிக்குருளை, புலிக்குருளை, முயற் குருளை நரிக்குருளை, என்றவாறே போலப் பன்றிப் பிள்ளை, புலிப்பிள்ளை, முயற்பிள்ளை, நரிப்பிள்ளை என்ற வழக்குத் தொல்காப்பியர் காலத்து இருந்தமை அறிகின் றோம். ஓரறிவுயிர்களையும் "பிள்ளை" என்னும் சொல் உணர்த்தி வந்தது என்பது "பிள்ளைகுழவி கன்றேபோத் தெனக் கொள்ளவும் அமையும் ஓரறிவுயிர்க்கே" எனும் சூத்திரத்தால் தெரியவருகிறது. அதனால்தான் 'தென்னம் பிள்ளை', 'கமுகம் பிள்ளை' என்ற வழக்குகளும் தோன்றின. "பெண்ணும் ஆணும் பிள்ளையு மவையே" என்னும்

மரபியல் சூத்திரத்தால் "பிள்ளை" என்னும் சொல் தனியே சொல்லப்பட்ட வழி உயர்திணையையே குறிக்குமென்பது அறிகிறோம். உதாரணமாக, பிள்ளை பிறந்தது என்னுமிடத்து உயர்திணைக் குழவியே குறிக்கப்படும். கம்பரும் "உருவறியாப் பிள்ளையழுத பெரியோரை யென் சொல்ல" என்றார். இவ்விடத்தில் இச்சொல் உயர்திணையையே குறித்ததாதல் வேண்டும். இடைக்காலத்திலும் இச்சொல் பெண்பாற் குழவியையும் ஆண்பாற் குழவியையும் உணர்த்திற்று என்பதற்கு ஆதாரம் பிள்ளைத் தமிழ் நூல்களாலும், பிள்ளைப் பாட்டிலக்கணங்களாலும் பெறப்படும்.

இப்பொழுது இச்சொல் அடையடாது கூறியவழிப் பெரும்பாலும் ஆண் குழவியையே உணர்த்துகின்றது. 'பிறந்தது பெண்ணு பிள்ளையா' என்னுமிடத்திலும், "பெற்ற மனம் பித்து பிள்ளைமனம் கல்லு' என்னுமிடத்திலும், வரும் பிள்ளையென்னும் சொல் ஆண்பாலையே உணர்த்துதல் வெளிப்படை. கம்பராமாயணத்திலும் "பெண்டிரிற் கூற்றமன்னாள் பிள்ளையைக் கொணர்க வென்றாள்" எனக் கைகேசி சூழ்வினைப் படலத்தில் வருகிறது. காளமேகப் புலவரும் மற்றொரு புலவரை இளைஞர் என்று சொல்லி இகழலுறுவர் "பிள்ளாய்" எனக் கூறினார். "சும்மா— இருந்தால் இருப்பேன், எழுந்தேனேயானால் பெருந்தாரை மேகம் பிள்ளாய்" என அவர் அதிமதுர கவிராயரிடம் கூறியதாக ஒரு தனிச் செய்யுள் வழங்குகின்றது. இங்ஙனம் ஒரு காலத்தில் இளமைப் பொருள் எதுவாயிருந்தாலும் அதனை யுணர்த்திவந்த "பிள்ளை" யென்னுஞ் சொல் நாளேறநாளேறப் பொருளிற் குறுகி உயர்திணை ஆண்பால் குழவியையே குறிக்கலாயிற்று. இதன் காரணம் ஒருகால் இதுவாக இருக்கலாம். தனித்தமிழர்கள் புத்தேள் உலகம் புதல்வர் பயப்பர் என்ற கொள்கையுடையரோ

அல்லரோ அறியேம். பொத்தியார் என்னும் புலவர் பிள்ளைப் பேற்றின் பின்னரே வடக்கிருக்க அனுமதிக்கப் பெற்ருர் என்னும் செய்தி (புறம் 222-223) ஒரு பாலிருப்பவும், புதல்வர்ப் பெருதார் "புத்து" என்னும் நரகில் வீழ்வர் என்ற கொள்கை ஆரியரிடத்திருந்து பரவத் தலைப்பட்டது. அக்கொள்கையாற்போலும் தமிழரும் நாளடைவில் ஆண் மகவினைப் பெண்மகவினும் சிறந்ததொரு பொருளாகக் கருதினர் என்று தோற்றுகிறது. அதனுல்தான் பிள்ளையுட் சிறந்த ஆண்மகவுக்குப் "பிள்ளை" யென்னும் சொல் இக்காலத்து உரியதாகிவிட்டது போலும்!

"பிள்ளையார்" என்னுஞ் சொல்லைச் சிவகுமரருள் மூத்தவருக்கே உரியது போல இக்காலை வழங்கிவருகிரும். கணபதி பிள்ளையாராயின், கந்தரும் பிள்ளையாரே-என்னை? இருவரும் சிவபெருமானுக்கு மகவு எனப்படுதலின் என்க. "பிள்ளையார்" எனும் வழக்கு முருகக்கடவுளுக்கும் இருந்தமை "பிணிமுகம் பிள்ளையார் (—ஒண் செய்யோன்) ஏறும் (மயிலன்றி) யானை என்னும் சொல்லுட்" என்ற புறப்பாட்டு (54இன்) உரையாலும், திருமுருகாற்றுப்படை 163—5 ஆம் வரிகளின் கீழ் நச்சினுர்க்கினியர் எழுதிய விசேடக் குறிப்பாலும், "தேவிகோயிலிற் கூத்தாடுவன பிள்ளையாருடைய துவச வாகனம் ஆன தோகை மயில்களேயோ? என்ற தக்கயாகப் பரணி (செய்—116) உரைப்பகுதியாலும் அறியப்படும். ஆயின், "பிள்ளையார்" என்னுஞ் சொல் பிள்ளைமையுடைய பலர்க்கும் வழங்கற்கு உரியதாயிருந்தது நாளடைவில் நலிந்து இறைவனது மூத்த மகனுக்கே உரிமைகுறித்து இந்நாள் நிற்கிறது.

இங்ஙனமே புடவை என்னுஞ் சொல்லும் வேடிக்கையான வளர்ச்சியையுடையதா யிருக்கிறது. அதன்

தாதுப் பொருள் புடை அல்லது இடைமருங்கே வைக்கப் படுவது என்பதாகும். அஃது இப்பொழுது புடவை என வழங்குகிறது. இச்சொல் முதலில் அறுவை, துணி என்ற சொற்களைப்போல் பொதுவாக எந்த ஆடையையும் உணர்த்தி வந்தது. அக்காலத்தில் ஆடவரும் புடவை கட்டிக்கொண்டிருந்தார்கள் என்பதற்கு இலக்கியச்சான்று கிடைக்குமேல், "புடைவை" ஆடவர்க்கும் மகளிர்க்கும் உரிய பொதுப் பொருளாதல் ஊகிக்கப்படும். திருநாவுக்கரசர் புராணத்தில் (பாட்டு 61) "வெண் புடவை மெய்சூழ" திருநாவுக்கரசர் திருவதிகை சென்றடைந்ததாகச் சொல்லப்பட்டுள்ளது. ஈண்டு திருநாவுக்கரசர் அணிந்திருந்தது ஆண் உடையேயாயினும் அது புடைவை யென்னுஞ் சொல்லால் குறிக்கப்பட்டுள்ளது. ஆனால் இற்றை நாளிலோ புடைவை யென்னுஞ் சொல் பெண்பாலுடைக்கே உரியதாகிவிட்டது. இது பொருள் சுருங்குதலென்னும் நியதியாலாகும். ஆங்கிலத்தில் ஷர்ட் (Shirt) என்னுஞ் சொல் ஒருகாலத்தில் மகளிர் அணியும் மெய்ப்பையையே உணர்த்தி வந்ததாகத் தெரிகிறது. அப்போது அது ஸ்கர்ட் (Skirt) என்னும் வடிவுபற்றி வந்தது. ஆனால் இப்பொழுதோ "ஷர்ட்" (Shirt) ஆடவர்க்கே யுரியதாகிப் "பெட்டிகோட்" (Petticoat) என்பது மகளிர் உடுப்புக்காகிவிட்டது. முல்லைப்பாட்டு 59-ம் வரி உரையில் நச்சினார்க்கினியர் யவனரது ஆடைக்கும், அடியார்க்கு நல்லார் சிலம்பு 17-ம் காதை 207-ஆம் வரி உரையில் அறுவை, மடி எனற்பால ஆடைகளுக்கும் "புடைவை" யென்னுஞ் சொல்லை வழங்கியிருத்தல் காண்க.

"செய்யுள்" என்னுஞ் சொல்லின் வரலாறும் பொருள் சுருங்கும் நியதியால் மாறுபட்டிருப்பதை அறியலாம். செய்யப்பட்டது செய்யுள். பேராசிரியரும் பாய்த்துள் என்ற

போலச் செய்யுள் என்பது உள்விகுதி பெற்றது என்றார். செய்யுளியலில், பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் ஆகிய இவையெல்லாம் "செய்யுள்" எனச் சொல்லப்பட்டுள்ளன. "சிவஞான சுவாமிகள் உரைச் செய்யுள்" "பாச்செய்யுள்" என்று சொல்லும் போது அன்னாருடைய வசன புத்தகங்களும், பாட்டுப் புத்த கங்களும் குறிக்கப்படுதல் நாமறிந்தது. "நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்" என்றும், "உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள்" என்றும் சிலப்பதிகாரத் தின்கண் வழங்கும் இடங்களிலெல்லாம் செய்யுள் என்பது பொதுப்பொருள் பெற்றிருத்தல் காண்கிறோம். இதனால் "செய்யுள்" என்பது முற்காலத்திற் புலவராற் செய்யப் பட்டது எதனையும் குறித்ததாதல் வேண்டும். தொல்காப்பி யரும் "ஆ ஓ ஆதலும் உண்டு செய்யுளுள்ளே" என்று சொல்லுமிடத்துச் "செய்யுள்" என்பது பொதுப்பொரு ளுடைய காரணத்தானன்றோ தாமே தமது நூற்பாவில் "கிழவோட் குவமமீரிடத்துரித்தே," "பல்லோர் படர்க்கை', என்றார். வீரசோழிய ஆசிரியராகிய புத்தமித்திரனார் வாழ்ந்த இடைக்காலத்தே செய்யுள் என்னுஞ்சொல் பொதுப் பொருளிலும் பாட்டு என்னும் சிறப்புப் பொருளி லும் வழங்கலாயிற்று எனத் தெரிகிறது. (வீரசோழியம் யாப்பு-6.), ஆனால், 1730 முதல் அதாவது வீரமாமுனிவர் காலமுதல் செய்யுள் என்னுஞ்சொல் பாட்டு என்னும் பொருளிலேயே வழங்கத் தொடங்கி, இப்பொழுதும் அப் பொருளே கொண்டு நிற்கின்றது. சிவப்பிரகாச சுவாமி களும் நால்வர் நான்மணிமாலையில் "நீ புகழ்ந்து உரைத்த பழுதில் செய்யுள் எழுதினன்" எனச் சொல்லியவிடத்துச் செய்யுள் என்னுஞ் சொல் திருக்கோவையார் திருவாசக மாகிய பாட்டுக்களை உணர்த்தியமை பலர் அறிந்தது.

"மா" என்னுஞ் சொல் முற்காலத்திற் பொதுவாக விலங்கினை உணர்த்தி வந்தது. கருப்பொருட் கூறும் தொல் காப்பியச் சூத்திரத்தே "தெய்வம் உணாவே மா மரம்புள் பறை" (அகம்-18) என வரும் இடத்தில் "மா" என்பது பொதுவாக விலங்கினை உணர்த்துதலைக் காண்க. "ஆவும் மாவும் சென்றுணக் கலங்கி" எனவரும் (204) புறநானூற் றுப் பகுதியில், "மா" என்பது ஆண்டு விலக்கப்பட்ட "ஆ", ஒழியப் பிறவிலங்குகள் எல்லாவற்றையும் உணர்த்துதல் அறியத்தக்கது. "கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும் உண்பது நாழி" (புறம் 189) எனுமிடத்தும் இச்சொல் பொதுவாக விலங்கை உணர்த்தல் அறியப்படும். மரபியல் 12-ஆம் சூத்திர உரையிற் பேராசிரியரும் "மா என்பது குதிரையும் யானையும் புலியும் சிங்கமும் முதலிய வற்றுக்கெலாம் பெயராகலின்" என உரைத்துள்ளார். புறம் 58-ம் பாட்டில் வரும் "கோண்மா" என்னுஞ் சொல் புலியைக் குறித்தல் காண்க- "மாவாராதே மா வாராதே" எனத் தொடங்கும் (273) புறப்பாட்டிலும் மா என்பது குதிரையை யுணர்த்துதல் அறியத்தக்கது. மா என்னுஞ் சொல்லே "மான்" என ஒருகாலத்து ஆயிற்று. ஆனதும் "மா" விலங்குப் பொதுவை யுணர்த்தியது போலவே அதுவும் உணர்த்தலாயிற்று, "மான்" என்பது "மா" என்னும் சொல்லடியாகப் பிறந்தது என்பது "ஆமா கோனவ்வணையவும் பெறுமே" என்னும் நன்னூல் (248) விதியாலும் பெறப்படுகிறது. அச் சொல் நன்னூலார் காலத்திற்கு முன்னும் விலங்குப் பொதுப் பொருளையே உணர்த்தி வந்ததென்பது "கடுமான் மாற-மறவாதீமே" எனும் புறம் 198-ஆம் பாட்டின் பகுதியில் வரும் (கடு) மான் எனுஞ்சொல் (விரைந்த செலவையுடைய) குதிரையை யுணர்த்துவதாலும், "வரிகிளர் வயமான் உரிவை தைஇய"

என அகநானூற்றுக் கடவுள் வாழ்த்துப் பகுதியில்வரும் இச் சொல் புலியை யுணர்த்துவதாலும் அறியப்படும். ஆனால் இந் நாளிலோ "மான்" என்னுஞ் சொல்லை அப் பொருளிலேயே வழங்குகின்றோமா? மாதருடைய மருண்ட பார்வைக்கு உவமையாகச் சொல்லத்தக்கது எனப்படும் ஒரு தனி விலங்கை உணர்த்த அன்றோ மான் என்னுஞ் சொல்லை இக் காலை வழங்குகின்றோம்? இச் சொல் இப் பொருள் பெற்றது பொருள் சுருங்கும் நியதியாலாகும். அஃதாவது ஒரு காலத்தில் எல்லா விலங்குகளையும் உணர்த்திவந்த "மான்" என்னுஞ் சொல் இப்பொழுது தன் பொருளில் சுருங்கி, ஒருவகை விலங்கையே உணர்த்துகிறது என்பதாம் இங்ஙனமே ஆங்கில "டியர்" (Deer) என்பதும் சமக்கிருத "ம்ருக" (Mrga) என்பதும் முன்னர் விலங்குப் பொதுவை உணர்த்தி இப்பொழுது நவ்வி யினத்தை மாத்திரம் உணர்த்துகின்றன என அறிகிறோம்.

## IV

நெய் என்பது பளபளப்பும் ஈர்மையும் உள்ள எந்தப் பொருளையும் ஒரு காலத்திற் குறித்திருத்தல் வேண்டும். அன்றேல், அதற்குத் தேன், புழுகு, குருதி, நிணம் முத லாய பொருள்கள் வழங்கி யிருக்கமாட்டா. நெய்ப்பு என் னும் சொல்லைப் பளபளப்பு என்னும் பொருளிலும் குளிர்ச்சி என்னும் பொருளிலும் நச்சினார்க்கினியர் ஆளக் காண்கின்றோம். சிந்தாமணி 170-வது செய்யுளுரையில் "அமை திரட்சிக்கும் நெய்ப்பிற்கும் உவமை" என்னுமிடத் திற் பளபளப்பையும், திருமுருகாற்றுப்படை 20-ஆம் அடி யின் உரையில் "நெய்ப்பினையுடைய மயிரிலேரி" என்னு மிடத்திற் குளிர்ச்சியையும் அவர் குறித்தமை கண்டு

கொள்க. நீர்வாழ் மீனின் ஈரலிலிருந்து எடுபடும் நெய்க்கு (Cod-Liver oil) நெய் எனப் பெயர் வந்தது பளபளப்புக் காரணமாக இருத்தல் வேண்டும் எனத் தோன்றுகிறது. மீன் நெய் என ஒன்று கடைச்சங்க காலத்தே அறியப்பட்டிருந்தது என்பதற்குச் சான்று கரிகாலனைப்பற்றிய பொருநராற்றுப்படை என்னும் பாட்டில் "மீனெய்யொடு நறவு மறுகவும்" என வரும் அடியாற் பெறுகின்றோம்.

இனி, நெய் என்னுஞ் சொல் தேனைக் குறித்தது என்பதற்குச் சான்று சிந்தாமணி 1198-ஆம் செய்யுளில் வரும் "நெய்ம்முதிர் தொடையல் கீறி" என்னும் பகுதியாகும். பொருநராற்றுப் படையில் "தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்" என்னும் அடிக்கு "தேனாகிய நெய்யோடே கிழங்கையும் விற்றவர்கள்" என்று வரையப்பட்டிருக்கும் உரையுங் காணத்தக்கது. தேனை வடிகட்டுதற்கு உதவியாயிருத்தலின் அன்றோ பன்னாடை நெய்யரி எனப் பெயர் பெற்றது? புழுகு என்னும் பொருளிலும் இச்சொல் வழங்கப் பெற்றுளது என்பதற்குக் கீழ்வருவன சான்றுகள்:—

| | | |
|---|---|---|
| i | "நெய்ம் மாண் சிவிறியர்" | (பரிபாடல் 6 வரி 34.) |
| ii | "மையிருங் கூந்தல் நெய்யணிமறப்ப" | (சிலம்பு iv 56) |
| iii | "நெய்த் தலைக் கருங்குழல்" | (சிந்தாமணி iv 251.) |

தேனும் புழுகும் நெய்ப்புடைமையால் நெய் என வழங்கப்பட்டன. இவற்றினின்று வேறு பிரித்துக் காட்டும் பொருட்டுச் சிற்சில சமயங்களில் மாட்டின் பாலிற் படும் நெய் ஆனெய் என்றும், வெண்ணெய் என்றும் வழங்கப்பட்டிருத்தலைக் காண்கின்றோம். சிந்தாமணியில் (1172) "உண்ணை உருக்கிய ஆனெய் போல் மேனியள்—வெண்ணெய் போன்று ஊறு இனியள்" என வருதல் காண்க. கலித்தொகையிலும் (108) "வெண்ணெய்த் தெழி கேட்கும்

அண்மையாற் சேய்த்தன்றி'' என வருதல் காண்க. அன்றி யும், இப்பொருளில் வாளா "நெய்" எனவும் வழங்கக் காண் கிறோம். பரிபாடலில் (16) "நெய் குடை தயிரின் நுரை யொடும் பிறவொடும்'' என வருமிடத்து உருக்கப்படாத நெய்யும் "நெய்" என்ற சொல்லாற் குறிக்கப்படுதலைக் காண்க. "பாலிற் படு நெய்போல் மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்'' என்று திருநாவுக்கரசர் கூறிய விடத்தும் நெய்யென்பது உருக்கப்படாததையே குறித் தலைக் காண்க. அச்சொல் ஆனுருக்கையுங் (உருக்கிய நெய் யையும்) குறித்தது என்பதற்குப் பல சான்றுகள் உள:—

i. "நெய்ம் மிதி கவளம்'' (பெரும்பாண். 394)

ii. "நெய்யால் எரி நுதுப்பேம்
என்றற்றால்'' (குறள். 1148)

அச்சொல்லே எள்ளினின்று எடுபடும் நெய்யையும் உணர்த்திற்று என்பதற்கு முல்லைப்பாட்டு 48-ஆம் அடி யில் வரும் "நெய்யுமிழ் சுரையர்'' என்பதும், அகநானூற் றுப் பதினேழாம் பாடலில் வரும் "நெய்யுமிழ் சுடரிற் கால் பொரச் சில்கி'' என்பதும் ஏற்ற ஆதாரங்கள். இவற்றி னுஞ் சிறந்ததோர் ஆதாரத்தையும் தொல்காப்பியக் கற்பி யலிற் (5) காண்கிறோம்.

"புதல்வற் பயந்த புனிறு சேர் பொழுதின்
நெய்யணி மயக்கம் புரிந்தோள் ''

என ஆண்டு வருதலைப் பார்க்க. ஆண்டுச் சுட்டப் படுவது ஈன்ற தாய் சின்னாள் கழித்து எண்ணெயாடுவது என்பதை "எண்ணெயாடும் மயக்கத்தை விரும்பிய தலைவியை'' என்று நச்சினார்க்கினியர் உரைக்குமாற்றால் உணரல் கூடும். "புதல்வனை ஈன்றிவள் நெய்யாடினளே'' என வரும் பழைய இலக்கியமும் உண்டு.

மகளிர் கூந்தலுக்குப் புழுகையேயன்றி, எள்ளான் ஆய நெய்யையும் ஊட்டிவந்தனர் என்று பழந்தமிழ்ப் பனுவல்கள் பகரக் காண்கிறோம். மகளிர் கூந்தலில் அணிந்த புழுகு 'நெய்' என்ற சொல்லாற் சிலப்பதிகாரத்தும் சிந்தாமணியிலும் குறிக்கப்பட்டுள்ளது என்பதை முன்னரே கண்டோம். இனி, அவர்கள் எண்ணெயிட்டுக் கூந்தலை நீவிய செய்திக்குரிய ஆதாரத்தையும் காண்போமாக. "எண்ணெய் நீவிய நலம்பெறு சென்னி" எனக் குறிஞ்சிப் பாட்டின்கண் வருகின்றது. பரிபாடலிலும் மகளிர் எண்ணெயிட்டு நீராடும் செய்தி உரைக்கப்படுகிறது. "எண்ணெய் கழல இழைதுகள் பிசைவார்" என வருதல் காண்க (பரி.10). எண்ணெய் என்னும் சொல்லின் ஆட்சியைப் புறநானூற்றிலும் காண்கின்றோம். ஓர் அரசனது முரசு கட்டிலுக்குச் சாத்திய பூக்கள் எண்ணெயினது நுரையை முகந்தாலொத்து இருந்தன என மோசிகீரனார் என்னும் புலவர் கூறுகிறார். அப்பகுதி "எண்ணெய் நுரைமுகந்தன்ன மென் பூஞ் சேக்கை" என்பது (புறம். 50). இவற்றால், எள்ளினின்று எடுபட்டதே எண்ணெய் என வழங்கப்பட்டது என்பது போதரும்.

ஆனால், இக்காலத்திலோ அப்பொருளில் மாத்திரம் அதனை வழங்குகின்றோமில்லை. வேப்பெண்ணெய், ஆமணக்கெண்ணெய், தேங்காயெண்ணெய், இலுப்பெண்ணெய் கடலைக்கொட்டையெண்ணெய் என்றெல்லாம் சொல்லுகிறோம். மண்ணெண்ணெய் என்றும் ஒரு நெய்யைக் குறிக்கிறோம். இந்நெய்களில் எள்ளென்பது எள்ளளவும் இல்லையே! இல்லையாயினும், நாம் ஏன் இவற்றை எண்ணெய் என்று கூறுகிறோம்? கவிச்சக்கரவர்த்தியாகிய சயங்கொண்டார் எள்ளினின்று எடுபடாததையும் எண்ணெயென்று வழங்கினமையாலா? அவர் யானையின் மதத்தையும் தைலம்

எனப் பேய்கள் கருதின என்றும், அவ்வெண்ணெய் போக்க வெண் மூளைகளால் தேய்க்குமாறு பணித்துக் கொண்டன வென்றுங் கூறியிருப்பது உண்மையே (கலிங் கத்துப் பரணி 493–494). ஈண்டு அவர் எண்ணெய் என் னுஞ் சொல்லை நெய்ப்புடைய பொருள் அல்லது நெய் என் னுங் கருத்துப்பட வழங்கி யுள்ளாராயினும், அதுபற்றி நாம் வழங்குகின்றோமென்பது முறையாகாது. ஏனெனில் அவ்வழக்கு நம்முட் பலர்க்குத் தெரியாது. ஆதலின் கார ணம் வேறு யாது?

மொழியிலக்கண வல்லுநர் மேனாட்டில் சென்ற நூற் றாண்டின் பிற்பகுதியில் சொற்பொருள் பற்றிச் செய்த ஆராய்ச்சியின் பயனாய், சில நியதிகள் பேச்சு வழக்குள்ள மொழிகளின்கண்ணே நிகழ்வதைக் கண்டனர். அவைதம் முள் ஒரு நியதிப்படி சில சொற்கள் குறிக்கும் பொருள் நாளடைவில் விரிதலுண்டு என்று கூறியுள்ளார்கள். அங் ஙனம் நோக்கின், எண்ணெய் என்ற சொல் தனித்த ஒரு நெய்யை முற்காலத்தே குறித்துவந்தது நாளடைவில் நெய் இனத்தையே பொதுவாகக் குறிக்கும் விரிந்த பொருட் பேறு பெறலாயிற்று என்பது புலப்படும். அதனால், வேப் பெண்ணெய் முதல் மண்ணெண்ணெய் இறுதியாக நாம் வழங்கும் சொற்கள் குற்றமுடையன ஆகா. ஏன்? அவை யெல்லாம் மொழியிலக்கண நியதி ஒன்றின் காரணமாக வந்து சேர்ந்தன ஆகலின் என்க.

இனி, தண்ணீரின் வரலாற்றை நோக்குவோம். எண் ணெய் இருசொற்களான் ஆயவாறே தண்ணீரும் இரு சொற்களான் ஆயது. தண்மை நீர் தண்ணீர் அன்றோ! கால்டுவேலரைக் கேட்டால் தண்நீர் அல்லது தள் நீரே தண்ணீராயிற்று என்பர். தண்டலை (=சோலை), தண்ணம் (=குளிர்ச்சி), தண்ணவன் (=சந்திரன்), தளம் (=இலை)

தளி (=மழைத்துளி) தளிர் (=தழை), தட்பம் (=குளிர்ச்சி) ஆகிய சொற்களை நோக்கி அறியுமாறு பணிப்பர். நல் என்பதிலிருந்து நன்மை வந்ததென்றும், இர் என்பதிலிருந்து இரண்டு வந்ததென்றும், திராவிடக் குழுமொழிகளெல்லாவற்றையும் ஒத்து நோக்கிய காரணத்தால் கூறும் அவர் இங்ஙனம் ஏன் கூறுர்? எங்ஙனமாயினும், குளிர்ச்சி பொருந்திய நீரே தண்ணீர் எனப் பட்டதாதல் வேண்டும். நீர் என்னுஞ் சொல்லே முன்னரெல்லாம் பொதுச் சொல்லாக இருந்துவந்தது. இதற்குச் சான்றுகள் பல வேண்டா ஆயினும் சில காண்போம் :—

i. "நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே" (புறம். 186)

ii. "நீரின் றமையாது உலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையாது ஒழுக்கு" (குறள். 20)

அச் சொல்லே பிற சில சொற்களோடு சேர்ந்து தெங்கின் நீரையும் எச்சிலையும் உணர்த்தக் காண்கின்றேம். "இளநீர் விழுக்குலை யுதிர" என்னும் திருமுருகாற்றுப்படைப் பகுதியில் தெங்கினது நீரும், "பணிமொழி வாலெயிறு ஊறிய நீர்" என்னும் குறட்பகுதியில் (1121) எச்சிலும் குறிக்கப் படுகின்றன. ஆற்று நீரென்றும், ஊற்று நீரென்றும், மழை நீரென்றும், தீநீரென்றும், வெந்நீரென்றும் உள்ள வழக்குகள் நீர் என்னுஞ் சொல்லின் பொதுத் தன்மையைச் சுட்டுகின்றன. கண்ணில் உண்டாம் நீர் கண்ணீராதலும், புண்ணில் தோன்றுவது புண்ணீர் ஆதலும், உண்ணப்படும் நீர் உண்ணு நீராதலும் உண்டு அன்றே? இவையும் அச் சொல்லின் பொதுத் தன்மையைச் சுட்டல் வெளிப்படை. குளிர்ந்த நீரே தண்ணீராதலும் தேற்றம். பண்டையோரெல்லாம் தண்ணீர் என்னுஞ் சொல்லை இப்பொருளிலேயே ஆளக் காண்கிறேம்.

1. "அந்தீந் தண்ணீர் அமுதொடு கொணர்கேம்"
(மணிமேகலை X 36)

2. "எந்தைக்கு ஒரு நீ தண்ணீர் கொடுபோய் அளித்து"
('கம்பரா — நகர்நீங்கு. 81)

நாமோ குளிர்ந்த நீரை மாத்திரம் குறிக்குமாறு "தண்ணீர்" என்னுஞ் சொல்லை ஆள்கின்றோமில்லை, சுடு தண்ணீர், காப்பித்தண்ணீர், தேத் தண்ணீர், கஞ்சித் தண்ணீர் என்றெல்லாம் சொல்லுகிறோம். கண்ணிலே தண்ணீர் வருகிறது என்றுஞ் சொல்லுகிறோம். "சூடான தேத்தண்ணீர் குடியுங்கள்" என்னும் விளம்பரங்களையுங் காண்கிறோம். வெப்பமும் தட்பமும் ஒருங்கே தரவல்ல இயந்திரத்தால் அமைக்கப்படாது இருந்தும், தேநீரைச் சூடான தேத்தண்ணீர் என்று கூறுவது முறையாமா! மீண்டும், சயங்கொண்டாரைத் துணைக்கு இழுக்க முயன்றால், அவர் துணைபுரிய மாட்டேன் என்று சொல்லுகின்றாரில்லை.

"வெம்புங் குருதிப் பேராற்றில் வேண்டுந் தண்ணீர் வேழத்தின்
கும்பங் களிலே முகந்தெடுத்துக் குளிர வைத்துக் கொள்வீரே"
(பரணி 543)

என்று அவர் சொல்லிய இடத்து, தண்ணீர் வெந்நீராயிருத்தலினன்றோ "குளிரவைத்துக் கொள்ளுங்கள்" என்று சொல்லியிருக்கிறார்? அந்நீர் வெப்பமுள்ள குருதிநீர் எனத் தெரிகிறது. அந் நீரைக் குறிக்கத் தண்ணீர் என்னுஞ் சொல்லை அவர் ஆள்வாரேயாயின், நாம் சூடான தேத் தண்ணீர் என்னல் ஆகாதோ எனக் கேட்டல் கூடும்.

மேலும், பச்சைத் தண்ணீர் என்றும், குளிர்ந்த தண்ணீர் என்றும் காயவைக்கப்படாத நீரைக் குறிக்கிறோம். தண்ணீர் என்றாலே அமையுமே! என் பின்னர் நாம் இங்ஙனமெல்லாம் கூறுவது? எண்ணெய்க்குக் கண்டறியதி காரண

மாகவே என்பது பெறப்படும். என்னை ? ஒரு காலத்தில் ஒருவகை நீரைக் குறித்துவந்த இச்சொல் நாளடைவிற் பொருளில் விரிந்து பொதுவாக நீர் என்னும் பொருளுடைய தாயிற்று என்பதே கருத்து. இவ் விரியும் நியதி காரண மாகவே கவியரசர் சயங்கொண்டாரும்,

"குளிர்ந்த தண்ணீர் தனை கொண்டு
புசித்த வாயைப் பூசீரே" (பரணி. 569)

என்று அமைத்தாராக வேண்டும்.

மேல் "நூல்" என்னும் தமிழ்ச் சொல்லை நோக்கு வாம். தொல்காப்பியர் செய்யுளியல் (166-168-ம் சூத்தி ரங்கள்) விதிப்படி நூல் என்பது சூத்திரம், ஓத்து, படலம், பிண்டம் இவற்றாலாயது எனத் தெரிகிறது. இதனால் அறியப்படுவது இலக்கண மென்பது. இறையனாரகப் பொருளுரையினும் இச் சொல் இப் பொருளிலேயே ஆளப் பட்டிருப்பது உண்மை. "அவர்க்கு நூல் அகத்தியம்," "அவர்க்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமும் மாபு ராணமும் இசை நுணுக்கமும் பூதபுராணமுமென இவை யென்ப", "அவர்க்கு நூல் அகத்தியமும் தொல்காப்பிய மும் என்ப" எனவருமிடங்களில் எல்லாம் குறிக்கப்படுவது இலக்கணம் என்பது வெளிப்படை. ஆனால், "விலங்கொடு மக்களனையர் இலங்கு நூல் கற்றாரோ டேனையவர்" "நவில்தொறும் நூல் நயம்போலும்," "ஆபயன் குன்றும், அறுதொழிலோர் நூல் மறப்பர்" என்ற திருக்குறட் பகுதிகளிலெல்லாம் நூல் என்பது இலக்கியம் என்னும் பொதுப் பொருளில் வருதல் காண்க. அதுவே இடைக் காலத்திலும் பொருளாய் இருந்திருத்தல்வேண்டும். கலிங் கத்துப் பரணியில் "இறைஞ்சிடா அரசர் கால்களில் தளை யும், நூல்களிற் பதங்களில் தளையும் அன்றி வேறிரு பதங்

களிற்றலைகளில்லையே" (தாழிசை 261) என வருமிடத்தில் நூல்கள் என்பதற்குப் பொருள் செய்யுட்கள் என்பது தேற்றம், தலை என்பது பாட்டல்லாப் பிற பனுவல்களுக்கு ஏலாமையின். அப்படியே இக் காலத்திலும் இச் சொல்லை விரிந்த பொருளில் வழங்கக் காண்கிறோம். மதன காம ராஜன் கதை, முப்பத்திரண்டு பதுமைக் கதை, மாரியம்மன் தாலாட்டு, பாலயோகினி பாட்டுப் புத்தகம் எல்லாம் "நூல்கள்" என்று சொல்லப்படுகின்றன. இவற்றால் அறியப்படுவது முற்காலத்தில் இலக்கணமொன்றையே குறித்துவந்த நூல் என்னும் சொல் பொருளில் விரிந்து, பொதுவாக எந்த இலக்கியத்தையும் எந்தப் புத்தகத்தையும் குறித்து வருகிறதென்பது. "எண்ணெய்" "தண்ணீர்" என்னுஞ் சொற்களும் பொருள் விரி நியதியால் வேறுபாடு அடைந்துள்ளமை முன்னரே காட்டப்பட்டது.

# தமிழை எளிதாக்குதல்

## இலக்கணம்

தமிழிற் பல இலக்கண நூல்கள் இருக்கின்றன. அவற்றில் மிக்க பழமை வாய்ந்தது தொல்காப்பியம். அது தோன்றிய காலம் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டிற்கு முன்னைய காலம். கிறிஸ்து பிறப்பதற்கு ஐந்தாறு நூற்றாண்டுகளுக்கு முன்னரே தமிழில் இலக்கணம் இருந்தது என்றால், அக்காலத்திற்கு முந்தியே தமிழிலக்கியங்கள் பல வழங்கி இருத்தல் வேண்டும் என்பது பெறப்படும். இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்புதலே எங்கும் மரபு. பல வேறு நாடுகளில் இலக்கியமே தோன்றாத காலத்தில், தமிழில் இலக்கணங்கள் எழுந்தன என்பது அறிந்து இன்புறத் தக்க ஒரு செய்தி. கௌவர் (Gower) சாசர் (Chaucer) ஆகியோர் வாழ்ந்த கி. பி. பதினான்காம் நூற்றாண்டிற்கு முந்திய காலத்தில் ஆங்கில இலக்கியம் எனற்கு ஒன்றும் இல்லை. கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டில்தான் பிரிசியன் (Frisian) இலக்கியம் தோன்றிற்று. ஜெர்மானிய, இரஷ்ஷிய, போலிஷ், இலக்கியங்கள் ஒன்பதாம் நூற்றாண்டில்தான் தோன்றின. ஜப்பானிய, போர்ச்சுகீசிய, ஸ்பானிய பிரெஞ்சு இலக்கியங்கள் எட்டாம் நூற்றாண்டுதொட்டே உள. ஆர்மீனிய, எத்தியோப்பிய பழைய இலக்கியங்கள்

ஐந்தாம் நூற்றாண்டைச் சார்ந்தவை. கிறிஸ்து பிறப்ப தற்கு முன்னரே இலக்கியம் படைத்துச் சிறந்த பெருமை சில மொழிகளுக்கே உண்டு. தமிழ், சீனமொழி, சமஸ் கிருதம், அஸ்ஸிரியன், கிரேக்கம், இலத்தீன் ஆகியவை அம்மொழிகள். அம்மொழிகளில் வைத்து எண்ணத்தக்க பெருமை திராவிட மொழிகளில் தமிழுக்கே உண்டு.

தமிழ் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டிலேயே இலக்கணம் பெறுவதாயிற்று. இலக்கண அறிவு கிரேக்க மொழியி லிருந்து இலத்தீன் வழியாக உலகமெங்கும் பரவிற்று என்று சென்ற இரண்டு நூற்றாண்டு முன்வரையில் நம்பி யிருந்தனர். இலக்கணத்தைக் குறிக்கும் கிராமர் (Grammar) என்ற சொல்லைச் சொன்னவுடனேயே இலத்தீன் இலக்கணம் எனக் கருதிய காலம் உண்டு. அந்த இலத்தீன் மொழியின் பழைய இலக்கணம் (Ars Grammatica) டொனாட்டஸ் (Donatus Aelius) என்பவரின் காலமாகிய கி. பி. நான்காம் நூற்றாண்டின் முந்தியதன்று. அதற்கு முந்திய கிரேக்க இலக்கணம்தானும் டயனீஷியஸ் திராக்ஸ் (Dionysius Throx) வாழ்ந்த கி. மு. முதல் நூற்றாண்டிற்கு முந்தியதன்று. ஆங்கில இலக்கணமோ கி. பி. பதினாறாம் நூற்றாண்டின் முந்தியதன்று. கி. பி. 1591-இல் கிரீன்வுட் (Greenwood) எழுதிய ஆங்கில மொழியின் இலக்கணந் தானும் (Grammatica Anglicana) இலத்தின் மொழியில் எழுதப்பட்டிருந்தது. 1640-இல் பென் ஜான்சன் (Ben Jonson) எழுதியதும் 1795-ல் முரே (Murray) எழுதிய இலக்கணமுமே தொன்மையான ஆங்கில இலக்கணங்கள் என்று கூறிவிடலாம்.

இவற்றோடு ஒப்புநோக்குமிடத்து, இந்தியாவின் பெருமை துலங்குகின்றது. இந்தியாவில்தான் கி. மு. 1500 முதல் வழங்கிவந்த வேதப் பகுதிகளை யொட்டிப் பாணினி

என்பார் வடமொழியில் கி. மு. 450-இல் இலக்கணம் தந்தார். பாணினி காலத்திற்கு முன்னர் வாழ்ந்தவரும், பாணினீயத்திற்கு முந்திய ஐந்திரம் கற்றுத் தேர்ந்தவருமான தொல்காப்பியர் கி. மு. 500-இலேயே தொல்காப்பியம் இயற்றிவிட்டார். எனவே, தொல்காப்பியம் தமிழின் பழைய இலக்கணம். அதன் பிறகு 13-ஆம் நூற்றாண்டில் நன்னூலும், 17-ஆம் நூற்றாண்டில் இலக்கண விளக்கமும், 18-ம் நூற்றாண்டில் முத்து வீரியமும் எழுந்தன. இவையெல்லாம் உரைநடையில் அல்லாமல் சூத்திர நடையில் எழுதப்பட்டுள. வீரசோழியம், நேமிநாதம், யாப்பருங் கலக் காரிகை முதலிய இலக்கணங்கள், விருத்தம், வெண்பா, கட்டளைக் கலித்துறை ஆகிய பாவகைகளில் முறையே எழுதப்பட்டுள.

ஆங்கில இலக்கணம் பாவில் அன்றி உரைநடையில் எழுதப்பட்டிருக்க, தமிழிலக்கணம் பாட்டுவகையில் எழுதப்பட்டிருப்பது ஏன்? ஆங்கில இலக்கணம் தோன்றிய பதினாறும் நூற்றாண்டிற்குள் அச்சுப்பொறி இங்கிலாந்து தேசத்தில் செயலாற்ற வந்துவிட்டதென்பது தலைசிறந்த காரணம். எழுதுவதிலும், பிரதிகள் செய்வதிலும் மிக்க இடர்ப்பாடு இருந்தமையால்தான் இந்தியாவில் தொல்காப்பியரும் பாணினியும் தத்தம் இலக்கணங்களைச் சூத்திரமாக யாத்தனர். பாணினி சூத்திரங்கள் எட்டு வயதுச் சிறுவர்களும் எட்டு மாதத்திற்குள் பாராயணம் பண்ணத் தக்கனவாய் இருந்தன என "இட்சிங்" என்ற சீனயாத்திரீகர் எழுதி வைத்துள்ளார். இச்சூத்திரங்கட்குப் பதஞ்சலி எழுதிய பேருரையைப் படித்தறியவோ மூன்று ஆண்டு வேண்டும். பதஞ்சலி எழுதிய உரைக்கு ஓர் உரையைப் பர்த்ருஹரி ஏழாம் நூற்றாண்டில் எழுதவேண்டிய நிலை ஏற்பட்டது. இதிலிருந்து, பாணினியின் சூத்திரங்கள் எத்துணைத் திட்ப

நுட்பம் உடையன என்பது விளங்கும். பாணினியின் சூத்திரங்கட்கு உரை வகுக்க வந்த ஒருவர் அவ்விளக்கத்தையே சுலோகமாக எழுதிச் "சுலோக வார்த்திககாரர்" என்றும் பெயர் பெற்றுவிட்டார். இதிலிருந்து அறியப்படுவது அக்காலத்தில் காலச்சுருக்கமும், முயற்சிச் சுருக்கமும், ஏட்டுச் சுருக்கமும் வேண்டி, இலக்கணங்கள் சூத்திர நடையில், பாவொடு ஒத்தது என்று சொல்லக்கூடிய நடையில் எழுதப்பட்டன என்பதாகும். இலத்தீனில், உரைநடையில் எழுதிய டொனட்டசுக்குப் பின் வந்த டெரண்டியேனஸ் (Terentianus) என்பவர் பாவகையில் ஓர் இலக்கணம் எழுதி இருப்பது குறிப்பிடத்தக்கது.

இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பேராசிரியர், சேனாவரையர், தெய்வச் சிலையார், கல்லாடர் முதலானவர்கள் உரைகள் வகுக்கும்படி சிறந்த கருத்துச் செறிவுடையதாய்த் தொல்காப்பியர் இலக்கணம் இயற்றினார் என்றால், படிப்போரை மயங்கவைக்கும் பொருட்டு எழுதினார் என்பது கருத்தன்று. தொல்காப்பியர் தாம் இயற்றிய சூத்திரங்களுக்குப் படியெடுத்துக் கொள்ளும்படி மாணவர்க்குக் கூறியிருப்பர். இலத்தீனில், பிரிஸ்கியேனஸ் (Friscianus) 6-ஆம் நூற்றாண்டில் எழுதிய இலக்கணத்திற்குத் தியோடோஷியஸ் (Emperor Theodosius, the younger) என்னும் பேரரசர் தமது கையாலேயே ஒரு படி எடுத்துக் கொண்டார் எனக் கூறப்படுவார். அவரைப் போன்றே தமிழ் நாட்டிலும் மாணவர் பலர் படி எடுத்துக் கொண்டார்போலும்! பிறகு, தொல்காப்பியர் தம் மாணவர்க்கு அந் நூல் துணையாகக் கற்பித்திருக்கக் கூடும். எழுதப்பட்ட உரை இல்லாமல் நூலை மாத்திரம் பிரதிசெய்து கொண்டு, அக் காலத்து மாணவர் ஆசிரியன் வாய்க்கேட்டுத் தேர்ந்தனர்போலும்! கிரேக்க இலக்கண ஆசிரியர் டயனீ

ஷியஸ் உரோமாபுரியில் இலக்கணங் கற்பித்தார்; டொனுட்டஸ் அர்ச். ஜெரோமிற்கு (St. Jerome) இலத்தீன் கற்பித்தார்; பிரிஸ்கியேனஸ் அரசாங்கச் சார்பில் கான்ஸ்டாண்டிநோபிளில் இலத்தீன் இலக்கணம் கற்பித்தார். இவர்களைப் போன்றே தொல்காப்பியரும் தம் காலத்து மாணவர்களுக்கு நேரே இலக்கணங் கற்பித்தார் எனக் கொள்ளுதல் தவருகாது. அங்ஙனம், நேருக்குநேர் கற்பிக்கிற காலத்திலும், எழுத்துச் சாதனங்கள் நிரம்ப இல்லாத காலத்திலும், அச்சுப் பொறி உதவிகள் அறவே இல்லாத காலத்திலும் திட்ப நுட்பமான சூத்திரங்களைக் கொண்ட வகையில் இலக்கணங்கள் எழுதப்பட்டமை குறைகூறற்பாலதன்று.

ஆனல், அச்சுச் சாதனம் நிரம்ப உள்ள இக்காலத்திலும், ஆசிரியர் உதவி இன்றியே தாமாகவே இலக்கணம் கற்றுக்கொள்ள விழையும் வயது முதிர்ந்த பலர் உள்ள இக்காலத்திலும், சூத்திர யாப்பு வகையினுலேயே தமிழிலக்கணம் கற்பிப்போம் என்பது பொருந்தாது. தமிழை வளர்க்கக்கூடிய வகைகளில் ஒன்று இலக்கணத்தை எளிதாக்கி உரைநடை வகையாகக் கற்பிப்பதாகும்.

பொதுவாக, மக்கள் இலக்கணம் எனக் கேட்டவுடன் அஞ்சுகின்றனர். இலக்கணம் என்பது எவரோ சிலர் காரணமின்றி வகுத்த விதிகளின் தொகை என அவர்கள் நினைக்கின்றனர். அது தவறு. எழுதுவோரும் பேசுவோரும் தத்தம் தாய்மொழியை ஆளுகின்ற வழக்கத்திலிருந்தே இவ்விதிகள் கண்டறியப்படுகின்றன. கற்றுத்தேர்ந்த மக்களுடைய வழக்கே இலக்கண வழக்காக நாளடைவிற் கொள்ளப்பட்டு வந்திருக்கிறது. அவரைப் போல எழுதும்படி ஊக்குவது இலக்கணத்தின் குறிக்கோள்களுள் ஒன்று. இலக்கணங் கற்றுத் தேர்ந்துளேன் எனப்

பிறரிடம் பெருமை பேசுவதற்காக இலக்கணம் கற்ற காலம் போய்விட்டது. இலக்கணத்தை ஒரு கலையென இப் பொழுது மதித்தல் இல்லை. இலக்கணம் கற்பதால், இலக்கி யங்கட்குப் பொருள் விளக்கம் பெறலாம் என்ற நோக்கத் தால்தான் அது இந்நாளிற் கற்கப்படுகின்றது. ஆனால், இலக்கண விதிகளுக்கு எடுத்துக்காட்டாக அமைபவையெல் லாம் மாணவருடைய பழக்கத்திற்கு அப்பாற்பட்டனவாய், வழக்கிழந்த இலக்கிய மரபுகளாய் இருத்தல் கூடாது.

தொல்காப்பியம், நன்னூல் முதலான இலக்கணங்கள் எல்லாம் பழைய இலக்கியங்களிற் கண்டவற்றிற்கு விதி கள் கூறியுள்ளன. இவற்றை எளிமைப்படுத்த வேண்டும் என்ற எண்ணம் பதினெட்டாம் நூற்றாண்டில் (1738) இந்தியாவிற்கு வந்த வீரமாமுனிவர் என்னும் பெஸ்கி (Constantius Beschi) என்பாருக்குத் தோன்றிற்று. அத னால், அவர் இயற்றிய தொன்னூல் விளக்கம் என்ற புத்த கத்தில், எழுத்தியலிலும் சொல்லியலிலும் பற்பல நூலாசிரியரால் சொல்லப்பட்ட விதிகளை எல்லாம் சுருக்கமாய் விளக்கிக் காட்டும் அட்டவணை ஒன்றைச் சேர்த்தார். எழுத்துப் புணர்ச்சிகளை உயிரீறு, மெய்யீறு, கசதபக்கள் இரட்டும் இடங்கள் கசதபக்கள் இயல்பாம் இடங்கள் எனப் பகுத்துக் காட்டினார். கடைப் பகுதியில், இலக்கண நடைக்கு ஒத்த பதமுடிப்பு என ஓர் அட்டவணை தந்து, வேற்றுமை யுருபுகளும், அவற்றின் பொருள்களும், பதமுடிக்கும் விதங்களும் பதமுடிப்பதற்கு உதாரணங்களும் என்ற உட்பிரிவுகளோடு அதனை அமைத்துக் காட்டினார், பொதுவாக, முன்னைய இலக்கண நூல்களைவிட இஃது எளிமையான வகையிலும், விளங்கக்கூடிய வகையிலும் அமைக்கப்பட்டிருப்பது குறிப்பிடத் தக்கது. இந்த இலக் கண நூலும் சூத்திரங்களினால் யாக்கப்பட்டிருந்தாலும்

இதனின் இடையிடையே எளிய வசனத்தில் விளக்கங்கள் வரையப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. உதாரணமாக, உயிரீற்றுப் புணர்ச்சி, மெய்யீற்றுப் புணர்ச்சி முதலானவை எளிய தமிழ் வசன நடையிலேயே அமைந்திருக்கின்றன. இஃது இடைப்பட்ட காலத்தில், உரோமாபுரியிலிருந்து வந்த ஒருவரால் விளைந்த நன்மை

அதற்கு அடுத்தபடியாக, ஆங்கிலேயர் தொடர்பு மிகுந்து தமிழிலக்கணத்தை அரசாங்கக் கல்லூரிகளிற் கற்பிக்க வேண்டிய நிகழ்ச்சி நேர்ந்த பிறகுதான், தமிழிலக்கணம் உரைநடையில் எழுதப்படுவதாயிற்று. தாண்டவராய முதலியார், விசாகப் பெருமாளையர், மழவை மகாலிங்க ஐயர் ஆகியோர் இப்பணியில் ஈடுபட்டு ஏறத்தாழ ஒரே காலத்தில் புத்தகங்களை எழுதி வெளிப்படுத்தினர். 1827-28 இல், தாண்டவராய முதலியாருடைய இலக்கண வினு விடையும், மழவை மகாலிங்க ஐயருடைய இலக்கணச் சுருககமும் வெளிவந்தன. 1840-இல் "பாலபோத இலக்கணம்" என்ற தலைப்பில் இன்னோர் இலக்கணம் விசாகப் பெருமாளையரால் எழுதப்பட்டு வெளியிடப்பட்டது. 1845-ல் ஆறுமுக நாவலர் இலக்கண வினு விடை ஒன்று எழுதினுர். 1893-இல் தாவீது யோசேப்பு என்பவர் "தமிழிலக்கணத் தெளிவு" என ஒன்று வெளிப்படுத்தினுர். இவரை இதனை எழுதும் பணியில் ஊக்குவித்தவர்கள் ஆறுமுக நாவலர், இராமலிங்க சுவாமிகள், மகாவித்வான்-மீனுட்சி சுந்தரம்பிள்ளை ஆகியோர். 1918-ல் "பஞ்சலட்சணம்" என்ற தலைப்பில், திருமணம் செல்வக் கேசவராய முதலியார் ஓர் இலக்கணம் வெளிப்படுத்தினுர். இவையெல்லாம் உரைநடையில் அமைந்த தமிழிலக்கணங்களே. எனவே, தமிழ் இலக்கணத்தை உரைநடையில் கற்பிக்க வேண்டும் என்ற எண்ணம் வீரமாமுனிவர் கால

முதல் விதைக்கப்பட்டு நூற்றிருபது ஆண்டுகளுக்கு முன்னுலேயே வேரூன்றிவிட்டது.

தாண்டவராய முதலியார் பழைய முறையையே கைக்கொண்டு, சூத்திரமாக அல்லாமல் வசனத்திற் கேள்விகளும் விடைகளுமாகத் தமது இலக்கணத்தைக் கொடுத்தார். "எழுத்தாவதென்னே"? "அந்த வெழுத்தெத்தனை வகை?" "இனியவ்வெழுத்துக்கள் பெறுமாத்திரையை வினவக் கடவாய்", "மாத்திரையாவதியாவது" போன்ற அவர் நூற்பகுதிகள் பழமையிலிருந்து விலகுகின்ற ஒருவர் திடீரென மாறிவிட முடியாது என்பதை வற்புறுத்துகின்றன. விசாகப் பெருமாளையர் பத்து ஆண்டு கழித்து வெளியிட்ட பாலபோத இலக்கணத்தில், பழைய முறையைச் சிறிது மாற்றினுர். நன்னூலில் எழுத்ததிகாரத்திலேயே எழுத்தியல், பதவியல் ஆகியவற்றின்பின் கூறப்படும் புணரியல்களைச் சொல்லதிகாரத்துப் பெயர் வினை இடை உரியியல்களின் பின்வைத்து, "புணர்ச்சி" என ஒரு புது அதிகாரம் கண்டார். மேலும், தொகைநிலை, தொகாநிலை, பிரயோகம், ஒழிபு என்று நான்கு இயல்கள் அமைத்துத் தொடர்மொழியதிகாரம் என்று வேருேர் அதிகாரம் கண்டார். முன்னையோர் வகுத்த எழுத்து, சொல் என்ற இரண்டு அதிகாரங்களைத் தேவைக்கு ஏற்ப நான்கு அதிகாரம் ஆக்கிக்கொள்ளக்கூடிய துணிபு சென்னை மாகாண அரசியற் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்தமையால் இவருக்கு ஏற்பட்டது போலும்! மழவை மகாலிங்க ஐயர் எழுத்தியல், பதவியல்களின் பின்னரேயே புணரியலை வைத்தாரேனும், பெயர் வினை பொது இடை உரி இயல்களின் பின் "சொற்றொடரியல்" எனப் புதுவதாக ஒன்று அமைத்துக் கொண்டது பாராட்டற்குரியது. ஆங்கில முறைப்படி, இவர் இவ்வியலை அமைத்துக்கொண்டு, எழுவாய் பயனிலை செயப்படுபொருள்

என்று சொற்றொடரிலக்கணத்தை விளக்கியுள்ளார். மேலும், தனி வாக்கியம் (Simple Sentence) கலப்பு வாக்கியம் (Complex Sentence) தொடர் வாக்கியம் (Compound Sentence) என்ற வாக்கிய வகைகளேயும் இறுதியில் விளக்கியுள்ளார். ஆறுமுக நாவலரும் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், தொடர்மொழி யதிகாரம் என மூன்று பெரும் பகுதி செய்துகொண்டு, தொடர்மொழி யதிகாரத்தில் தொகைநிலைத்தொடர், தொகா நிலைத்தொடர், ஒழிபு என்ற உட்பிரிவுகளைக் கொண்டார். தாவீது யோசேப்பு, விதிகளை உரைநடையில் தந்து சாதாரண பேச்சிலிருந்து உதாரணங்களைக் கொடுத்து, பழைய இலக்கண புத்தகங்களிடையே காணப்படும் விதிகள் தம்முள் எளிய நடையையுடைய விதியையே தேர்ந்தெடுத்து இயன்ற விடத்துக் கடைசியிற் சேர்த்துள்ளார். எழுத்தியல், சொல்லியல், பெயர்ச் சொல்லியல், வினையியல், இடையியல், உரியியல். தொடர்பியல் (Syntax), பொதுவியல், வாக்கிய விவகரணம், புணரியல், பதவியல், மரபு மொழிகள் என அவருடைய போக்கு இருக்கிறது. திருமணம் செல்வக் கேசவராய முதலியார் நன்னூற் சூத்திரங்களை வகைப்படுத்திச் சேர்ப்பதே நோக்கமாகப் "பஞ்சலட்சணத்தை" எழுதினர் ஆதலால், "வாக்கியமுடிபிலக்கணம்" எனப் புதுத்தலைப்பு ஒன்று தந்த அவர் அதுபற்றிய நன்னூற் சூத்திரக் கருத்துக்களைக் கோவைப்படுத்தியே காட்டினர். சில இடங்களில், நன்னூற் சூத்திரங்களும் அவற்றின் உரையும் தரப்பட்டிருக்கின்றன. கடினமான சில உரைக் குறிப்புக்கள்கூட இடம்பெற்றிருக்கின்றன. தமிழ்நெடுங்கணக்கின் வரலாறு, நெடுங்கணக்கில் உள்ள மிகைகளும் குறைகளும் முதலானவை பற்றிக் கட்டுரையும் எழுதிச் சேர்த்துள்ளார். திசைச்சொல் விவரம், வடசொல் விவரம், படர்க்கைப்

பெயர்ச்சொல் விவர அட்டவணை ஆகியவை இப் புத்தகத்திற்கு அணிசெய்கின்றன. புணர்ச்சி விதிகளைப் பாகுபடுத்தி வரிசைப்படுத்தியிருப்பது பாராட்டற்குரியது. கடைசிப் பகுதியாகிய வாக்கிய இலக்கணம் சிறப்பாக நோக்கத் தக்கது.

இவையன்றி, பல் வேறு இலக்கணப் புத்தகங்கள் மாணவரின் பாடதிட்டங்களுக்கேற்ப உரைநடை வடிவில் வந்துள்ளன. சிறப்பாக, திருவாளர்கள் கா. நமச்சிவாய முதலியார், வேங்கடராசலு ரெட்டியார், தேவநேயப் பாவாணர், ஔவை துரைசாமிப் பிள்ளை, சரவண ஆறுமுக முதலியார், மா. இராசமாணிக்கம் ஆகியோர் எழுதியவை குறிப்பிடத் தக்கவை. எனவே, உரைநடையில் எழுதப்பட்ட இலக்கண நூல்கள் பல இருக்கின்றன என்பது அறியப்படும். மாணவர் அல்லாத சாதாரண மக்கள் அவற்றைக் கற்றுப் பயனடைய முற்படுதல் இல்லை.

இக்காலத்தில், இலக்கண போதனையின் அளவினையும் நேரத்தையும் சுருக்கவேண்டும் என்ற எண்ணம் வலுப்பெற்று வருகின்றது. இலக்கணம் கற்பிப்போர் இன்றியமையாதவையும் எளிமை வாய்ந்தவையும் ஆகிய விதிகளைத் தேர்ந்தெடுத்துக் கற்பித்தல் நல்லது. கற்போருடைய அறிவுக்குப் புலனாகக்கூடிய வாக்கியங்களில் வருஞ் சொற்களுக்கு உரிய இலக்கணங்களைக் கற்பித்தல் போதுமானது. எழுத்திலிருந்து தொடங்கிப் பதத்தைப்பற்றிக் கூறிப் பதங்கள் தொடர்மொழியாகித் தொடர் மொழிகள் சொற்றொடர்கள் (வாக்கியங்கள்) ஆமாற்றை விளக்குவதாக இலக்கணம் அமைவதைக் காட்டிலும், சொற்றொடரிலிருந்து தொடங்கிப் பின்னோக்கிச் சொற்றொடரில் தொடர் மொழிகள் அமைந்திருக்குமாற்றை விளக்கி, தொடர் மொழிகள் சொற்கள் கூடி அமையுமாற்றைக் காட்டி,

சொற்களில் எழுத்து அமைந்திருப்பதைக் காட்டுவதாக இலக்கணம் அமைவது நல்லது.

உதாரணமாக, "குப்பன் அம் மண்ணை உழுதான்" என்னும் வாக்கியத்தைக் கொடுத்து, "குப்பன்" என்பது ஆண்பால் ஒருமைப் பெயர்ச்சொல் என்பதையும், 'மண்ணை' என்பது 'ஐ' என்ற இரண்டாம் வேற்றுமையுருபை ஏற்ற பெயர்ச்சொல் என்பதையும், "மண்ணை உழுதான்" என்பது வேற்றுமைத் தொடர் என்பதையும், உழுதான் என்பது 'உழு' என்னும் வினைப்பகுதியையும் 'த்' என்னும் இடைநிலையையும் 'ஆன்' என்னும் ஆண்பால் ஒருமை விகுதியையும் பெற்றுவந்த வினைமுற்று என்பதையும் விளக்க வேண்டும். பிறகு அகரமாகிய சுட்டெழுத்தைப் பற்றியும், அதன் முன் 'ம்' இரட்டித்த விதத்தைப்பற்றியும் விளக்க வேண்டும். கு, ப, ம முதலிய உயிர்மெய்களையும், அ, ஆகிய உயிரையும் ன், ண், ஆகிய மெய்களையும் பற்றிப் பின்னர்க் கூறலாம்.

இதனினும் சிறந்த முறை மேலே சொல்லப்பட்ட இரு முறைகளையும் வேண்டும் வண்ணம் ஆங்காங்கு ஆளும் முறையாகும். பெரும்பான்மையாக வாக்கியங்களிலிருந்து சொற்களுக்கும், சிறுபான்மை சொற்களிலிருந்து வாக்கியங்களுக்கும் கற்போரை அழைத்துக்கொண்டு செல்லுதல் தக்கதாகும்.

இவ்வழிக்கு, மேலே காட்டிய வசனத்தில் அமைந்த இலக்கண நூல்கள் எவ்வெவ் வளவு பயன்படுமெனப் பார்த்து முடிபு செய்தலே பொருத்தமுடைத்து.

இலக்கணத்தை எளிதாக்க விரும்பினால், நன்னூற் பாயிரத்தையும் பாயிர இலக்கணத்தையும் மாணவர்க்கு முதலிற் கற்பிக்கத் தொடங்கக் கூடாது. பதங்களிலிருந்தே தொடங்கலாம். அப்பொழுது ஓரெழுத்தால் ஆன சொற்

களைப் பற்றியும், பல எழுத்தால் ஆன சொற்களைப் பற்றியும் சொல்லுதல் இயலும். அப்பொழுது உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய், மெய்யெழுத்தின் இனங்கள் இவை பற்றிச் சொல்லலாம். குறில், நெடில், சுட்டு, வினா எழுத்துக்கள் பற்றிக் கூறலாம். எழுத்துக்கள் பிறக்கின்ற விதத்தைப்பற்றி உள்ள இலக்கண விதிகளைக் கற்பிக்க வேண்டா. எழுத்துக்களின் உருவத்தைப் பற்றியும் பேச வேண்டியதில்லை. எழுத்துக்கள் முதனிலையில் வருவன இவை, இடை கடை நிலைகளில் வருவன இவை என்பதைப் பகுபத இலக்கணம் கூறி முடிகிற வரையில் எடுத்துக் கொள்ளவேண்டா. பகுபதங்கள் பலவற்றை எடுத்துப் பிரித்து, பகுதி விகுதி இடைநிலை சந்தி சாரியை விகாரம் என்பவற்றைச் சிறிது சிறிதாக விளக்கவேண்டும். பிறகு பகாப்பதம் இன்னதென்று சொல்லலாம்.

பெயர்களின் வகை, இயற்சொல், திரிசொல் திசைச் சொல், வடசொல் என்பவற்றை விளக்கிய பிறகு, தன்மை முன்னிலை படர்க்கைப் பெயர்களைக் கூறி ஐம்பால் இலக்கணஞ் சொல்லி இருதிணைப் பிரிவு கூறுதல் தக்கது. வழக்கு, செய்யுள், வெளிப்படை இவைபற்றி ஒன்றுங்கூற வேண்டா. வேற்றுமைகளைப்பற்றி அடுத்தாற்போற் கற்பிக்கலாம். பின்னர், வினையிலக்கணத்தில் காலத்தைப் பற்றி முதலிற்கூறிப் பிறகே குறிப்பு வினைபற்றிக் கூற வேண்டும். பின்னர் வினையெச்சம் பெயரெச்சம் கற்பிக்கப் படலாம்.

தன்மை முன்னிலை படர்க்கை வினைச்சொற்களை அவற்றோடு கூடிய பெயர்ச் சொற்களோடு சேர்த்துக் கற்பித்தல் நல்லது. அவ்வாறே ஐம்பாலிலும் வரும் வினைச் சொற்களைக் கற்பிக்கும்பொழுது ஐம்பாற் பெயர்களோடு சேர்த்துக் கற்பிப்பதே மிக்க பயனுடையதாகும்.

ஏ, ஓ, உம், கொல் ஆகிய இடைச் சொற்களைப்பற்றி யும், ஒரு குணம் குறித்த பல உரிச்சொல் பலகுணம் குறித்த ஓர் உரிச்சொல் ஆகியவற்றைப்பற்றியும் கற்பித்த பிறகு, புணர்ச்சியிலக்கணம் கற்பிக்கப்படலாம். புணர்ச்சி விதிகள் பெருவரவிற்ருக இருக்கும் எழுத்துக்களைப் பற்றி யன முதலிற் கூறப்படவேண்டும். உதாரணமாக, மெய் யீற்றுப் புணர்ச்சியில், னகர ணகரம், லகர ளகரம், ரகர யகர ழகரங்கள் ஆகிய முறையில் எடுத்துக்கொள்ளலாம். உயிரீற்றில் எழுத்து வரிசைப்படி எடுத்துக்கொள்வதே தக்கது. உருபு புணர்ச்சியில், ஐ, கு புணரும் இலக்கணம் முதலிற் கூறி, ஏழாம் வேற்றுமையுருபு புணர்வதைப் பிறகு கூறி, அவற்றின்பின் ஏனையவற்றைக் கூறலாம். பின் சாரியை வருகின்ற உதாரணங்கள் பல தந்து சாரியைகள் இன்ன என விளக்கலாம். பின்னர், தொகைநிலைத்தொடர், தொகாநிலைத் தொடர், முடிக்குஞ் சொல்லிற்கு இடம் முத லானவற்றை உணர்த்தலாம். இவ்வழியான் இலக்கணத்தை எளிதாக்கிக் கற்பிக்கலாம். இவ்வழியிற் செயலாற்றுதற்கு உரைநடையில் உள்ள பலவேறு இலக்கணங்களில் ஆங் காங்கு உள்ள நல்ல நல்ல பகுதிகளைத் தேர்ந்தெடுத்து ஆளலாம்.

அன்றி, இன்னொரு வழியாலும் இலக்கணத்தை எளிமையாகக் கற்பித்தல் இயலும். விதியைக் கூறி எடுத் துக் காட்டினைத் தருவதை விட, பற்பல உதாரணங்களைக் கொடுத்து அவற்றிலிருந்து விதிகளை வருவித்துக் காட்டுதல் சிறந்த முறையாகும். இது மாணவர் மனத்தில் பொருள் கள் நன்கு பதியும்படி செய்யக் கூடிய முறையாகும். பொற் கால், பொற்கை, பொற்குடம், பொற்சங்கிலி, பொற்றட்டு பொற்பட்டம், பொற்பூண், முதலான உதாரணங்களைக் கொடுத்தால், நாளடைவில் மாணவன் பொன் என்ற

சொல்லின் பின் வல்லெழுத்து வந்தால், "ன்" "ற்" ஆகும் என்று கூறத் துணிவான். பிறகு, ஏனைய உதாரணங்களால் 'ன்' என்னும் எழுத்து சொற்களின் கடைசியில் நின்று வல்லெழுத்து வரப்பெற்றால் "ற்" ஆகும் என்பதைக் கற்பிக்கலாம். அதன் பிறகு, திரும்பவும் விதியைச் சொல்லிப் பல உதாரணங்களை அவனையே சொல்லச் செய்யலாம். இவ்வாறு விதிவரு வகையான் (inductive method) கற்பித்தல் மிக்க வலியுடைத்து.

பூங்கொடி
யானைக் கொம்பு
புலித்தோல்
நாய்க்குட்டி
வாழைப்பழம்

இவ்வுதாரணங்களான் ஓரெழுத்து தோன்றுகிறது எனக் காட்டலாம்.

"பொற்குடம்" முதலான உதாரணங்களால் ஓர் எழுத்து இன்னொன்றாகத் திரிகிறது எனக் காட்டலாம்.

மரமுடி
மனவாட்டம்
மாணிக்க வாசகர்
தவமுநியர்

முதலிய உதாரணங்களைக் கொடுத்து ஓரெழுத்து கெடுகிறது எனக் காட்டலாம். இவ்வாறு விகாரப்பட்டு வருதலை விளக்கிய பிற்பாடு,

"தோன்றல் திரிதல் கெடுதல் விகாரம்" என்ற நன்னூற் சூத்திரம் வருதல் இயல்பு.

இதனையே, "மெய்பிறிதாதல் மிகுதல் குன்றலென் றிவ்வென மொழிப திரியுமாறே" எனத் தொல்காப்பியரும் சொல்லியுள்ளார்.

விதிவரு வகையான் எல்லாப் பகுதிகளையும் அல்லா விட்டாலும், கடினமான பல பகுதிகளையாவது கற்பித்தால், இலக்கணம் எளிமையும் இனிமையும் உடையதாகும். இம்முறையில் வரும் இலக்கண புத்தகங்கள் அவ்வவ் வகுப்பிற்குரிய இலக்கியங்களை யொட்டியனவாக இருந்தால், மிக்க நன்மை பயக்கும். அவை மாணவர் மனத்தில் நன்ருகப் பதியும். எனவே, தமிழை வளர்க்க உதவும் வழிகளில், இலக்கணத்தை எளிதாக்கிக் கற்பித்தல் சிறந்தொன்று என்பது போதரும்.

# பதிப்பாசிரியர் தாமோதரம்

பதிப்பாசிரியர் என்றவுடன் ஒருவருக்குச் சிறந்த மதிப்பை இக்காலத்துத் தமிழ் மக்கள் அளிக்கக் காண்பது குறைந்த அளவே நிகழ்வதொன்று. இதற்குக் காரணம் நூல்களைப் பதிப்பித்தலில் உள்ள இடர்ப்பாடுகளை அவர்கள் நன்கு அறியாதிருப்பதேயாகும். அச்சியற்றப்பட்ட புத்தகங்களைப் படிப்போர் எத்துணைச் சிரமத்தோடு அவை தேர்ந்து அச்சிடப்பட்டிருக்க வேண்டும் என்பதைப் பொதுவாக உணர்வதில்லை. ஏடுகளைப்பார்த்து அப்படியே அச்சிடுவது ஒரு பெருஞ் செயலா என்று நினைத்து விடுகிறார்கள்.

ஏதேனும் ஒரு பழந்தமிழ் நூலை முறையே ஏடுகளில் ஆய்ந்து பார்த்தோர்க்கே இப்பணியின் கடுமை புலனாகும். ஒன்றோடொன்று ஒவ்வாப் பல ஏடுகள் இருத்தல் கூடும். இடங்கள் முன்பின் பிறழ்ந்து வருதல் கூடும். சில ஏடுகள் தலையும் கடையுமின்றிக் குறையுடைப் பிரதிகளாய்க் கிட்டுதல் கூடும். சில ஏடுகளின் பகுதிகளை ஒன்று சேர்த்து வாசிக்குங்கால், பொருள் இயையாது வருதல் கூடுமாதலின் ஏட்டை எறிந்துவிட்டுச் செல்லலாமா என நினைக்கும் அளவிற்கு வெறுப்புத் தோன்றுதல் கூடும். ஏடுகளைத் தேடிச் சேர்ப்பதுதானும் அருமுயற்சி. ஏட்டை வைத்திருப்போர் பிரதி கொள்ளுதற்குத்தானும் கொடுத்து வாங்கக் கூசுவர். பல ஊர்கள் சென்று அரிதில் தேடி ஏடுகளைத் திரட்டி வந்தபின் ஒப்புநோக்கி, வரிசைப்படுத்தித் தக்க

பாடத்தைத் தேர்ந்து ஒரு பழைய நூலை வெளியிடுவ தென்பது எளிதான செயலன்று. நூலாசிரியர், உரை யாசிரியர், விரிவுரையாசிரியர் ஆகியோர்க்குள்ள மதிப்பு பதிப்பாசிரியருக்கும் அளித்தல் வேண்டும் என்பது ஒப்புக் கொள்ளக் கூடியதொன்றே. அம்மூவருக்கும் உள்ள அறிவு பதிப்பாசிரியருக்கும் இன்றியமையாததாகும்.

இதுகாறும் கூறியவற்றால் பதிப்பாசிரியரின் பெருமை விளங்கும். எனவே, யாழ்ப்பாணத்துச் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் தமிழன்னைக்குச் செய்துள்ள தொண்டு எத்துணைச் சிறந்ததென்பது ஊகிக்கப்படும். அவராற் பதிப்பிக்கப்பட்ட நூல்கள் தொல்காப்பியச் சொல்லதி காரச் சேனாவரையருரை, பொருளதிகாரத்திற்கு உரிய நச்சினார்க்கினியருரை, வீரசோழியம், இறையனாரகப பொருள், கலித்தொகை, இலக்கண விளக்கம், சூளாமணி, திருத்தணிகைப் புராணம் முதலியன.

இவர் இவற்றைப் பதிப்பித்தல் காரணமாகப் பொரு ளீட்டக்கருதினார் அல்லர். முதலில் பொருள் நட்டத் தோடே அவ்வெளியீடுகள் வந்ததுண்டு. வாங்குவோர் பலர் இன்மையால் ஒருவேளை இவர் மூவாயிரத்தைந்நூறு ரூபாய் நட்டப்பட்டதுண்டு. பிறகுதான் சென்னை பூ. அரங்கநாத முதலியார், புதுக்கோட்டை அ. சேஷைய சாத்திரியார், கொழும்பு அத்வக்காத், பொ. இராமநாத முதலியார், திருவாவடுதுறைச் சுப்பிரமணிய தேசிகர் போன்றவர்கள் இவருக்குப் பொருள் உதவி புரிந்து மென் மேலும் நூல்கள் வெளியிடுமாறு ஊக்கினர். இவர் தமது புலமையின் பெருமையை உலகறியச் செய்தற்காகவும் பதிப்பித்தல் வேலையை மேற்கொண்டாரல்லர். இத னுண்மை இவர் கலித்தொகைப் பதிப்புரையின்கண்ணே, "யான் வித்தியா அகங்காரத்தினாலாவது திரவிய ஈட்டத்தி

ஞலாவது இதில் ஏற்பட்டவனல்லன் என்பதைவற்புறுத்து கின்றேன்" என எழுதியமையால் பெறப்படும். புதுக் கோட்டையில் நீதிமன்றத் தலைவராய் விளங்கிய இராவ் பகதூர் தாமோதரம்பிள்ளையவர்கள் இப்பணியில் ஈடுபட் டதன் காரணம் இவர்கட்குத் தமிழ் மொழியின் கண்ணே இருந்த பற்றும் ஆர்வமும் என்க. இவரை அன்றியும் பலர் இப்பணியில் ஈடுபடவேண்டும் என்பதும் இவரது விழைவு. அதனாலன்றோ ஒருமுறை "சீமான்களே! இவ்வாறு இறந் தொழியும் நூல்களில் உங்களுக்குச் சற்ருவது கிருபை பிறக்கவில்லையா? ஆச்சரியம்! ஆச்சரியம்!! அயலான் அழியக் காண்கினும் மனம் தளம்புகின்றதே! தமிழ்மாது நம் தாயல்லவா? இவள் அழிய நமக்கென் என்று வாளா விருக்கின்றீர்களே? தேசாபிமானம், மதாபிமானம், பாஷாபி மானம் என்று இவை இல்லாதார் பெருமையும் பெருமையா? இதனைத் தயை கூர்ந்து சிந்திப்பீர்களாகுக" என்று வரைந்தார்.

இவர் கலித்தொகை பதிப்பித்தலில் உற்ற இடுக்கண் பல. "ஏடு எடுக்கும்போது ஓரஞ் சொரிகிறது. கட்டு அவிழ்க் கும்போது இதழ்முறிகிறது. ஒற்றை புரட்டும்போது துண்டு துண்டாய்ப் பறக்கிறது. இனி எழுத்துக்களோ என்ருல் வாலுந் தலையுமின்றி நாலாபுறமும் பாணக்கலப்பை மறுத்து மறுத்து உழுது கிடக்கின்றது," என்று இவரே எழுதி யுள்ளவாற்ருன் இவை ஒருவாறு அறியப்படும். கலித் தொகையில் மற்றப்பகுதிகள் கிட்டினவாயினும் நெய்தற் பகுதி கிட்டாது மிகவருந்தி மூன்று திரைகட்குத் தக்க ஆட்களை அனுப்பிவிட்டு, வடதிசைக்கு இவரே ஏகி முடி விலே புதுச்சேரிக்கு அடுத்த நெல்லித் தோப்பிலே ஒருவரிட மிருந்து பெற்று வந்து பதிப்பித்தனர்.

ஆனல், நூலை ஏட்டுப் பிரதிகளின் போக்கிலேவிடா

மல் அறிவு துணையாக வரிசைப்படுத்தியும் கோவைப் படுத்தியும் பதிப்பித்த பெருமை பிள்ளையவர்கட்கே உரியது. கலித்தொகைப்பாட்டுக்களின் கொளுச்சொல் ஏட்டில் முன்னதாகக் காணப்பட்டதை அவ்வப்பாட்டின் பின்னதாகப் பதிப்பித்தார். ஏட்டிலே பாட்டு முழுதும் ஒருங்கு தொடர்ந்துவராமல், ஏதேனும் ஒரு முடிவு வரையில் எடுத்துக் கொண்ட பாட்டும், உரையுமாக விட்டுவிட்டு வந்ததை மாற்றிப் பாட்டு முழுதும் எடுத்தவுடன் படித்துப் பார்ப்பதற்குத் தக்கமுறையில் பதிப்பித்தார். ஏட்டில் விசேடவுரைகள் சில பாட்டினுரைக்கு முன்னும், சிலவற்றின் பின்னுமாக நியதியற்றுக் கிடந்தவற்றை ஒரு வரிசைப் படுத்திப் பின்னரேயே பதிப்பித்தார். மாணவர் பயிலும் பொருட்டு 'அல்குல்' என்ற சொல்லை அறவே விலக்கி உரியவிடத்து வேறு சொல்லைப் பெய்து பதிப்பித்தார். இவ்வாறு மாற்றியது குற்றமெனின், உலகம் மன்னிக்க வேண்டுமென வேண்டினார்.

பிள்ளையவர்களுடைய முக்கிய நோக்கம் அடியோடழிந்து போகுந் தறுவாயில் உள்ள பழைய நூல்களைப் பாதுகாப்பது ஆதலின், அதற்கு மேல் நூலைத் திருத்த முற்பட்டார் அல்லர். இயன்ற அளவு பண்டைய வடிவைப் பெறச் செய்வதும் இயலாத விடத்து இருந்தவண்ணம் உலகிற்கு ஒப்பிப்பதுமே இவர் கடனாகக்கொண்டார். இவர் வெளிப்படுத்திய பிறபாடு, கலித்தொகையைத் திரு ஈ. வை. அனந்தராமையரும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரும் வெளியிட்டுள்ளனர். அவ்வெளியீடுகள் பிள்ளையவர்களுடைய பதிப்பினை ஒரோ ஒரு வகையால் குறைபாடுடையதாகக் காட்டின், அது காரணமாகப் பிள்ளையவர்களைக் குறைகூறுதல் அறனாகாது என்க.

"என்னைக்கடந்து சிற்சில வழுக்கள் இலைமறை காய்

போல் அங்கும் இங்கும் கிடப்பின் அதையிட்டு என்மேல் குற்றம் ஏற்றல் மறைமுகத்தால் தர்மமாகாது போவதின்றி இல்லாது நேர்முகத்தால் பெரிய அநியாயம் என்றறிக" என இவரே எழுதியதை நினைவுகூர்க. பதிப்பாசிரியருள் முதலாமவர் சில வேளைகளில் தவறுதல் இயல்பே. பதிப்பாசிரியர் ஒருவரே முதற்பதிப்பில் சில இடங்களில் தவறுதலும் இயல்பே. ஆதலால், முதற் பதிப்பாசிரியர் யாவரேயாயினும், அவர் பதிப்பித்த விதத்திற் குற்றங்குறை உளவாயின் அவற்றைப் பொருட்படுத்தக் கூடாது என்பது நேரிய முறை. நிற்க, பிள்ளையவர்கள் பதிப்பித்தவற்றுள் பெரும்பாலன இன்றும் ஏற்றுக் கொள்ளக் கூடியனவாய் இருத்தல் ஒன்றே இவர்கள் புலமைக்குத் தக்க சான்று.

மேலும், தமிழ் தனிமொழி என்பதும், தமிழென்பது திராவிட மென்பதன் மரூஉ அன்றென்பதும், அஃது இந்தியாவில் எம்மொழிக்கும் பிந்தியது அன்றென்பதும், தமிழ் எவ்வாற்றானும் வடமொழியின் வழிவந்த மொழியாகாது என்பதும் பிள்ளையவர்களால் வீரசோழிய முகவுரையிலும், கலித்தொகைப் பதிப்புரையிலும் பல சான்று கொண்டு நிறுவப்பட்ட உண்மைகள்.

இப்பெரியார் தமிழுலகத்திற்குச் செய்துள்ள தொண்டினால் பொன்றாப் புகழுடையார் என்பது உறுதி.

# தமிழாசிரியர் நிலை

தமிழ்ப் பெரு மக்களே, தமிழாசிரிய நண்பர்களே, கல்வி அமைச்சர் அவர்களே, தலைமைதாங்க வந்திருக்கும் பேராசிரியர் அவர்களே, உங்கள் அனைவீருக்கும் என் அன்பும் வணக்கமும் உரிய ஆகுக. இந்த இரண்டாவது மாநிலத் தமிழ்ஆசிரியர் மாநாட்டுக்குவந்திருக்கும் உங்கள் அனைவரை யும் வரவேற்புக் குழுவின் சார்பில் வரவேற்கின்றேன். இம் மாநாடு இவ்விடத்தில் நடத்தப் பெறவேண்டும் என்ற சென்னை மாவட்டத் தமிழாசிரியர் கழக வேண்டுகோளை யொட்டி இங்கு இதனைக் கூட்டியுள்ளோம். இந்த மாநாடு தில்லையின் எல்லையிலே நடைபெறுவது மிகவும் பொருந்த முடையது ஒன்று. தமிழிலே பெருவிருப்பமுள்ள தில்லைக் கூத்தன் அண்மையில் நடமாடுவது அன்றியும், இங்கே ஒரு கலைக்கோயிலைச் செட்டிநாட்டு அரசர் சர். மு. அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் எழுப்பி இருக்கின்ற காரணத் தாலும், தமிழுக்குப் பெருமையும் சிறப்பும் அளிக்கின்ற பல்கலைக் கழகமாக இது அமைந்திருக்கிற காரணத்தாலும் இராசா சர் முத்தைய செட்டியார் அவர்களுடைய பேரா தரவால் தமிழாசிரியர்கள் அனைவரும் ஏனைய ஆசிரியர் களுக்கு ஒப்பாக மதிக்கப்படுகின்ற பெருமையுடைய பல் கலைக் கழகமாக இது இருக்கின்ற காரணத்தாலும், இவண் இம்மாநாடுகூட்டப்படுவது மிகப்பொருத்தமானதே. தமிழி னிடத்திலே மிக்க பற்றும் அன்பும் உடைய கல்வி அமைச் சர் அவர்கள் இம்மாநாட்டினைத் திறக்க இசைந்திருப்பது

பொருட்டு அவர்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவிக்கின்றேன். அண்மையில், கலைக்களஞ்சிய முதல் சம்புடத்தை வெளியிட்டபொழுது மாண்புறு கல்வி அமைச்சர் ஆற்றிய விரிவுரையில், தமிழ் மொழியிலேயே எல்லாப் பாடங்களையும் யாங்கும் கற்பிக்க வேண்டும் என்று துணிவுடன் கூறினார். பக்கத்தில் இருந்த நேயர்களை நோக்கி "நீங்கள் தமிழிலே முடியுமா" என்று கேட்டால், நான் "ஹிந்தியிலே முடியுமா" என்று கேட்பேன் என்று அறைகூவினார். அதிலிருந்து அவருடைய தமிழ்ப்பற்றும் தமிழ் ஆர்வமும் அறியப்படும். அவர்கள் இம்மாநாட்டுத் திறப்பாளராக அமைவது இக்காரணத்தாலும், கல்வி அமைச்சராக இருக்கின்ற காரணத்தாலும் மிகவும் பொருத்தமானதே.

நாவலர் சோமசுந்தர பாரதியார் அவர்கள் இந்தப் பல்கலைக்கழகத்திலேயே ஐந்து ஆண்டுகள் தமிழ்ப் புலமைத் தலைமை நடாத்திப் பெருந் தொண்டாற்றித் தமிழ் மொழிக்கென வாழ்ந்து வருபவர். இன்றும், வயது முதிர்ந்தவராயினும், தமிழே உயிர்ப் பொருள் என வாழ்ந்து வருகின்ற அவர்கள் அத்தமிழ் மொழிக்காக அருந்தொண்டாற்றி வருவது போற்றத்தக்கது ஒன்றும். அவர்கள் இன்று இம்மாநாட்டுக்குத் தலைமை தாங்குதற்கு இசைந்ததற்காக அவர்களுக்கும் நன்றி சொல்லி அவர்களை வரவேற்கிறேன். அன்றியும், இந்த மாநாட்டிலே பங்கு பெறுவதற்காக எங்கள் அழைப்பிற்கு இணங்கி வந்திருக்கின்ற ஆசிரியர்கள் பலருக்கும் "நுங்கள் வரவு நல்வரவாகுக" என மொழிகின்றேன். எங்கள் வேண்டுகோளுக்கு இணங்கி இங்குக் கூடியிருக்கின்ற அனைவரையும் வரவேற்கும் பொறுப்பு என்னுடையது ஆகின்றது.

இம் மாநாட்டிலே சிறப்பாகத் தமிழாசிரியர்களுடைய நிலையையும் ஊதியத்தையும் உயர்த்துதற்கு வழி காண

வேண்டும் என்பது பல மாவட்டக் கழகங்களின் செயற் குழுக்களுடைய விருப்பம். உயர்தரப் பள்ளிக்கூடங்களிலே பணியாற்றுகின்ற தமிழாசிரியர்கள் ஏனைய பிற ஆசிரியர் களின் நிலை அளவாவது உயர்த்தப்படவேண்டும் என்பது அவர்களுடைய விழைவு. ஏனைய பொருள்களைப் பயிற்று விக்கின்ற ஆசிரியர்கள் வகுப்பு ஆசிரியர்களாகவும் தேர்வு மேற்பார்வையாளர்களாகவும் அமைதல் போலத் தமிழா சிரியர்களும் அமைய இடம் செய்து தருதல் வேண்டும் என்ற அவர்களுடைய வேண்டுகோள் அரசியல் அதி காரிகளாலும், பள்ளிக்கூட நிர்வாகிகளாலும் கவனித்துச் செயலாற்றப்படும் தரத்ததாகும். தமிழ் மொழியினைக் கற்பிக்கின்ற ஆசிரியர்கள் தங்கள் பொருளிற் பிறரை ஒத்த சிறந்த தகுதி பெற்றிருக்கிறார்கள் ஆனதினாலே, பயிற்சி பெற்ற வித்துவான்களும் புலவர்களும் பி. ஏ., எல். டி. பட்டம் பெற்ற ஆசிரியர்கள் பெறும் ஊதியம் பெறுமாறு செய்யவேண்டும் என விடுதலை இந்தியாவில் எதிர்பார்ப்பது பொருத்தமானதே. அவ்வண்ணம், அவர்க ளுடைய நிலையையும் சம்பளத்தையும் உயர்த்துதற்குக் கேட்டுக்கொண்டு தீர்மானங்கள் சில நிறைவேற்றப்பட விருக்கின்றன.

இம்மாநாடு தமிழாசிரியர்களுடைய குறைகளைத் தெரி விப்பதற்கு மாத்திரம் கூட்டப்படுவது ஒன்று அன்று. சென்னை மாநிலத்திலேயுள்ள தமிழாசிரியர்கள் பலர் ஒருவ ரோடு ஒருவர் கூடி அளவளாவுவதற்கும், தமிழைப்பற்றி யும் தமிழாசிரியர்களைப்பற்றியும் தங்கள் தங்கள் கருத் துக்களை உரையாடிக்கொள்ளும் பொருட்டும் இம்மாநாடு பெரிதும் உதவும் என்பது நம்பிக்கை.

தமிழாசிரியர்கள் திருக்குறளை நன்றாகக் கற்று ஓதிப் பயிற்றுவித்து வருகிறார்கள். ஆனதினாலே அவர்கள்

கடவுள் நம்பிக்கையும் கடவுட் பற்றும் உடையவராக இருப்பர் என்பது சொல்லாமலே விளங்கும். திருவள்ளுவர் கூறிய "கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின்" என்ற திருக்குறள் தமிழாசிரியருக்கு என்றும் உவகை அளிக்கும் ஒரு பொன்மொழி என்பதில் ஐயமில்லை. எனவே, கற்றுத் தேர்ந்ததன் நோக்கங்களில் தலையாயதான இறைவணக்கம் அவர்களுடைய உடம்போடும் உயிரோடும் ஒட்டியது ஒன்றும். அவ்வாறு இருப்பவும், எங்கேயாவது யாராவது தமிழாசிரியர் ஒருவர் கடவுள் நம்பிக்கை குறைவாகவுடையவராகவோ, கடவுள் நம்பிக்கை அற்றவராகவோ காணப்பட்டால், அதுகாரணமாகத் தமிழாசிரியர் அனைவரும் கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள் என்பதுபோல் கருதப்படுகின்ற கருத்து தக்கது அன்றும். கடவுள் நம்பிக்கை இல்லாமல் வாழ்கின்ற ஆசிரியர்கள் ஏனைய துறைகளிலும் காணப்படுகிறார்கள். ஆனால், பொதுவாக அவர்களைப்பற்றி எவரும் ஒன்றும் சொல்லிவிடாமல், தமிழாசிரியர் என்ற வுடனேயே அவர் கடவுள் நம்பிக்கையின்கண்ணே ஐயுறுகிறார்கள். இதற்குச் சிறந்த காரணமாக இருக்கக்கூடியது தமிழாசிரியர்களின் தமிழ்ப் பற்றே போலும்! தமிழாசிரியர்கள் சிலர் தமிழ் மொழியிலேயே தமிழ் மக்களின் வாழ்க்கைச் செயல்முறைகள் அமையவேண்டும் என விளம்புகிறார்கள், நடத்தியும் காட்டுகிறார்கள். பிறந்த நாள் தொட்டு நடைபெறுகின்ற சடங்குகளிலும், திருமணங்களிலும், கடவுள் வழிபாட்டிலும், நீத்தார் வழிபாட்டிலும் தமிழ்மொழி இடம்பெற வேண்டும் என்பது பல தமிழாசிரியர்களின் ஒப்ப முடிந்த கருத்து. இக்கருத்துடையோரைத் தவறுதலாகச் சில வேளைகளில் சிலர் கடவுட் பற்று உடையவர் அல்லர் எனக் கூறிவிடுகிறார்கள்.

அது பொருந்தாது. உதாரணமாக, இந்தப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகத் தொண்டாற்றி வந்த திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை, எம்.ஏ., எம்.எல்., அவர்கள் தமிழர்தம் செயல்கள் அனைத்தும் தமிழ் மொழியில் இருத்தல் வேண்டும் என விரும்பினவர். அதனால், தில்லை நடராசர் கோவிலுக்கு அவர் சென்றாலும், வடமொழி வாயிலாக அர்ச்சனை செய்துகொள்ள விருப்பம் இல்லாதவராகத்தான் கடைசிவரை வாழ்ந்து காட்டினார்கள். அதற்காக, அவரை நாத்திகர் என்று சொன்னவர்கள் கூட உண்டு. இதிலிருந்தே அறியப்படும், ஒருவருடைய தமிழ்ப் பற்று சில வேளைகளில் பிறழ உணரப்பட்டு, அதுகாரணமாக ஏச்சுரையும் பேச்சுரையும் நிகழ்த்துவிக்க இடமாகின்றது என்பது.

நம்முடைய சமயத் தலைவர்கள் அனைவரும் நமக்குக் கற்பித்திருப்பது ஒருகடவுள் வழிபாடும் ஒருமையுணர்ச்சியும் ஆகும். அதனால் கண்ட கண்ட கடவுளரை வணங்காமல் அவரவர் விருப்பத்திற்கு உகந்த யாதாவது ஒரு கடவுளை அவரவர் விருப்பத்திற்கு ஏற்ப அமைத்துக் கொண்டு, கருதிக்கொண்டு, ஒருவர் வழிபடுவார் எனின், அவரைக் குற்றம் கூறும் அளவு நாம் செல்லுதல் கூடாது. உண்மையிலே, புறவேடம் கொள்ளாமலும் கோயில் செல்லாமலும் உள்ளத்திலேயும் வீட்டிலேயும் கடவுளை வழிபட்டு உய்யக்கூடிய பெருமையுடைய தமிழாசிரியர்கள் பலர் இருக்கிறார்கள்.

ஆனால், மாணவர்களுக்குக் கற்பிக்கின்ற வேளைகளில் மாணவர்களுடைய கடவுள் உணர்ச்சி குன்றாமலும், மாணவர்களுடைய கடவுள் உணர்ச்சியைத் தூண்டக் கூடிய வகையிலேயும் ஆசிரியர்கள் கற்பிக்க வேண்டும் என்றால், அஃது ஒப்புக்கொள்ள வேண்டியதே. புறவேடம்

கொள்ளாமலும் உருவ வழிபாடு இல்லாமலும் சிறுவர்க ளுடைய மனம் ஒன்றன்கண்ணே பற்றுக்கொள்ளாமலும் கண்டவிடத்தில் திரிந்து கடவுளைப்பற்றித் திட்டமான தொரு கொள்கையைப்பற்ற முடியாமல் போகும் என்ற கருத்தினலே, மாணவர்களுக்கு உருவவழிபாட்டின் அவசி யத்தையும், சமய சின்னங்கள் அணிவதன் அவசியத்தை யும் ஆசிரியர்கள் சொல்லக் கடமைப்பட்டவர்கள் என் ருல், அதுவும் பொருத்தமானதே. அன்றியும், பள்ளிக் கூடங்களில் பாடமாக வைக்கப்படுகின்ற நூல்களில் வரும் கடவுள் வாழ்த்துச் செய்யுட்கள் முதலானவற் றைக் கற்பிக்குங்கால், ஆராய்ச்சி செய்து இளையமாணவர் களுடைய உள்ளங்களில் ஐய வினுக்களை ஆசிரியர்கள் எழுப்பி விட்டுவிடக்கூடாது என்று எதிர்பார்ப்பது பொருத்தமானதே. இவ்வண்ணம் ஆசிரியர்கள் செய்து விடுதல் இல்லையென்றே நான் நம்புகிறேன்.

தமிழ் ஆசிரியருள் ஒருவனுகிய நான் என் நண்பர்க ளாகிய நீங்கள் நடந்துகொள்ளவேண்டிய விதம்பற்றி ஒரு சொல் சொன்னல் தவறுதலாகக் கருதமாட்டீர்கள் என்றே நம்புகிறேன். நாம் பணியாற்றும் கல்லூரியிலாயினும், பள்ளிக்கூடத்திலாயினும் சட்ட திட்டங்கட்கு உட்பட்டு நாம் நடந்து மாணவர்களுக்கு முன்மாதிரியாக இருத்தல் வேண்டும். சில வேளைகளில் தேசீய கீதமாகிய—ஜன கண மன—பாடவேண்டிய நிகழ்ச்சிகளும் இடங்களும் அமை கின்றன. அந்நேரங்களில், ஹிந்தியில் நமக்கு விருப்பம் இருந்தாலும் இல்லாது போனலும், அது தேசீய கீதம் ஆனதால், அது பாடப்படும்பொழுது நேர்நின்று, மரி யாதையுடன் நடந்துகொள்ளவேண்டும் என்பது வற்புறுத் தத்தக்கது. அதனைப் பாடும்பொழுது கூட்டங்களில் இருந்து எழுந்து போய்விடுதல் என்பது ஒவ்வாது. இவ்வகை

யில் நாம் மாணவருக்கு வழிகாட்டியாய் இருத்தல் வேண்டும்.

இந்நேரத்தில் நான் இன்னொரு செய்தியையும் குறிப்பிட விரும்புகிறேன். நம் நாட்டிலே சில கல்லூரி மேடைகளிலேயும், உயர்தரப் பள்ளிக்கூட மேடைகளிலேயும் "வாழிய செந்தமிழ் வாழ்க நற்றமிழர்" என்ற பாரதியார் பாட்டினைப் பாடுதற்குப் பலர் ஏற்பாடு செய்கிறார்கள். அந்நேரங்களிலே அப்பாடலில் வருகின்ற "ஆரிய நாட்டினர் ஆண்மையோடு இயற்றும் சீரிய முயற்சிகள் சிறந்து மிக்கோங்குக" என்று வருகின்ற காரணத்தால் அப்பாடலை அவ்வண்ணம் பாடுதற்கு உளம் தாளாமல் இருக்கின்ற தமிழ் ஆசிரியர்களும் மாணவர்களும் உண்டு என்பதை அறிவேன். இவ்வாறு மாணவரும் ஆசிரியரும் இருப்பாரேயாயின், அதுகாரணமாக அவர்களை நாத்திகர் என்றோ, தேசத்துரோகிகள் என்றோ கூறிவிடுதல் பொருந்தாது. ஆரிய நாட்டினர் என்ற இந்தப் பாட்டிலே வருகின்ற பகுதி பாரத நாட்டினர் என்று பொருள்படும், அதனால் இந்தியா தேசத்தினர் செய்யும் முயற்சிகள் ஓங்குக என்று பொருள் கொள்ளக்கூடிய வகையில் பாட்டு அமைகின்றது என்று சிலர் சொல்லுதல் இயலும். ஆயினும், இந்தப் பாட்டினைப் பாடிய கவிஞர் சுப்பிரமணிய பாரதியாரே தமிழ்மொழியினை ஆரியத்தினின்று வேறுபடுத்தி ஆரியத்துக்குச் சமமாகத் தமிழ்த்தாய் வாழ்ந்தாள் என்றவாறு இன்னொரு பாடலில் கூறியுள்ள காரணத்தாலே ஆரியமொழி வேறு தமிழ்மொழி வேறு என்ற கருத்துடையவர் அவர் என்பது அறியப்படும். தமிழ்த்தாய்க் கூற்றாக அவர் அமைத்திருக்கின்ற ஒரு பாடலிலே "ஆன்ற மொழிகளினுள்ளே—உயர் ஆரியத்துக்கு நிகர் என வாழ்ந்தேன்" என்று அமைத்துப் பாடியிருக்கின்றார். ஆனதால்

வடமொழி வேறு தமிழ்மொழி வேறு என அவர் மதித்தார் என்பது அறியப்படும். இதனால், அறிவும் சாதுரியமும் வாய்ந்த கூட்ட அமைப்பாளர்கள் செய்யவேண்டிய பணி யாதெனின், "வாழிய செந்தமிழ்" என்ற பாட்டைப் பாட ஏற்பாடு செய்யும்பொழுது, "ஆரிய நாட்டினர்" முதலாவதாக வருகின்ற அடிகளை விடுத்துப் பாட ஏற்பாடு செய்யவேண்டும் என்பதே. ஆயினும், இப்பாடலை உள்ளபடியே ஒரு மேடையிலே ஒருவர் பாடிவிட்டால், அந்தக் கூட்டத்தில் உடனே குழப்பத்தை விளைத்துவிடாமல் தலைமை ஆசிரியரையோ கூட்ட அமைப்பாளரையோ பிறகு கண்டு அவ்வாறு இனிச் செய்யலாகாது என்று எடுத்துச் சொல்லி, அவ்வண்ணம் மேற்கொண்டு செய்யாமல் பாதுகாத்துக்கொள்வதே தமிழாசிரியர் பொறுப்பும் கடமையும் ஆகும். அன்றி, அப்பாட்டையே பாடுதற்கு ஏற்பாடு செய்யாமல், "வாழ்க நிரந்தரம்—வாழ்க தமிழ் மொழி—வாழிய வாழியவே" என்ற தொடக்கத்திலே பாரதியார் பாடியுள்ள தமிழ்மொழி வாழ்த்தினைப் பாட ஏற்பாடு செய்வது இன்னும் விரும்பத்தக்கதாகும்.

இவை என் உள்ளத்தில் தோன்றிய சில கருத்துக்கள். இவற்றைச் சிந்திக்குமாறு உங்களைக் கேட்டுக்கொண்டு, நீவிர் அனைவீரையும் அன்புடன் வரவேற்கிறேன். இம்மாநாடு வெற்றியுடன் நடைபெறுமாறு அருளும்படி இறைவனை வேண்டிக்கொண்டு உங்களுடைய ஒத்துழைப்பை நாடுகிறேன்.

# தமிழில் வழிபாடு

இந்த மடத்தின் தலைவர் (தருமபுர மடத்தின் தலைவர், அவர்கள் என்னுடைய பணியைப் போற்றிச் 'செந்தமிழ்க் காவலர்' என்னும் பட்டத்தை எனக்கு அளிப்பதற்குச் செந்தமிழ்ச் சொக்கர் திருவருள் இருக்கிறது என்றும்) அதனை வந்து கட்டாயம் ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும் என்றும் தெரிவித்து இருந்தார்கள். அருட்டிரு. சுப்பிர மணிய தேசிகர் அவர்களுடைய சிறந்த தமிழ்ப் பற்றினை நான் அறிவேன் ஆனதால், அதற்கு இசைந்து இப்பொழுது உங்கள் முன் நிற்கிறேன். இந்த மடம் பதினாறுவது நூற் றாண்டிலே தோற்றுவிக்கப் பட்ட மடம் என்பது பலர் அறிந்த செய்தி. அம்மடத்தைத் தோற்றுவித்தவர் தமிழ் வேளாளர் ஒருவர் ஆவர், அவர்தாம் முதல் பட்டத்திற்கு உரியவராகிய குருஞானசம்பந்தர் எனப்படுபவர். அவரிடத் திலே பல்வேறு சொத்துக்களை அகத்தியமுனிவர் என்பவர் ஒருவர் அந்நூற்றாண்டில் ஒப்படைத்துவிட்டதாக இந்த மடத்தின் வரலாறு கூறுகின்றது. அந்த முனிவர் பழங் கால அகத்தியராக இருத்தல் இயலாது. கி. பி. ஒன்பது அல்லது பத்தாம் நூற்றாண்டிற்குப் பின் வந்து தமிழ்த் தேவாரங்களைத் திரட்டித் தந்த தமிழ் முனிவர் ஒருவர் மரபிலே வந்தவராகத்தான் இருத்தல்வேண்டும். எனவே, இந்த மடத்தை நிலைநாட்டியவர்களும், இது வளர்வதற்கு வழிவகுத்தவர்களும் தமிழர்கள் என்பது உறுதியாக

அறியப்படும். ஆதலினாலே இந்த மடத்தின் ஆதரவிலே உள்ள இருபத்தேழு கோயில்களிலும் தமிழ்மொழி வழிபாடு இயற்றுதற்குச் செந்தமிழ்ச் சொக்கரது திருவருள் வாய்க்குமேயானால், அது எவ்வளவு நன்றாக இருக்கும் என்ற எண்ணம் இந்த மடத்தாருடைய கடிதம் எனக்குக் கிடைத்தவுடன் தோற்றிற்று.

செந்தமிழ்க்காவலர் என்ற பட்டத்திற்கு உரியவனாக என்னை நான் மதிக்கின்றேன் அல்லேன். மறைமலை அடிகள், திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை (எம். ஏ., எம் எல்.) திரு. வி. கலியாணசுந்தரமுதலியார் போன்ற பெரியார்கள் இப்பட்டத்திற்கு உரியவர்களாய் வாழ்ந்தவர்கள், அல்லாமலும், வேறு சிலர் இக்காலத்திலும் இதற்கு உரியவர்களாகத் தமிழ்த்துறையிலும் அரசியல் துறையிலும் இருக்கிறார்கள். எனினும், இந்த மடத்துத்தலைவர் அவர்களுடைய பேரன்பினால் நான் இப்பட்டத்திற்கு உரியவன் எனத் தெரிந்தெடுக்கப் பட்டிருக்கின்றேன். அதற்காக அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். மாணிக்கவாசகர் "தந்தது உன் தன்னைக் கொண்டது என் தன்னைச் சங்கரா யார்கொலோ சதுரர்" என்று கூறினார். அதைப்போல, எனக்குச் செந்தமிழ்க்காவலர் என்ற பட்டத்தைத் தந்துவிட்டு என்னுடைய புன்மொழிகள் சிலவற்றிற்குச் செவிசாய்க்க இந்த மடத்தின் தலைவர் அவர்கள் இணங்கி உள்ளார்கள். அதற்காகவும் அவர்களுக்கு நன்றி செலுத்துகின்றேன். இறைவர் "உடல் இடம் கொண்டவர்" என்று மாணிக்கவாசகரால் கூறப்படுகின்றார், அந்த இறைவர் என்னுடைய உடலையும் இடமாகக்கொண்டு உள்ளத்தில் அமர்ந்து உரையாற்றுகின்றார் என்றே கருதுகின்றேன். இந்த மடத்தின் நிர்வாகத்திற்கு உட்பட்ட குற்றாலம் என்ற திருத்துருத்திக் கோயி

லில் வீற்றிருக்கும் கடவுளின் பெயர் "சொன்னவாறு அறிவார்" என்பது. சொன்னவாறு அறிவார் என்றால், மக்கள் எங்கெந்த மொழியில் சொன்னாலும் அந்தந்த மொழியிலே அறியும் ஆற்றல் பெற்றவர் கடவுள் என்பது கருத்து. எனவே, தமிழ்மொழி வழியாகத் தமிழ் நாட்டுக் கோயில்களில் வழிபாடு இயற்றினால் இறைவர் ஏற்றுக் கொண்டு அருள்புரிவார் என்பதன்கண்ணே ஐயம் இருத்தற்கு இடம் இல்லை. மேலும். இந்த மடத்திற்கு உட்பட்ட மற்றொரு கோயிலாகிய திருக்கடையூர்க் கோயிலில் "அபிராமி அந்தாதி" என்ற ஒரு நூல் இயற்றப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. அந்த நூல் எழுந்த விதத்தை நோக்குவோம். அரசர் ஒருவர் முன்னிலையில் அடியவர் ஒருவர் அமாவாசை நாள் என்பதை மறந்துபோய்ப் பூர்ணிமை எனத்தவறிக் கூறிவிட்டதன் காரணமாக அபிராமி அம்மையை வேண்டிப் பாதுகாக்குமாறு கேட்டுப் பாடப்பட்ட பாட்டு அபிராமி அந்தாதி என்று கூறப்படுகிறது. இந்தத் தமிழ்ப் பாடல்களினால் அமாவாசை நாளை முழுநிலா நாளாகச் செய்யக்கூடுமானால், அதே தமிழ்மொழியில் அமைந்த பாட்டால் கல்லினைக் கடவுளாக்க இயலாதா என்பது கேள்வி.

இந்த மடத்தாருடைய தமிழ்ப்பற்றை நான் இன்னும் நன்றாக அறிந்திருக்கின்றேன். அண்மையில், ஆவடியில் நடைபெற்ற அனைத்திந்திய காங்கிரசு மாநாட்டின்போது இந்த மடத்தார் ஆங்கிலத்தில் அச்சடித்து வழங்கிய ஒரு துணுக்கிலிருந்தே இந்த மடத்தாருடைய தமிழ்ப்பற்று எனக்கு நன்கு விளங்குகிறது. சைவசித்தாந்தத்தின் சுருக்க வரலாற்றைப் பற்றிக்கூறுகின்ற அந்தத்துணுக்கில், கடவுள் என்ற தமிழ்ச் சொல் கடவுளின் முழுத் தத்துவத்தையும் விளக்குமாறுபோலப் பிரம்மம், விஷ்ணு முதலிய

வடமொழிச் சொற்கள் விளக்குவனவாக இல்லை என்ற வகையில் அந்தத் துணுக்கு தொடங்குகின்றது. அன்றியும், இடையில். சைவசித்தாந்த மெய்ந்நூல் திராவிட மக்களது மென்மையான அறிவின் கதிர் என டாக்டர் ஜி. யு, போப் ஆங்கிலத்தில் சொல்லி இருப்பதை அந்தத்துணுக்கு எடுத்துக் காட்டியுள்ளது. இதைப்போன்ற தமிழ்ப்பற்று வெளிப்படுகின்ற பல இடங்கள் நான் இந்த மடத்தாரின் வெளியீடுகளிற் கண்டு கண்டு மகிழ்ந்துள்ளேன்.

அண்மையில் நான் இலண்டன்மா நகருக்குப் போய் வந்ததைப் பற்றி மடத்தின் தலைவர் அவர்கள் குறிப்பிட்டார்கள். ஆம், நான் அங்குக் கண்டது என்ன? ஆக்சுபோர்டு, கேம்பிரிட்ஜ் முதலிய பல்கலைக் கழகங்கள் பதினொன்று, பன்னிரண்டாம் நூற்றாண்டுகளிலே தோற்றுவிக்கப்பட்டவை, தோன்றிய காலங்களில் இலத்தின் மொழி வழியாக வழிபாடு நடத்தி வந்தவை, இந்த நாளில் ஆங்கிலேயருக்கு உரிய ஆங்கில மொழிவழியாக வழிபாடு நடத்துதலைக்கண்டேன். ஷேக்ஸ்பியர் புதைக்கப்பட்டுள்ள டிரினிடி கோயிலில் [Trinity Chapel) நடந்த ஒரு வழிபாட்டை ஒருநாள் நான் நேரில் கண்டேன், இங்கிலாந்து தேசத்தில் மிகப்பழமையான கிருத்துவக் கோயில் என்று சொல்லப்படுகின்ற டர்ரம் கோயிலில் (Durham Cathedral) ஒருநாள் வழிபாடு கண்டேன். இந்தக் கோயில்களில் எல்லாம் முன்னர் அன்னியமொழியாகிய இலத்தினில் வழிபாடு நடந்தது போய் இப்பொழுது ஆங்கிலேயருடைய உரிமைமொழியாகிய ஆங்கில மொழி வழியாக வழிபாடு அழகாகவும் இனிமையாகவும் நடப்பதைக் கண்டு மகிழ்ந்தேன். கூடிய மக்கள் எல்லோருக்கும் அவ்வழிபாட்டிற் கிடையே சொல்லுகின்றன அனைத்தும் விளங்குகின்ற காரணத்தால் மக்கள் வழிபாடு உள்ளத்தோடு ஒட்டிய

நாக இருந்தமையைக் கண்டேன். அதைப்போன்ற நிலை நம் நாட்டில் எந்த நாள் வரும் என ஏங்கியே திரும்பினேன்.

உலகத்தில் எப்பொழுதும் இலத்தினிலேயோ, சமஸ்கிருதத்திலேயோதான் வழிபாடு இருந்துவந்தது என்று சொல்லுதல் இயலாது. விவிலியத்தை (The Bible) இலத்தீன் மொழியிலேயே ஐரோப்பாக்கண்டம் முழுதும் பன்னிரண்டாவது நூற்றாண்டிற்கு முன்னால் வழங்கிவந்தார்கள். பன்னிரண்டாம் நூற்றாண்டில் பீட்டர் வால்டோ (Peter Waldo) என்ற ஒரு பெருஞ் செல்வர் பிரெஞ்சு மொழியிலே முதன்முதலாக விவிலியத்தை மொழிபெயர்க்க ஏற்பாடு செய்து அதனைப் பெருவழக்கிற்குங் கொண்டுவந்தார். பதினான்காவது நூற்றாண்டில் ஆக்சுபோர்டு பல்கலைக் கழகத்தில் பேராசிரியராக இருந்த ஜான் வைக்லிப் (John Wycliff) என்பவர் முதல் முதல் விவிலியத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து இங்கிலாந்திலும், ஜெர்மானியிலும், பொகிமியாவிலும் பரப்பினார். அவருடைய ஆங்கில மொழிபெயர்ப்பைக் கேட்டல் கூடாது என அவர்காலத்தில் இங்கிலாந்து தேசத்திலேயே பலர் அடிக்கவும், வதைக்கவும் பட்டனர். ஆயினும், துணிவோடு கசை அடி பட்டாவது தம்மொழியில் உள்ள விவிலியத்தையே பின்பற்றுவோம் என நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக்கான மக்கள் ஆங்காங்கு தெருத் தெருவாக நின்று கேட்டார்கள். நான் போய்ப் பார்த்த பாராளுமன்ற அறைகள் ஒன்றனில் (St. Stephen's Hall) ஒரு தொகுதி ஓவியம் தீட்டப்பட்டிருக்கக் கண்டேன். அந்த ஓவியத்தைத் திறந்து வைத்தவர் பால்டுவின் என்ற பழைய பிரதமர். அந்த ஓவியம் தீட்டிக் காட்டி இருப்பது வைக்கிலிப்பின் மொழிபெயர்ப்பைக் கசையடி பட்டும் கேட்டுக்கொண்டிருக்கின்ற மக்கள் சிலருடைய கூட்டம் பற்றியதாகும். பதினைந்தாவது நூற்

ருண்டில் மார்டின் லூதர் (Martin Luther) என்பவர் ஜெர் மானிய மொழியில் முதன்முதலாக விவிலியத்தை மொழி பெயர்த்தார். இவர்கள் காலத்தில் எல்லாம் இவர்களைத் தூற்றிய மக்களும், தூக்கில் இடவேண்டும் என்று கூறிய மக்களும் நிரம்ப நிரம்ப உண்டு. ஆயினும், இன்று மார்ட்டின் லூதர் நிறுவிய பிராட்டஸ்டெண்டு மதத்தைச் சார்ந்த கிருத்துவர்களுடைய தொகை உலகில் ஏறத்தாழ பதினாறு கோடி. பதினாறாவது நூற்றாண்டில் பாரிஸ் பக்கத்தில் தோன்றிய ஜான் கால்வின் (John Calvin) என்பவரும். ஸ்காத்லாந்து தேசத்தில் தோன்றிய ஜான் நாக்கு (John Knox) என்பவரும் பல பெரிய சீர்திருத்தங்கள் சமயத்தின் கண்ணே செய்து சமயத்தை வளர்த்தார்கள். அவர்களால் வளர்க்கப் பட்ட சமயத்தைத் தழுவிய மக்கள் இப்பொழுது உலகத்தில் பலர் பலர் எனக் காண்கிறோம்.

அதைப்போல், சமயத்தில் சீர்திருத்தம் செய்யவேண்டும் என்றால் முதல்முதலில் சமயப்பணிகளைத் தமிழ்மொழி வழியாக அமைத்தல் வேண்டும். வடமொழியிலிருந்து மந்திரங்களை மொழி பெயர்க்கவேண்டுமென்பதில்லை. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர் போன்ற அருட்குரவர்களுடைய திருவாக்குகளிலிருந்து கடவுள் வணக்கத்திற்கு உரிய பல்வேறு சொற்றொடர்களைத் தேடித் தொகுத்துக் கொள்ளுதல் வேண்டும். "தோழா போற்றி, துணைவா போற்றி", "வாழ்வே போற்றி என் வைப்பே போற்றி" என்பன போன்று வரக்கூடிய பகுதிகளைத் திரட்டினால் 108 திருப்பெயர்கள், 1008 திருப்பெயர்கள் இறைவர்க்கு உரியன தமிழ்மொழியில் அளவிடற்கரியனவாகக் கிடைக்கும். அவைகளைக் கொண்டு தமிழ்நாட்டுக் கோயில்களில் இறைவர் திருமுன் வழிபாடு செய்வித்தால் மக்களும் மகிழ்வார்கள், இறைவரும் மகிழ்வார்

எனக்கருதுகிறேன். என்மாட்டு வைத்த அன்பினாலே இந்த மடத்தின் தலைவர் அவர்கள் என்னை அழைப்பித்துப் பட்டத்தை வழங்கினார்கள். அவர்கள் மாட்டு வைக்கின்ற அன்பினாலே நான் இந்நேரம் தோன்றுகின்ற என்னுடைய கருத்துக்களை உரிமையோடு தெரிவித்து விட்டேன். அவர்கள் துணிவும் நம்பிக்கையும் உடையவர்கள் ஆதலினாலே விரைவில் ஆவன செய்வார்கள் என்று உறுதியாக நம்புகிறேன். இதைப்போன்ற சீர்திருத்தங்களைச் செய்தற்குத் துணிவும் மனவுறுதியும் வேண்டும். இந்த மடத்தார் பண்டைய முறைகளிலிருந்து நெகிழ்ந்து இக்காலத்திற்கு ஏற்றவாறு அறங்கள் செய்யும் இயல்பினர் எனக் காண்கின்றேன். ஆதலால், இக்காலத்திற்கு ஏற்றவகையில் மறுமலர்ச்சி உள்ளத்தோடு செயலாற்றுவார்கள் என எதிர்பார்க்கின்றேன்.

சேக்கிழார் தாம் வாழ்ந்த பன்னிரண்டாம் நூற்றாண்டில் மறுமலர்ச்சிக்கு வழிகோலினர். கண்ணப்ப நாயனார் வரலாறே அதற்குச் சான்று; கண்ணப்பர் என்ற பெயர் கூட அதற்குச் சான்று. திருக்காளத்தியில் உள்ள கடவுள் திண்ணனார் என்பவரைக் " கண்ணப்ப நிற்க; கண்ணப்ப நிற்க " எனத் தமிழிற் கூறினார் என்று அன்றோ சேக்கிழார் எழுதியுள்ளார்? தமது ஒரு கண்ணை முன்னர் இடந்து அப்பிவிட்டு, இரண்டாவது கண்ணைப் பிடுங்குதற்குத் திண்ணனார் என்ற வேடர் தொடங்கும்பொழுது கடவுள் கூறியது யாது? "நில்லு கண்ணப்ப, நில்லு கண்ணப்ப" என்பது அன்றோ? "கண்ணை அப்புதலை நிறுத்து, கண்ணை இடந்து அப்புதலை நிறுத்து" என்று அவரோடு தமிழ் மொழியில் அன்றோ பேசினார்? மேலும், கண்ணப்பர் கூறும் தமிழ்ச் சொற்கள் ஆனவை வடமொழி வேதங்கள் தோத்திரங்கள் மந்திரங்கள் யாவையினும் மிக நல்லவை என்று

இறைவர் சிவகோசரியார் என்னும் கோயிற் பூசகருக்குக் கூறினார் என்று அன்றே சேக்கிழார் எழுதினார். இவ்வாறு எழுதுதற்குப் பன்னிரண்டாம் நூற்றாண்டிற் பெரியதொரு துணிவு வேண்டும் ஆதலால்தான், மறுமலர்ச்சியுள்ளம் படைத்தவர் சேக்கிழார் என்று சொல்கின்றேன். அவர் அவ்வாறு கூறுதற்குக் காரணம் என்ன? தமிழர் ஒருவர் தாம் அறிந்த மொழியில் கடவுளைப்பற்றிச் சொல்வது உளத்தோடு ஒட்டுவதால், அகமும் முகமும் மலருகின்றன என்ற கருத்தினைச் சேக்கிழார் அழகாக எடுத்துக் காட்டியுள்ளார்.

*"மன்பெருமா மறைமொழிகள் மாமுனிவர் மகிழ்ந்துரைக்கும்*
*இன்பமொழித் தோத்திரங்கள் மந்திரங்கள் யாவையினும்*
*முன்பிருந்து மற்றவன்தன் முகமலர அகநெகிழ*
*அன்பில்நினைந்து எனையல்லால் அறிவுறு மொழிநல்ல."*

என்ற பாட்டினைப் பார்க்க. "சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார், செல்வர் சிவன் அடிக் கீழ்ப் பல்லோரும் ஏத்தப் பணிந்து" என்றே மாணிக்க வாசகர் சொல்லும் பொருளும் உணர்ந்து பாடினார். பொருள் அறியமாட்டாத பிறமொழிகள் வாயிலாகத் தமிழ்நாட்டில் தமிழர்களால் கடவுளுக்கு வழிபாடு இயற்றப்படுதல் பொருந்தாது. கடவுளைப் பொறுத்தவரையில் மொழிபற்றிய சண்டை வேண்டாம் என்பவர்கள் சற்றுச் சிந்தித்துப் பார்த்து, தமிழிற் செய்யக்கூடாது என்று சொல்லிச் சண்டைக்கு வாராமல் விலகிவிடுதல் நல்லது. கடவுள் மனமும் மொழியும் கடந்தவர் என்பது உண்மையானால், வடமொழி முதலிய எல்லா மொழிகளுக்கும் அப்பாற்பட்டவர் என்பதே பொருளாகும். சொற்களால் கடவுளை முற்ற முடியக் கூறுதல் இயலாது என்பதே

கருத்தாமேல், நமக்குத் தெரிந்த மொழிச் சொற்களால் நம்மால் இயன்ற இயன்ற அளவு சொல்லுவோம் என்பதே பொருள்.

இமயம் முதல் குமரி வரையில் கடவுள் வழிபாடு வடமொழியிலேயே நடைபெற்று வருகிறது எனத் தவறுதலாகச் சிலர் கருதுதல் கூடும். வடமொழியோடு ஒத்த பிற மொழிகளில் வழிபாடு நடந்தாலும், சில பல ஒலியொப்புமையான் வடமொழியிலேயே நடப்பதாகக் கருதிவிடுதல் கூடும். உதாரணமாக, பெங்களூரிற் சில கோயில்களிற் கன்னடத்தில் நடைபெறும் வழிபாட்டைக் கன்னடம் அறியாத தமிழர்கள் வடமொழியில் நடப்பதாகவே எண்ணி விடுவார்கள். நான் பெங்களூர்ச் சுப்பிரமணியர் கோயிலில் நல்ல கன்னடத்தில் வழிபாடு நடப்பதைப் பார்த்திருக்கிறேன்.

பல்லாற்ருன் நோக்கினும், தமிழ்நாட்டுத் தமிழர் தம் கோயில்களுள்ளே தமிழ்மொழியில் வாழ்த்தும் வழிபாடும் அமைக்கப்பட வேண்டும் என்பது நன்கு விளங்கும்.

# 14. தமிழோசை

தமிழ் மொழியைப் பற்றிப் பல கருத்துக்கள் நாட்டில் இருந்து வருகின்றன. சிலர் அது சிவபெருமானாலே அருளப் பட்டது என்றும், வேறு சிலர் முருகப்பெருமான் திருவருளால் தோற்றியது என்றும் கூறுவர். அக் கருத்துக்கள் தமிழ் மொழிக்குப் பெருமை தரவேண்டும் என்ற எண்ணத்தில் எழுந்திருக்கின்றன என்பது உண்மை. ஆயினும், உற்று நோக்கினால் எந்த ஒரு மொழியைத் தானும் கடவுள் படைத்துக் கொடுத்தல் இல்லை என்பது ஆராய்ச்சியாளர்க்குத் தோன்றக்கூடிய ஒப்ப முடிந்த கருத்தாகும். உலகத்தில் உள்ள மொழிகளில் எதனையாவது ஒன்றைக் கடவுள் படைத்துத் தந்தார் என்பது சொல்லப்படுகிற பொழுது தான், தமிழ் மொழியையும் கடவுள் படைத்தார் என்று ஏன் கூறுதல் ஆகாது எனத் தோற்றும். உலகத்தில் உள்ள மொழிகளில் எந்த ஒன்றும் கடவுளால் படைக்கப்படவில்லை என்பதும், மொழிகள் எல்லாம் மக்களால் அமைத்துக் கொள்ளப்பட்டன என்பதும் போதருமாயின், தமிழ் மொழியும் மக்களால் நாளடைவில் தம்முடைய கூட்டுறவால் ஆக்கிக்கொள்ளப் பட்டதொரு மொழி என்பதன் கண்ணே தடையிருத்தல் இயலாது. உலகில் எழுந்த மொழிக்குள் எபிரேய மொழியும் சமக்கிருத மொழியும் கடவுளால் படைக்கப்பட்டன எனச் சிலர் சொல்லிவந்தாராக, அக் கருத்தினுக்கு ஒப்பவே தமிழ்மொழி தானும் கடவுளால் படைக்கப்பட்டது என்று சொல்லவேண்டிய

இன்றியமையாத நிலை முற்காலத்தில் ஏற்பட்டது. ஆனால், இரண்டு மூன்று நூற்றாண்டுகளாக எபிரேய மொழியோ சமஸ்கிருத மொழியோ பிற எந்த ஒரு மொழியோ கடவுளால் ஒரு நாளில் படைக்கப்பட்டது என்று கூறுகின்ற கருத்து வலியுடையது ஆகாது என்பது நிறுவப்பட்டு விட்டது. அக் காரணத்தினால் தமிழ் மொழியைப் பற்றியும், கடவுள் தொடர்பு படுத்திக் கூறவேண்டிய நிலை இன்று, இல்லை என்று சொல்வது தவறு ஆகமாட்டாது. மொழிகள் தோன்றுகின்றவாற்றைப் பற்றி ஆராய்ந்து முடிவு கட்டியுள்ள அறிஞர்கள் மனிதன் முதலில் தோன்றியபொழுது பேசுதற்குரிய கருவிகளைத் தன் உறுப்புக்களோடு பெற்றிருந்தானே யாயினும் ஒரு மொழியைப் பேசிக்கொண்டு அவன் பிறக்கவில்லை என்று நிறுவியிருக்கிறார்கள். முதலில் தோன்றிய மனிதன் ஒலிகளை வாளா எழுப்பிக் கொண்டிருந்தான். அவன் எழுப்பிய ஒலிகளுக்குப் பொருள் வரையறையில்லை. நாளடைவில் கேட்போர் பேசுவோர் ஆகிய இரு திறத்தாருடைய கூட்டுறவாலும் ஒத்துழைப்பாலும் ஒலிகளுக்குப் பொருள்கள் காணப்பட்டு வழங்கப்பட்டன. அப் பொருள்கள் தாமும் மக்களால் சில வேளைகளில் கை, கால் அடையாளங்களோடு ஒலிகள் சேர்ந்தபொழுதே உண்டாக்கிக் கொள்ளப்பட்டன. ஆதலால் தமிழ் மொழியைச் சிவபெருமானோ, முருகக் கடவுளோ ஒரு சம்புடத்தில் அடைத்து அல்லது சுவடிகளில் எழுதித் தந்துவிட்டார் என்பது போன்று கூறப்படுகின்ற கருத்து ஒவ்வாது என்பது புலப்படும். பன்னெடுங்காலத்துக்கு முன்னே ஓரிடத்தில் தோன்றிய மக்கள் நாளடைவில் மேலே சொன்னவாறு ஒரு மொழி வரையறை செய்துகொண்டார்களாக, அதன் பின்னர், அம் மொழிக்குப் பெயர் தமிழ் என்றும், அதனைப் பேசிய

மக்களின் பெயர் தமிழ் மக்கள் என்றும், அவர்கள் வாழ்ந்த நாடு தமிழ்நாடு என்றும் சொல்லத் தலைப்பட்டனர் என்பது அறியப்படும்.

அதே காலத்தில் வெவ்வேறு திசைகளில் வெவ்வேறு திற மக்கள் தம்முள் வேறு பழக்கவழக்கத்தால் ஒவ்வொரு மொழி உண்டாக்கிக் கொண்டிருத்தல் கூடும். அவ்வாறு உலகில் தோற்றிய தொன்மையான மொழிகளில் எபிரேயம், கிரேக்கம், எகிப்தியம், சமக்கிருதம் முதலிய சிலவற்றைக் குறிப்பிடலாம். சமக்கிருத மொழி இந்தியா தேசத்தில் முற்காலத்திற் பேசப்பட்டதொரு மொழி அன்று என்பதும், இடைக்காலத்திலே இந்தியா தேசத்தினுள் வந்து நுழைந்ததொரு மொழி என்பதும் அறிஞர்கள் கருத்து. இந்தியா தேசத்தில் சமக்கிருதம் குடிபுகும் முன்னர் தமிழ் மொழி இவண் செழித்துத் தழைத்து இருந்ததொரு மொழி என்பது நுண்ணறிஞர் பலரது கருத்து.

அவ்வாறு இருப்பவும், சிலர் சிற்சில வேளைகளில் தமிழ் மொழி சமக்கிருதத்தினின்று தோன்றிய மொழி என்று கூறுவதைப் பார்த்தால், இக்கருத்து எத்துணை தவறுபட்ட கருத்து எனத் தோற்றுகிறது. ஆயினும், அரசியலிலும் சமுதாயத்திலும் பிற துறைகளிலும் உயர்நிலையில் உள்ள பல பேரறிஞர்களும் செல்வர்களும் தமிழுக்குத் தாய் சமக்கிருதம் என்று சொல்லி வந்திருப்பதும், சொல்லி வருவதும் வேடிக்கையாகவே இருக்கின்றன. தமிழகத்தில்தானே சென்ற நூற்றாண்டுவரை தமிழ் மக்கள் தம்முள்ளேயே வடமொழியினின்று தமிழ் பிறந்தது என்று கூறினால், அது காரணமாகத் தமிழுக்கு ஒரு பெருமையுண்டு எனக் கருதியவர்கள் பலர் இருந்தார்கள். ஆயினும், இந்நூற்றாண்டில் மக்களிடையே எழுந்திருக்கின்ற ஒரு விழிப்புணர்ச்சியால் தம்மொழி பிறிதொரு மொழியினின்று பிறந்

தது என்று சொல்லிக்கொள்ள நாணுகின்ற மக்கள் பலர் இருக்கின்ற நிலை ஏற்பட்டிருக்கிறது.

சிலர், இந்தியமொழிகள் அனைத்திற்கும் தாய் சமக்கிருதம் என்று பத்திரிகைகளில் வெளியிட்டார்கள். அவர் தம் கருத்து இந்திய மொழிகள் அனைத்திற்கும் தாயாகச் சமக்கிருதம் இருப்பதால், இந்தச் சமக்கிருதத்தின் இன்னொரு வகை மொழியான இந்தி எல்லா இந்திய மொழிகளாலும் தழுவிக்கொள்ளும் தன்மைத்தாகும் என்பது. சமக்கிருதமும் இந்தியும்நெருங்கிய தொடர்புடையன என்பதன்கண்ணே யாதோர் ஐயமும் இல்லை. ஆயினும், தென்னிந்திய மொழிகளாகிய தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம் முதலான மொழிகள் சமக்கிருதத்தின் வழியாகத் தோன்றியன என்று அவர்களால் கருதப்படுகின்ற கருத்து ஒவ்வாது என்பது டாக்டர் கால்டுவேலர் எழுதிய திராவிட ஒப்பியல் நூல் இலக்கணத்தால் அறியப்படும். ஒரு மொழிக்கு இன்னொரு மொழி தாய் என்று கூறுவதாக இருந்தால், அவ்வாறு கூறுதற்கு முன் சில வகைகளில் அவ்விரண்டு மொழிகளும் ஒத்திருக்கின்றனவா என ஆராய்ந்து காணுதல் வேண்டும். ஒரு மொழியினுள்ளே வேறு ஒரு மொழியின் சொற்கள் சில இக்காலத்தில் வழங்கப்படுகின்ற ஒரே காரணத்தால், முன்னைய மொழி பின்னர்ச் சொல்லப்பட்ட மொழியின் வழிவந்தது என்று கூறுதல் ஒவ்வாக் கருத்தாகும். வரலாற்றுக் கண்கொண்டு நோக்கித் தொன்றுதொட்டே அவ்விரு மொழிகளும் தொடர்புடையனவா என்று அறிவதோடு அன்றி பொருட்களைத் தெரிவிப்பதற்கு அடிப்படையான சொற்களை ஒரு மொழி வேறொரு மொழியினின்று கடன் வாங்கியிருக்கின்றதா என ஆராய்ந்து பார்த்தல் வேண்டும். இவ்வாறு ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ள வேண்டிய சொற்

களில் மக்களினுடைய தலை, முகம், கை, கால் முதலிய உறுப்புக்களைக் குறிக்கவேண்டிய சொற்கள் முதலிடம் பெறும். நாள்தோறும் மக்கள் தம் உரையாடல்களில் வழங்கவேண்டிய சொற்களாகிய நான், நீ, தீ, காற்று, வான் போன்ற அடிப்படைக் கருத்துக்களைக் குறித்தற்குரிய சொற்களும், உண், உடு, செய், போ, வா; இரு, ஓடு போன்ற அடிப்படை வினைச்சொற்களும் அடுத்த இடம் பெறும். நாள்தோறும் மக்கள் தத்தம் கருத்தைத் தெரிவிக்க உதவுகின்ற இவைபோன்ற அடிப்படையான இன்றியமையாச் சொற்கள் ஒரு மொழியின்கண்ணே தனக்கே உரியனவாக இருக்குமெனின், அம்மொழி அச்சொற்களுக்காகப் பிறமொழிக்குக் கடன்பட்டது என்று கூறுதலோ, பிறமொழியினின்று தோன்றியது என்று கூறுதலோ ஒவ்வாது என்பது மொழி இலக்கணம் வல்லவர்கள் யாவரும் அறிந்ததொரு செய்தி.

இவ்வாறு நோக்கினால் தமிழ்மொழி அடிப்படையான கருத்துக்களைத் தெரிவிப்பதற்கு உரிய சொற்களையும் சொல்வேர்களையும் தானே நிரம்ப நிரம்பப் பெற்றுள்ளது என்பது விளங்கும். அடிப்படைக் கருத்துக்களைத் தெரிவிப்பதற்கு வடமொழிக்கோ பிறமொழிக்கோ அது கடப்பாடுடையது அன்று. ஆதலால், தமிழ் சமக்கிருதத்தினின்று தோன்றிய மொழி என்று கூறுவது அறவே பொருந்தாது என்பது விளங்கும்.

சில வேளைகளில், வடமொழிச் சொற்கள் தமிழில் வழங்குகின்ற காரணத்தால் தமிழ் வடமொழியினின்று தோன்றியது என்று சொல்லுவது, இக் காலத்தில் தமிழர் சிலர் ஆங்கிலச் சொற்களை நிரம்பத் தம்முடைய பேச்சில் கலந்து பேசுவதால் ஆங்கிலத்தினின்று தமிழ் பிறந்த என்று சொல்லுவதனோடு ஒக்கும். கலைக் கருத்துக்களைத்

தெரிவிக்க எல்லா மொழிகளும் வேறு சில மொழிகளி னின்று கடன் வாங்குதல் என்பது உலகெங்கும் காணப்படு கின்ற ஒரு மரபு. நாம் புதுவதாகப் பெறுகின்ற சில பொருள்களையொட்டி அவற்றின் பெயரோடு சேர்த்து அப் பொருள்களை நாம் கடன் வாங்கிக் கொள்கிறோம். அதனால் நமக்கென ஒரு தனிமொழி இல்லை என்பது கருத்தாகமாட் டாது. சில கலைச் சொற்களையும், சமயத்துறைச் சொற் களையும் வடமொழியினின்று தமிழ்மொழி பல நூற்றாண்டு களில் கடன் வாங்கியிருப்பதும், இக் காலத்தில் பலர் வட மொழிச் சொற்களைத் தம்முடைய கட்டுரைகளிலேயும் நிரம்ப வழங்கிவருவதும் தமிழ்மொழி வடமொழியினின்று பிறந்தது என்று கூறுதற்குரிய சான்றுகள் ஆகமாட்டா. ஒருவர் விரும்பினால் வடமொழிக் கலப்பின்றிப் பேசுதலோ எழுதுதலோ இயலும் என்பதை டாக்டர் கால்டுவேலர் மிக்க அழகோடு எடுத்து உரைத்திருக்கின்றார். மதிப்பிற் குரிய மறைமலை அடிகள் அவர்களும், திரு. தேவநேயப் பாவாணர் அவர்களும் இதனைச் செயல்முறையில் நன்றாகக் காட்டியுள்ளார்கள். தமிழ்ச் சொற்கள் இருப்பவும், ஒரு வர் வடமொழிச் சொற்களைக் கடன் வாங்குகின்றார் என் றால், அஃது அவர் வடமொழியின்மாட்டு வைக்கின்ற விருப்பத்தைக் காட்டுகின்றதேயன்றித் தமிழ் மொழியின் குறைபாட்டைக் காட்டுவதன்று. நல்ல, இனிய, அரிய தமிழ்ச் சொற்கள் பல்வேறு பொருள்களைக் குறிக்கத் தமிழ் மொழியில் இருக்கின்ற காரணம்பற்றி ஒருவர் வட மொழியினின்று தமிழ்மொழி பிறந்தது அன்று எனத் துணிவோடு கூறுதல் கூடும். இக் கருத்தினை வற்புறுத்து தற்கு நாட்டில் சிலர் கூசுகின்றனர். அது வருந்தத்தக்கது. தமிழர் தம்முள் உயர்நிலையில் உள்ளவர்களும், பெரிய அலுவல்களிலுள்ளவர்களும், பெருஞ் செல்வர்களும் இக்

கருத்தினை உளத்தில் பதித்துக்கொண்டு தாமும் கூறுதற்குத் தயங்காமல் வெளிவருவார்களானல், அதுவே தமிழ் ஓசை உரிய வகையில் எங்கும் பரவுதற்கு அடிகோலியது ஆகும்.

# எமது வெளியீடுகள்

**விந்தன்**

| | | |
|---|---|---|
| *கஞ்சியும் காதலும்* | நாவல் | *3 0 0* |
| *விந்தன் கதைகள்* | கதைகள் | *3 0 0* |
| *குட்டிக் கதைகள் I* | ,, | *1 0 0* |
| *பசிகோவிந்தம்* | புடை நூல் | *1 0 0* |

**அகிலன்**

| | | |
|---|---|---|
| *அமராவதிக் கரையில்* | கதைகள் | *1 0 0* |
| *தாகம்* | நாவல் | *1 4 0* |
| *கலையும் வயிறும்* | கட்டுரைகள் | *1 8 0* |

**மாயாவி**

| | | |
|---|---|---|
| *அகதி* | கதைகள் | *2 0 0* |
| *சலனம்* | ,, | *2 0 0* |

**சுகி**

| | | |
|---|---|---|
| *வாழ்க்கைப்புயல்* | நாவல் | *1 0 0* |

**பூவை - எஸ். ஆறுமுகம்**

| | | |
|---|---|---|
| *காதல் மாயை* | கதைகள் | *1 0 0* |

**எல்லார்வி**

| | | |
|---|---|---|
| *முல்லை* | நாவல் | *1 8 0* |

